# முன்னுரை

[திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ., எம்.எல்., அவர்கள் எழுதியது]

உலகெலாம் உய்வான் பொதுமறை வகுத்த ஆசிரியர் திருவள்ளுவனாரது அளப்பரிய மாண்பினைப் பாவலரும் நாவலரும் கற்றோரும் மற்றோரும் இந்நாள்வரை பொது வகையாற் பலபடச் சீராட்டிப் பாராட்டிப் போந்தனர். ஆசிரியரது நூலின் பிண்டப் பொருளை நுணுகி ஆய்ந்து அதன் சொற்பொருள் நயங்களை யாவருக்கும் எளிதில் விளங்கும் வண்ணம் தெள்ளென வகுத்தோதி ஊக்க மூட்டும் செவ்விய உரைநடை நூல் ஒன்று இல்லாத குறையை நிறைவு செய்த பெரும்புலவர் இத்திருவள்ளுவர் நூல்நயம் எழுதிய திருவாளர் சேதுப்பிள்ளையே யாவர்.

இக்கலைவாணர் தமது அரிய ஆராய்ச்சிப் பொருளை எண் வகையாகப் பகுத்துக்கொண்டு கற்போருக்கு மன வெழுச்சி உண்டாதற் பொருட்டு முதற்கண் ஆசிரியரது பெருமையை எடுத்துரைத்தனர். ஆசிரியரது திருப்பெயர் தொல்காப்பியர், சேக்கிழார் முதலிய பேராசிரியரது திரு நாமம் போலவே குடிப்பிறப்பின் பெயராக அவரது மரபின் வந்தது என்பதனை நயம் பெறத் திறமிக விளக்கினமை யாவரும் வியக்கக் கூடியது. ஆசிரியர் பொருள் மொழி களைப் பொன்னேபோற் போற்றும் புலவர் வழக்கை எடுத் துக் காட்டு முறையால் இவ்வுரை நூலார் நன்கு புலப்படுத் தியது எமது உள்ளத்திற்குப் பெருமகிழ்வு தருகின்றது. திருக்குறளின் மாசிலா மாண்பினைச் சாத்தனார் கதையால்

தெளிவு பெற வைத்தனர். இவ்வாறு நூல் மாண்பிற்கு முதல் வியாசத்தே தோற்றுவாய் செய்யப்பட்டது.

திருவள்ளுவர் பெருநூலானது எல்லாச் சமயங்களுக்கும் எல்லாக் காலத்திற்கும் எல்லாச் சாதியாருக்கும் பொதுவாயதோர் அரிய சீரிய விழுமிய நூல் என்பதனை இவ்வுரை நூலார் திட நுட்பமிக மேற்கோள்களால் தொகுத்துக் காட்டிய செம்மை கற்போர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் திறத்தது.

முப்பாலுள்ளும் முதற்பாலாய் உறுதிப் பொருள் நான்கிற்கும் மூலமாயுள்ள அறத்தின் சிறப்பினை ஆசிரியர் விளக்கிய முறைமையை ஆய்ந்து தெளியின், மனமொழி மெய்களால் உடன்பாட்டானும் எதிர்மறையானும் குற்ற மற ஒழுகுதலே அறத்தின் நயமாமென்று உள்ளங்கை நெல்லிபோல் முதற்கண் இனிது விளக்கப்பட்டது. அத் தகைய அறச்சால்பு இல்வாழ்க்கைக்கும் துறவற நிலைக்கும் அடிப்படை யென்பது இனிது எடுத்துக்காட்டப் பெற்றது. இருநெறி ஒப்பினையும் இவ்வியாச முடிவில் இந்நூலார் அறுதியிட் டுரைத்தனர்.

பின்னர், பண்டைத் தமிழரசியின் முறைமையைத் திருவள்ளுவனார் வகுத்தோதும் செம்மை ஆய்வான் றொடங்கி பண்டைத் தமிழர்களது அறிவுசான்ற அரசியற் கொள்கைச் சிறப்பையும், தற்காலத்து அரசவைகள் போன்ற பேரவைகள் ‘ஐம்பெருங்குழு,’ ‘எண்பேராயம்’ என்னும் இருபெரும் பிரிவுள் அமைந்து தோன்றிய நயத்தினையும், அக்காலத்து வணிகம் இற்றை நாட்போலவே யாண்டும் பரவிப் பெருவளனோடு திகழ்ந்த சீர்மையையும், நாட்டு மாந்தர் மானம், கல்வி, சான்றாண்மை, முயற்சியுடைமை

முதலியவற்றுல் தழைத்தோங்கிய தகைசான்ற சிறப்பை யும் அவருள் வேளாளர் தலைநின்ற செய்தியையும் கூறி, 'நாட்டின் பெருமை நற்குடிகளா லாவது,' என்பதனை இவ் வுரை நூலார் இவ்வியாசத்தில் வற்புறுத்தி யுள்ளார்.

இனி, இந்நூலார், இன்ப இயலில் அதன் மெய்ப்பண் பினைப் பண்டை நான்முறையால் முதற்கண் இனிது விளக் கினர். பின் களவியல் கற்பியல் என்னும் துறைகளைத் தெளிவுபெறக் கோவை செய்தமைத்து, சிற்றின்ப நெறி நின்று பேரின்பவழிச் செல்லும் பெற்றியினைத் தோல்காப் பியனார் கட்டளைக் கிணங்க இறுதியிற் கூறி வியாசத்தை முடித்துக் காட்டியது யாவருக்கும் இன்பம் பயப்பதாகும்.

இதுகாறும் திருவள்ளுவர் நூலின் பொருள் நயங்களைத் தொகுத்து வகுத்தோதிய இவ்வுரை நூலார், ஆசிரியரது சொற் பண்பினைத் திட்பமுற விளக்குவான் திருக்குறளின் உவமைத் திறத்தை ஆராய்ச்சி செய்துள்ளார். உவமை இயல்பினை முதற்கண் தெளிவு படுத்திப் பின்னர் ஆசிரியர் சாதாரணப் பொருள் யாவற்றையும் மிக்க நயந்தோன்றும் வண்ணம் உவமையாக எவ்வாறு வழங்குகின்றுர் என்பதை யும், ஆசிரியர் இயற்கைப் பொருள் ஆராய்ச்சி நுணுக்கத் தில் எவ்வாறு இணையில்லாதவர் என்பதையும் செவ்விய உதா ரணங்களால் யாவருடைய உள்ளத்திலும் பசுமரத்தாணி போல் விளக்கும் இவ்வியாச நூலாரது வன்மை ஒப்பின்றி விளங்குகின்றது.

இந் நூலானது 'திருவள்ளுவரும் பரிமேலழகரும்' என்ற தலைப்பு வியாசத்துடன் முற்றுப் பெறுகின்றது. அவ் வியாசத்தே திருக்குறளுக்குள்ள உரைகள் பத்தனுள்ளும் பரிமேலழகரது உரை மிக்க சிறப்புடைய தென்பதை முதற்

கண் குறிப்பித்து அதன் ஆசுகளையும் உண்மை ஆராயும் அளவையால் நயமாகத் தெளிவு படுத்திக் காட்டிய இந் நூலாசிரியரது நுண்ணறிவின் பெற்றி கற்றோருள்ளம் கனி வித்துப் பெரும்பயன் நல்குவதாகும். ஒரு சார்பு பற்றி 'மக்கட்பேறு' என்பதனைப் 'புதல்வரைப் பெறுதல்' என் னும் சொற்றொடரால் மறைத்தும், அறிவறிந்த மக்கள் என் பதற்கு ஆசிரியர் கொள்கைக்கு மாறாக 'ஆடவர்' என்று வலிந்து பொருள் கொண்டும், வடநூல் மதம் பற்றியே திருக்குறளுக்கு உரை இயற்றிப் பண்டைத் தமிழ் நூல் முறையை உலகறியா வண்ணம் மறைவு செய்தும், தம் கொள்கைக்கு இயையுமாறு பொதுப் பொருள் கொள்ள வேண்டுமிடத்துச் சிறப்புப் பொருள் கொண்டும், இலக்கண அமைதியின் பொருட்டு ஆசிரியர் உட்கிடைக்கு மாறாகிய பொருள் கொண்டும் இவ்வாறு பல்வகையாக நூலாசிரிய ரது திருவுள்ளக் கருத்திற்கும் பண்டைத் தமிழ் வழக்கிற் கும் முரணான பொருள் விளக்கினமையால் பரிமேலழகர் உரை முற்றிலும் நன்றென்று கூற வொண்ணாது என்பதனை இவ்வுரை நூலார் நடுநிலையாகச் சுட்டிப் போந்தனர்.

இங்ஙனம் திருக்குறட் பெருநூலை நன்கு கற்றாய்ந் துணர விரும்பும் மாணவர் யாவருக்கும் அந்நூற் சொற் பொருள் வளப் பண்டசாலைக்கு நயமிக்கதோர் திறவுகோ லாக இவ்வுரைநடைச் செந்தமிழ்ச் சீரிய நூலை இயற்றிய தமிழ் வாணர்க்குத் தமிழுலகு என்றும் கடப்பாடுடையது.

# பொருளடக்கம்

திருச்சிற்றம்பலம்

---

# திருவள்ளுவர் நூல்நயம்

## க. திருவள்ளுவர் பெருமை

பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ! பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ?

*ஆசிரியர் பிறப்பு முதலிய வரலாறு*

தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் பிறந்த இடமும், வளர்ந்த வகையும், அவர் பெற்றோரது குலமும், நலமும், அவர் கற்ற கல்வியும் மற்றெல்லாம் தெளிவாகத் தெரியவொண்ணாத புதை பொருள்களாயிருக்கின்றன. உலகோர் செய்த உயர் தவப் பயனாய்த் தோன்றிய புலவர் பெருமானது உண்மை வரலாறு யாதும் தெளிவாய்த் தெரிய இயலாமை பற்றித் தமிழ் மெய்யன்பர் உள்ளம் பெரிதும் கவல்கின்றது. சென்னையிலுள்ள திருமயிலையில் நாயனார் பிறந்து வளர்ந்தாரென்பதற்கு அங்குச் சில ஆண்டுகளுக்கு முன்னர் அமைக்கப்பெற்றுள்ள அவரது ஆலயத்தைத் தவிர வேறு சான்று கிடைப்பது அரிதாயிருக்கின்றது. ஆசிரியரது தாய் தந்தையர் பெயர் ஆதி பகவன் என்பது வழிமுறையாக வந்த பழங்கதையாலும், ஆதிபகவன் என்னும் சொற்றொடர் ஆசிரியர் நூலின் ஆதிக்குறளில் அமைந்துள்ளதாலும் அறியப்படுவதல்லாமல் வேறு சான்றுகளால் ஆராய்வதற்கிடமில்லை.

இத்தகைய பெரும் புலவர் வரலாறெல்லாம் அவர் தாமே எழுதிய நூல்களிற் காணப்படும் அகச் சான்றுகளாலும், அல்லது அப்பெரியார் காலத்தில் வாழ்ந்த புலவர்கள் எழுதிவைத்த புறச்சான்றுகளாலுமே அறியக் கூடியனவாகும். ஆனால் நாயனார் எழுதிய நூலின்கண் அவரது அறிவின் பெருமையும் அருளின் திறமும் விளங்குவனவேயன்றிச் சரித்திரக் குறிப்புக்கள் அதிகமாக அகப்படவில்லை. அவர்காலத் திருந்து தமிழாராய்ந்த பெரும் புலவரும் அவர் நூலின் திறத்தினையும் நயத்தினையும் வியந்து பேசுகின்றனரே யன்றி ஆசிரியரது பிறப்பு முதலிய வரலாற்றைப் பற்றிப் பெரும்பாலும் எழுதிவைத்தாரல்லர்.

ஆயினும், திருவள்ளுவர் என்னும் பெயர் ஆசிரியர் பிறந்த அல்லது வளர்ந்த குலப் பெயரென்று கொள்ள இடமிருக்கின்றது. தமிழகத்திலுள்ள வள்ளுவ குலத்தில் பிறந்தாயினும் அன்றி வளர்ந்தாயினும் தெள்ளிய அறிவு பெற்ற இப்பெரியாரது இயற்பெயர் மங்கிக் குலப் பெயரே பிற்காலத்தில் விளங்கி வழங்குவதாயிற்று என்று கொள்வது பொருத்தமாகத் தோன்றுகின்றது. இவ்வுண்மையைக் கடைச் சங்கத்திலிருந்து தமிழாராய்ந்த மாமூலனார் என்னும் புலவர்,

வள்ளுவர் என்பது குலப்பெயரே

> அறம்பொருள் இன்பம் வீடென்னும் நான்கின்
> திறந்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
> வள்ளுவன் என்பானோர் பேதை யவன்வாய்ச்சொல்
> கொள்ளார் அறிவுடை யார்

என்று கூறியுள்ளார். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்களின் திறந்தெரிந்து தெளிவாக

## திருவள்ளுவர் பெருமை

எடுத்துரைத்த திருந்திய தெய்வத்தன்மை வாய்ந்த புல வரை மறந்தேனும் வள்ளுவன் என்று அழைப்பவன் அறிவற்றவன், அவ்வறிவற்றவன் சொல்லும் சொற்களை அறிவுடையார் ஒரு சிறிதும் கொள்ள மாட்டார்கள் என்று மாமூலனார் கூறுவதால் நற்றமிழ் வல்ல நம் புலவர் பெரு மானைப் பிறந்த குலத்தால் அளவிட் டறிபவன் பேதை யென்றும்,

> களர்நிலத்துப் பிறந்த உப்பினைச் சான்றோர்
> விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்
> கடைநிலத்தோ ராயினும் கற்றுணர்ந் தோரைத்
> தலைநிலத்து வைக்கப் படும்

என்னும் உண்மைபற்றி இழிந்த குலத்திற் பிறந்தும் விழுமிய அறிவுபெற்று விளங்கிய புலவரை 'வள்ளுவன்' என்று கூறு தல் வழுவா மென்றும் நன்கு நிறுவப்படுகின்றது.

**காப்பியக்குடி தொல்காப்பியர்**

இனி, இவ்வாறு ஒருசாதியின் அல்லது ஒரு குலத்தின் பெயரை அமைத்து ஓர் ஆசிரியர் பெயர் வழங்குவதற்கு வேறு நூல் வழக்கிலேனும் உலகவழக்கி லேனும் சான்று உண்டோ என்று வினு நிகழ்த்தலாம். உலகவழக்கில் ஒரு சிறு மரபில் பெரும் புலமைபெற்ற ஆசிரியரை அம் மர பிற்குரிய சிறப்புப் பெயரால் நம் தமிழ் நாட்டில் வழங்கக் காண்கின்றோம். தமிழ் மொழியில் தலை சிறந்து விளங் கும் 'தொல்காப்பியம்' என்னும் இலக்கண நூல் செய்த பெரியாரது இயற்பெயர் மங்கி அவர் பிறந்த 'காப்பியக் குடி' என்னும் மரபுப் பெயரால் எழுந்த தொல்காப்பி யர் என்னும் பெயரே இப்பொழுது உலகில் வழங்கி வரு கின்றது.

இன்னும் அறுபான்மும்மை அடியார்கள் கதையை அழகிய தமிழில் 'பெரிய புராணம்' என்னும் பெரு

**சேக்கிழார்குடி சேக்கிழார்**

நூலாக அமைத்துத் தந்த சேக்கிழார் பெருமானது இயற்பெயர் 'அருள் மொழித் தேவர்' என்பதே யாயினும் அப் பெரியார் வேளாண்மரபில் சேக்கிழார் குடியில் பிறந்து அழியாப் புகழ்பெற்ற தன்மையால் அவரது இயற்பெயர் மங்கிக் குலப்பெயரே இப்பொழுது வழங்கி வருகின்றது. ஆகவே தொல்காப்பியர், சேக்கிழார் என்னும் குலத்தின் வழி வந்த பெயர்கள் போல, வள்ளுவர் என்னும் பெயரும் குலப்பெயராய் ஆசிரியர்க்கு அமைந்தது என்று கருது வதே அமைவுடையதாகும். இவ்வாறன்றித் திருவள்ளுவர் என்னும் பெயர் காரணப் பெயராய்த் 'திரு' வென்பது நாயனாரது உயர்வையும் 'வள்ளுவர்' என்பது அவரது வண்மையையும் விளக்கி நிற்கு மென்றும், விழுமிய

**வள்ளுவர் வண்மை யுடையார்**

உறுதிப் பொருள்களைத் தொகுத்து உலகத்தாருக்கு அருளிய காரணத்தால் நாயனார் அப்பெயர் பெற்றார் என்றும் உரைப்பாரு முளர்.

திருவள்ளுவநாயனாரது பெருமை அவர் காலத்தில் சங்கப் புலவராய்த் திகழ்ந்த பல பெருமக்கள் அளித்த சிறப்புப் பாக்களாலேயே நன்கு விளங்குகின்றது. இவ் வுலகில் புலவராய் வாழ்ந்த பெரியார் வரலாற்றை உற்று நோக்குமிடத்துப் பெரும்பாலும் புலவர்தம் பெருமை அவர் வாழ்நாள் முடிந்தபின்னர் நாடெங்கும் பிறங்குமே

**புலவரது புகழ்**

யன்றி அவர் வாழுங் காலத்தில் அவர் பெருமையை அறிபவர் ஒரு சிலரே யாவர் என்பது தெளிவாக விளங்கும். அவரது பூதவுடம்பு அழிந்த

பின்னரே, புகழுடம்பு தோன்றுவதாகும். இப்பொழுது மேல் நாடென்று சொல்லப்படுகிற ஆங்கில நாட்டில் பல பெரும் புலவர்கள் பிறந்த இடமும், இறந்த இடமும் தெரியாது. அவ்வாராய்ச்சியில் அளவிறந்த பொருளைச் செலவு செய்தலை நாம் கண்கூடாகக் காண்கின்றோம். ஆனால் நமது ஆசிரியர் தாம் வாழ்ந்த காலத்திலேயே புலவர் பாடும் புகழுடையவராய் விளங்கினா ரென்பது அவருக்குப் பெருஞ் சிறப்பேயாகும். இன்னும் அவர் காலத்திருந்த புலவர் எத்திறத்தவரென் றறிவோமானால் நமது பெருநாவலரின் பெருமை சொல்லாமலே விளங்கும். அறிவும் புலமையும் தமிழ் நாட்டில் அஃகி நலிந்திருந்த காலத்தில் நம் புலவர்பெருமான் தோன்றினவரல்லர். தமிழ் மொழிக்கு என்றும் அழியாப் பெரும்புகழ் அளித்த பெருமக்கள் வாழ்ந்திருந்த சங்க காலத்தே நம் புலவரும் தோன்றினர். யாவர்க்கும் முன்னவனே முன்னின்று நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே எனக் கூறிய மனத் திண்மையும், கலைபயில் தெளிவும், கட்டுரை வன்மையும் அமைந்து 'இறையனார் அகப் பொருள்' என்னும் அரிய நூலுக்கு அழகிய உரை கண்ட நற்றமிழ்ப் புலவர் நக்கீரரும் இருந்தனர். நயங்கள் பலவும் கெழுமித் திகழும் 'மணிமேகலை' யென்னும் விழுமிய தனி நூல் செய்த தண்டமிழ்ச் சாத்தனாரும் இருந்தனர்.

திருவள்ளுவர் காலத் திருந்த புலவர்

குழலும் யாழும் அமிழ்தும் குழைத்தன்ன அழகிய தமிழால், செந்தமிழ்ச் செல்வர் போற்றி மகிழும் சிலப்பதிகாரம் செய்த சேரர்சிகாமணியும் இருந்தனர். இன்னும், பொய்யறியாக் கபிலரொடு பரணராதி புலவர்கள் நாற்பத்தொன்பதின்மர் நற்றமிழ் வல்லாராய்க் கழகத்தில் வீற்றிருந்தனர். சுருங்

கச் சொல்லின் அக்காலத்தில் வாழ்ந்த புலவர்க ளெல்லாம் தமிழ் மொழியில் தலைசிறந்த அறிவு அமையப் பெற்றவரா யிருந்தனர் என்பது தமிழ் மொழியின் வரலாற்றைச் சிறிதுணர்ந்தோரும் அறிவர். உண்மையாக அக்காலத்தில் தமிழ் மொழியானது மிகச் செம்மையும், சீர்மையும், வண்மையும் உற்றுக் கலைபயில் கழகத்தில் ஒப்புயர்வற்று வீற்றிருந்தது. ஆகவே செயற்கரிய பெரு நூல்கள் செய்த பெருமக்கள் வாழ்ந்திருந்த காலத்தில் அவர்களுள் தலை சிறந்த புலவராய்த் திருவள்ளுவர் திகழ்ந்தன ரென்பது தெளிவாகும்.

திருக்குறளுக்குப் பின்னர் எழுந்த பெரு நூல்களி லெல்லாம் அதன் மணமும் நலமும் விளங்கக் காண்கின் றோம். திருவள்ளுவநாயனார் உடனிருந்து தமிழறிந்த அருங்கலைப் புலவரும் திருக்குறளின் சொல்லையும், பொருளையும் தமது நூலில் அமைத்து அழகு செய்வாராயி னர். இன்னும் இறைவனை நினைந்து நெஞ்சம் குழைந்து, பத்திமையாற் பாமாலை பாடிய பெருமக்களும், பெரும் பனுவல் செய்த அருந் தமிழ்ப் புலவரும், திருக்குறளில் கண்ட உண்மைகளை ஆசிரியர் சொற்களாலேயே அமைத் தும், அன்றித் தமது நூற்போக்குக் கிணங்கப் பதங்களை

**திருக்குறளைப் புலவர் போற்றும் முறை**

மாற்றி யமைத்தும் போற்றியிருக்கும் அழகினை ஆராய்ந்தறிவது தமிழ் நயந் தெரி புலவர்க்கு நல் விருந்தாகும். தம் முள் மாறுபட்டுக் கலாம் விளைக்கும் சமயத் தலைவர் பலரும் திருக்குறளைத் தம் நூல் நுதலிய உண்மைக்கு மேற்கோளாக எடுத்தமைக்கும் தன்மை நாயனா ரது பொது நிலைமைக்கும், பெரும் புலமைக்கும் என்று மழி யாச் சான்று பகர்வதாகும். 'மணிமேகலை' யென்னும்

# திருவள்ளுவர் பெருமை

சீரிய நூல் செய்த சீத்தலைச்சாத்தனார் திருவள்ளுவர் உட னிருந்து தமிழறிந்த பெரும் புலவரே யாயினும், சமயத்தில் பௌத்த சமயத்தைத் தழுவிய பெரியாரேயாயினும், தமது நூலில் பல விடங்களில் ஆசிரியர் மொழி பொருளே யன்றி அவர் சொற்களையும் பொன்னேபோற் போற்றி அமைத் துள்ள அழகு பெரிதும் கண்டு மகிழ்தற் குரியதாகும். ஆசிரி யர் திருவள்ளுவனார் ‘வாழ்க்கைத் துணை நலம்’ என்னும் அதிகாரத்தில் அருளிய,

> தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யு மழை

மணிமேகலை

என்னும் அருமைத் திருக்குறளை மணி மேகலை ஆசிரியர்,

> தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுமவள்
> பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்னப்
> பொய்யில் புலவன் பொருளுரை தேராய்

என்று நாயனாரது பதங்களையே பொதிந்து அமைத்து அழகு செய்துள்ளார். திருக்குறளை எழுதிய நாயனாரைப் ‘பொய் யில் புலவன்’ என்னும் அவரது திருவாக்கைப் ‘பொரு

சமய நூல் போற்று முறை

ளுரை’ என்னும் சாத்தனார் போற்றிய பான்மை அறிந்து மகிழ்தற் குரிய தாகும். சமய நூல் அருளிய சைவ நன்மக்களும் வைணவ நன்மக்களும் நாயனார் குறளை நன் றாய் எடுத் தாளுகின்றார்கள்.

> தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
> வலைப்பட்டார் மற்றை யவர்

என்னும் திருக்குறளைச் சைவசமய சந்தானகுரவருள் ஒருவ ரான உமாபதிசிவம், தமது நெஞ்சுவிடுதூதில்

—தேறுங்கால்

உன்னை யொழிய உறவில்லை யென்னுமது
தன்னை யறிவைத் தனியறிவை—முன்னம்
தலைப்பட்டார் தீரத்துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவ ரென்று—நிலைத்தமிழின்
தெய்வப் புலமைத் திருவள்ளுவர் உரைத்த
மெய்வைத்த சொல்லை விரும்பாமல்

[நெஞ்சு விடு தூது]

என்று அருளிச் செய்திருக்கின்றார். திருவள்ளுவரைத் ‘தெய்வப் புலவர்’ என்றும் அவர் உரையை ‘மெய்வைத்த சொல்’ என்றும், அவரியம்பிய என்றுமுள தென்தமிழை, மூவாச் சாவா முதுமொழியை, ‘நிலைத்தமிழ்’ என்றும் அருளிய ஆன்றோர் மெய்யுரை ஆராய்தற் குரியதாகும். இன்னும்,

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்

என்னும் திருக்குறளை,

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை யென்றமையால்
வேண்டு மஃதே அஃதொன்றும்—வேண்டினது
வேண்டாமை வேண்டவரு மென்றமையால் வேண்டி
வேண்டாமை வேண்டுமவன் பால்

[திருக்களிற்றுப் படியார் ௫௪]

என்று திருக்களிற்றுப்படியார் என்னும் சைவ சமய நூல் இனிது எடுத்துரைக்கின்றது. இன்னும்,

பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு

என்னும் திருக்குறளைத் திருவாய்மொழி பாடிய வைணவப் பெரியார்,

# திருவள்ளுவர் பெருமை

அற்றது பற்றெனில்
திருவாய் உற்றது வீடுயிர்
மொழி செற்றது மன்னுறில்
அற்றிறை பற்றே

என்று அமைத் தருளினார்.

இனிச் சிங்காரரசம் கொழிக்கும் சிந்தாமணி யாசிரியரும் திருக்குறளைப் பொன்போற் போற்றித் தமது நூலை அழகு செய்கின்றார்,

வேட்ட பொழுதின் அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள்

என்னும் குறளை,

வேட்டார்க்கு வேட்டனவே போன்றினிய
சிந்தாமணி வேய்யென்றோள்
பூட்டார் சிலைநுதலாள் புல்லா தொழியேனே

என்று சிந்தாமணி போற்றுகின்றது. இன்னும்,

பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது

என்னும் குறளில் அமைந்த உவமையையும் பொருளையும் சிந்தாமணியாசிரியர்,

இடத்தொடு பொழுதும் நாடி எவ்வினைக் கண்ணு மஞ்சார்
மடப்படலின்றிச் சூழும் மதிவலார்க் கரிய துண்டோ
தடத்திடைக் காக்கை யொன்றே ஆயிரங்கோடி கூகை
இடத்திடை யழுங்கச் சென்றாங் கின்னுயிர் செகுத்ததன்றே

என்று போற்றி அழகு செய்கின்றார்.

இனிக் கவிக் காசாகிய கம்பர் பெருமானும் பல இடங்களில் நாயனார் நூலில் அமைந்த அரிய கருத்துக்களை

அவர் சொற்களாலேயே அமைத்தும், வேறு பலவிடங்களில் மொழிபெயர்த்து அமைத்தும், பொருள் விளக்கும் பெருமை கம்பர் கவித்திற முணர்ந்தார் பலகாலும் கண்டு களித்த உண்மைகளாம்.

கம்பர்

கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉ மின்றிக் கெடும்

என்னும் திருக்குறளை,

எடுத்து ஒருவருக் கொருவர் ஈவதனின் முன்னே
தடுப்பது நினக்கழ கிதோ தகைவில் வெள்ளி
கொடுப்பது விலக்கு கொடியோய் உனது சுற்றம்
உடுப்பதுவும் உண்பதுவும் இன்றி விடுகின்றாய்

என்று கம்பர் பெருமான் எடுத்தாளும் தன்மை கண்டு மகிழ்வதற் குரியதாகும். இன்னும்,

நல்லா றெனினும் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று

என்னும் குறளையே மொழி பெயர்த்து,

வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ என்சில இன்னுயி ரேனும்
கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால்

என்று கம்பர் பெருமான் அமைத் தருளினர். சுருங்கச் சொல்லுமிடத்து, திருவள்ளுவனார் காலத்திற்குப் பின்னர் எழுந்த பெரு நூல்களிலெல்லாம் திருக்குறளின் தெள்ளிய மணமும் திருந்திய பண்பும் விளங்கக் காண்கின்றோம். இத்தகைய உயரிய பெருமை நம் தமிழ் நாட்டில்

ஆசிரியர் திருவள்ளுவனார்க்கு அமைந்ததே யன்றி வேறெவர்க்கும் அமைந்ததாகத் தோன்றவில்லை. மிகப் பழைய கால முதலே நம் தமிழ் நாடு பல வகைப்பட்ட சமயப் போர்கள் நிகழ்வதற்கு நிலைக்களமாக நின்றதாகும். இப் பெற்றித்தாய சமயப் போரில் பல பெரும் புலவர்கள் தம் வாழ்நாளை வறிதே கழித்தது மன்றி ஒரு சமயச் சார்பாய் எழுந்த நூலை மற்றைய சமயத்தவர்கள் படிப்பதும் போற்றுவதும் இல்லை; ஒரோவழி இகழ்ந்தும் உரைப்பர்.

*தமிழ்நாட்டில் நிகழ்ந்த சமயப் போர்*

பெரும்பாலும் சமண சமயத்திற்கும் சைவ சமயத்திற்கும் தமிழ் நாட்டில் இடையறுக் கடும்போர் நிகழ்ந்துள்ள தென்பது சரித்திர உண்மையாகும். இதற்கு வேறு சான்று வேண்டுவதில்லை. தமிழ் நயம் கொழிக்கும் சிந்தாமணியைச் சைவ சமயப் பெரியாராகிய உமாபதிசிவம்,

*சைவமும் வைணமும்*

கலகமிடும் அமண்முரட்டுக் கையர் பொய்யே
கட்டிநடத்திய சிந்தாமணியை மெய்யென்று
உலகிலுளோர் சிலர்கற்று நெற்குத் துண்ணுது
உமிக்குத்திக் கைவருந்திக் கறவைநிற்க
மலடுகறந் துளந்தளர்ந்து குளிர்பூஞ் சோலை
வழியிருக்கக் குழியில்விழுந் தளறுபாய்ந்து
விலைதருமென் கரும்பிருக்க இரும்பை மென்று
விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்தொந்தார்

என்று கூறுகின்ற செய்யுளே, அவ்விரு சமயத்தார்க்கும் அக்காலத்திலிருந்த மனப்பான்மைக்குப் போதிய சான்றாகும். இவ்வாறு தம்முள் பெரிதும் வேறுபட்டுச் சொற் போர் விளைத்த ஆசிரியர் அனைவரும் திருவள்ளுவனார் திருக்குறளைத்

தலைசிறந்த நூல் என்று பாராட்டித் தம் நூலில் எடுத்தா ளும் தன்மை ஒன்றே நாயனர் புகழை உலகம் உள்ளளவும் நிலைநிறுத்துவதாகும்.

திருக்குறளின்கண் அமைந்துள்ள சொல்லழகும் பொருள் ஆழமும், அந்நூலை ஐயந் திரிபற ஓதி யுணர்ந்த பெரியார் நன்கு அறிவார்கள். இந் நூல் தமிழ்க் கழகத் தில் அரங்கேற்றப்பெற்ற காலத்து, சங்கப் பலகை ஏனைய நூல்களைப் புறத்தே தள்ளிவிட்டு, திருக்குறள் ஒன்றையே தன்மீது கொண்டு திகழ்ந்த ஓர் புதுமையைத் தமிழ் நாட்டுப் பழங்கதை பாராட்டிப் பேசுகின்றது. சங்கப் பலகை ஏனைய நூல்களுக்கு இடந்தாவில்லை யென்று

திருக்குறளும் சங்கப் பலகையும்

வழங்கும் இக்கதையில் ஓர் உண்மை யமைந்திருக்கக் காணலாம். தனக் கொப்பாய நூல் வேறொன்றின்றி, தனிவளம் அமைந்த தாய், தன்னேரிலாத தனி நூலாய் இந்நூல் விளங்கிற் றென்பது அக்கதையால் நன்கு அறியப்படுகின்றது. அக்காலத்திய புலவரும் அதனை அவ்வாறே வியந்து பாடி யிருக்கின்றார்கள். சங்கப் புலவருள் ஒருவரான பரணர் என்பார், சிறப்புப் பாயிரம் கொடுத்த காலத்து ஒரு சிறு உவமையால் திருக்குறளின் பெருமையை எடுத்துரைத் தார். முன்னொரு காலத்தில் திருமால் குறுகிய வடிவ முடைய வாமனனாய்த் தோன்றி, பின் நெடுமாலாக ஓங்கி உயர்ந்து தன் இரண்டடியால் உலக முழுதும் ஒருங்கே

திருமாலும் வள்ளுவரும்

யளந்த காட்சி போல, அறிவினால் மேம் பட்ட ஆசிரியர் வள்ளுவரும் தம் குறு கிய குறளடி யிரண்டால் மக்கள் கருதும் கருத்தை யெல்லாம் அளந்துவிட்டாரென்று உண்மை கூறு கின்றார்.

# திருவள்ளுவர் பெருமை

மாலும் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால்
ஞால முழுதும் நயந்தளந்தான்—வாலறிவன்
வள்ளுவரும் தங்குறள்வெண் பாவடியால் வையத்தார்
உள்ளுவவெல் லாமளந்தார் ஓர்ந்து

என்பது பரணர் பாடிய பாட்டாகும். திருமால் வடிவத்தில் குறுகித் தோன்றினன். அதுபோலவே திருக்குறளும் இரண்டடிகளில் குறுகித் தோன்றுகின்றது. குறுகிய வாமன வடிவத்தில் அடங்கி நின்ற பொருளே நிமிர்ந்து உலகை அளந்தாற்போல, நயனர் குறளில் அடங்கி நின்ற பொருளே கருத்துலகத்தை யெல்லாம் அளந்தது. இன்னும் மதுரைத் தமிழ் நாகனர் என்னும் மற்றொரு புலவர்

எல்லாப் பொருளும் இதன்பா லுள ; இதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லையால்

என்று உண்மையை உறுதியாகக் கூறுகின்றார்.

வடமொழியில் விழுமிய கருத்துக்களைத் தன்னகத்தே கொண்டு விளங்கும் வேதத்தைப் போல, உயரிய உண்மைகளை யெல்லாம் தன்னகத்தே கொண்டு தமிழ் மொழியில் விளங்குகின்ற தன்மையால், திருக்குறள் தமிழ் மறை யென்று பெயர் பெற்ற தென்பர். நிறைமொழியாளராய் வினையின் நீங்கி விளங்கிய அறிவுடையாராய்த் திகழ்ந்த

**வடமொழி மறையும், தமிழ் மறையும்**

திருவள்ளுவர் செய்த நூல் மறைமொழி யென்பதற்கு யாதும் ஐயமில்லை. ஆரியத்தோடு அருந் தமிழை ஒப்பிட்டு நோக்கிய வண்ணக்கஞ் சாத்தனர் என்னும் தமிழ்ப் புலவரும், வடமொழி வேதத்திற்கும் இதற்குமே நேர்மை கூறுகின்றார்.

# திருவள்ளுவர் நூல்நயம்

ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந்து இதனின்இது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதால்—ஆரியம்
வேத முடைத்து தமிழ்திரு வள்ளுவனார்
ஓது குறள்பா வுடைத்து

என்று சாத்தனார் கூறுவதால் மேற்கூறிய உண்மை தெள்ளி தில் விளங்கும்.

இந்நூலைப் பற்றிய ஒரு கதை நம் தமிழ் நாட்டில் பல காலமாகப் பயின்று வருகின்றது. சங்கப் புலவர்களில் சீத்தலைச் சாத்தனார் என்னும் ஒரு பெரும் புலவர் இருந்தா ரென்றும், அப்பெரியாரது இயற்பெயர் சாத்தனார் என் றும், சீத்தலை யென்னும் அடைமொழி பிற்காலத்தில் ஒரு காரணம் பற்றி அவர்க்கு அமைந்த தென்றும் கருதப்படுகின்றது. கூல வாணிகன் சாத்தனார் என்பது இவரது மற்றைய பெயராகும். எண்வகைச் சரக்குகளில் வியாபா ரம் செய்த காரணத்தால் இப்பெரியார் கூலவாணிகன் சாத்தனார் என்று சிறப்புப்பெயர் பெற்றார்போலும். ஆயி னும் சீத்தலைச் சாத்தனார் என்று அவர்க்குப் பெயரமைந்த காரணம் பெரியதோர் வியப்பாக விளங்குகின்றது. தமிழ் மொழியின்பால் திருந்திய பற்றுடையாராய், அதன் நயம் உணர்ந்த நல்லாராய் வீற்றிருந்த இப்புலவர் பெருமான், கழகத்தின்கண் தமிழாராயுங்கால், சொற்பிழை பொருட் பிழை நிறைந்த நூல்களைக் காணுந்தோறும், உளம் நொந்து, தமிழ் மொழிக்கு உற்ற இழுக்கைத் தனக்கு வந்ததாக எண்ணி, தம் கையில் தாங்கிய கூரிய எழுத்தாணி யால் தலையில் குத்திக்கொள்வா ரென்றும், அதனால் அவர் தலையானது பெரிதும் புண்பட்டு எப்பொழுதும் குருதியை வடித்துக் கொண்டே யிருந்தாரென்றும், அக்காரணத்தால்

சாத்தனாரைப் பற்றிய கதை

அவர் சீத்தலைச் சாத்தனாரென்று பெயர் பெற்றாரென்றும் பழங்கதை கூறுகின்றது. இத்தகைய சாத்தனார் தலைக் குத்தானது திருவள்ளுவனார் தம் நூலை அரங்கேற்றிய காலத்து, அறவே நீங்கிப் போயிற்று. சொல் நயமும், பொருள் நயமும் வாய்ந்த வள்ளுவனார் நூலைக் கண்ட காலத்து, கூரிய எழுத்தாணியும் கூலவாணிகன் சாத்தனார் தலையை மறந்தது. சாத்தனார் புண்பட்ட தலையும் பண்பட்டது. இவ்வுண்மையை அக்காலத்துப் புலவரான மருத்துவன் தாமோதரனார்,

சாத்தனார் தலைக் குத்து

> சீந்திநீர்க் கண்டம் தெறிசுக்குத் தேன்அளாய்
> மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில்—காந்தி
> மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலால்
> தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு

என்று இப்பழங்கதையைப் பொதிந்து அழகிய ஓர் உவமை யமைத்துப் போந்தார். நம் தமிழ்நாட்டிலுள்ள சீந்திக் கொடியின் பாலும், சுக்கின் பாலும், தேன் பாலும் ஆகிய இம்முப்பாலையும் கலந்து மோந்தால், தலைக்குத்து அல்லது மண்டையிடி விட்டுப்போம் என்பது பண்டை மருத்துவ நூலோர் கருத்தாகும். அதுபோல, அறத்துப்பால், பொருட்பால், இன்பப்பால் ஆகிய முப் பாலையும் கலந்த திருக்குறள் மணம் வீசியபொழுது, சாத்த னார் தலைக்குத்து உடனே ஒழிந்து போயிற்று என்று மருத்துவ நூலில் வல்ல தாமோதரனார் என்னும் புலவர் கூறுகின்றார். ஆகவே நாயனார் செய்த முப்பால்நூல் சீத் தலைச் சாத்தனார் தலைக்குத்துத் தீர்த்த தனிமருந்தாய் அமைந்தது.

முப்பால் தலைக் குத்துத் தீர்த்த கதை

# திருவள்ளுவர் நூல்நயம்

திருக்குறள் நூல் நயம்

திருக்குறள் ஓதற்கெளிதாய், சிந்தைக்கும் செவிக்கும் இன்பம் பயப்பதாய், நவில்தொறும் நயம் பெருகும் நூலாய் விளங்குகின்றது. ஏனைய பழந் தமிழ் நூல்களில் காணப்படுகின்ற கடுந் தமிழ்ப் பதங்களும், பத்துப்பாட்டு முதலிய நூல்களிலுள்ள இறுக்கமும் மயக்கமும் திருக்குறளில் இல்லை. நூல் முழுமையும் திருந்திய செப்பமும், செம்மையும் வாய்ந்து விளங்குகின்றது. நூலின்கண் அமைந்து விளங்கும் இயல்களும், அதிகாரங்களும், ஒன்றற்கொன்று இயைபுடையனவாய்ப் பல தொடர்களால் அமைந்த அருமணி வடம்போல் விளங்குகின்றன. ஏடுகளில் பலகால் அடங்கியிருந்த காரணத்தாலும் பிற காரணங்களாலும் சில அதிகாரங்களும் தலையீடுகளும் முறை பிறழ்ந்திருப்பனவாகத் தோன்றுகின்றன. ஆயினும் பெரும்பாலும் நூலின் போக்கை நோக்குமிடத்துச் செம்மையாய் வகுத்தமைத்த செப்பமுற்ற நூலாகவே திருக்குறள் விளங்குகின்றது. கற்றோர் யாவரும் அறியா அறிவு அமையப் பெற்றவராய், கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையராய் விழுமிய உண்மைகளை வினையின் நீங்கிய அறிவாற் கண்டு, உலகம் மகிழ்ந்துய்ய இனிது எடுத்துரைத்து நாயனார் அழியாத இன்பப்பேறெய்தினர்.



## உ. திருக்குறள்—பொதுநூல்

—நன்றெனை

எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி.

உலகில் உயர் தனிச் செம்மொழிகளாய் விளங்குகின்ற மொழிகளில் சொல்லழகும் பொருளழகும் நிறைந்த நூல்கள் விளங்கக் காண்கின்றோம். ஒரு மொழியைத் தம்மொழி யென்றும், தாய்மொழி யென்றும் போற்றுகின்ற மக்கள் தமது மொழியிலுள்ள நூல்கள் ஆழமும், அழகும் உடையனவென்று போற்றி மகிழ்வார்கள். உலகில் வாழுகின்ற ஒவ்வொரு நாட்டினரும் தம் நாடே உயர்ந்ததென்று அதன் நலம் பாராட்டலும், ஒவ்வொரு மொழியினுக் குரியவரும் தம் மொழியே உயரிய சீரிய மொழியெனக் கருதுதலும் இயற்கையேயாகும்.

திருக்குறள் உலகோர் போற்றும் உயரிய நூல்

ஆயினும் உண்மையாக ஒரு பால் சாராமல் நடு நிலையில் நின்று நூல் நயம் உணரும் புலவர்கள், சில நூல்களை உலகோரனைவரும் போற்றிப் படித்துப் பயனடைதற்குரிய உயரிய நூல்களெனத் தமது அறிவாற் கண்டு உறுதி கூறுகின்றார்கள். இத்தகைய உயரிய நூல்கள் எம் மொழியில் முதனூலாக எழுதப்பட்டு விளங்கினும், அவை அறிவுடைய மக்கள் அனைவருக்கும் பொது நூல்களே யென்பதில் யாதும் ஐயமில்லை. இப் பெற்றித்தாய ஒரு விழுமிய நூல் நம் தமிழ் நாடு செய்த தவப் பயனாய்த் தோன்றிய தெய்வப் புலமைத் திருவள்ளுவனாரால் அமிழ்தினு மினிய தமிழ் மொழியில் அருளப் பெற்றது.

திருக்குறள் பொது நூல்

திருக்குறள் என்னும் சீரிய நூல் சமயம், காலம், சாதி, இடம் முதலிய வரையறை யின்றி, எச் சமயத்தார்க்கும், எக்காலத்திற்கும் எச்சாதியினர்க்கும், எந்நாட்டினர்க்கும் பொதுவாய் உண்மைகளைத் தன்னகத்தே கொண்டு விளங்கும் தனி நூலாகத் திகழுகின்றது.

## சமயப் பொது நூல்

இவ்வுலகில் ஒன்றோடொன்று ஒவ்வாத பல வகைப் பட்ட சமயங்கள் பரவி யிருக்கப் பார்க்கின்றோம். இவற்றுள், பழைய காலத்தே தோன்றிய சமயங்கள் பலவாகும். பிற் காலத்தில் தோன்றிய மதங்கள் சிலவாகும். இவ்வாறு ஒன்றோ டொன்று ஒவ்வாத சமயங்கள் உலகில் பலவாய்க் காணப்படுகின்றன வாயினும், அவை மக்களது அறிவின் தன்மைக்கும், மனப் பான்மைக்கும் அமைவுறும் வண்ணம் ஆன்றோரால் அருளப் பெற்றன வென்றும், ஆதலின் அவை யனைத்தும் அவசியமே யென்றும் அறிவுடையார் கருதுகின்றார்கள். உண்மை இவ்வா றிருப் பினும், சமயப்பற்றுடைய மக்கள், தமது சமயமே மெய்ச் சமய மென்றும், தாமே செந்நெறி கண்ட சீரியர் என்றும், ஏனைய சமய வாதிகள் பொய்ச் சமயநெறி நின்று புன்னெறியில் வாழ்நாளைப் போக்குகின்றா ரென்றும் சமயப் பொறுமை சிறிதும் இன்றிச் சொற்போர் விளைத்தலையும், கலாம் விளைத்தலையும் நாம் பலகாலும் கண்டிருக்கின்றோம். இவ்வாறு போர் விளைக்கும் சமய வாதிகள் எல்லாம் திருக் குறளைத் தத்தம் சமயநூல் என்று போற்றி மகிழ்கின்ற ஒன்றே அந்நூலின் பெருமைக்குப் போதிய சான்றாகும். மற்றைய நாடுகளில் வழங்கி வருகின்ற சமயங்களைத்

தவிர்த்து நம் இந்திய நாட்டில் வழங்கி வருகின்ற சமயங்களை அறுவகையாக வகுத்து அறிஞர் ஆராய்ந்திருக்கின்றார்கள். இவ்வுண்மை 'அறுவகைச் சமயத்தார்க்கும், அவ்வவர் பொருளாய் நின்று அருள் செய்பவன் இறைவன்' என்னும் ஆன்றோர் திருவாக்கால் அறியலாகும். இவ்வாறு சமயக்கொள்கையில் வேறுபட்டவர் அனைவரும், ஒருங்கே ஈடுபட்டு இசைந்து நிற்பதற்கு நிலைக்களமாயிருக்கும் நூல் திருக்குறள் ஒன்றேயாம். இவ்வுண்மையைக் கடைச் சங்கப் புலவரான கல்லாட ரென்பார்,

அறுவகைச் சமயங்கள்

> ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின்
> அன்றென்ப ஆறு சமயத்தார்—நன்றென
> எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
> முப்பால் மொழிந்த மொழி.

என்று கூறிய செய்யுளால் அறியலாகும். என்றும் அழியாத உறுதிப்பொருள் ஒன்றே என்று ஒரு சமயம் கூறுமாயின், அதனை மறுத்து மற்றொரு சமயம் வேறு கொள்கையைக் கூறும். அதனையும் மறுத்துப் பிறிதொரு சமயம் பிறிதொரு கொள்கையைக் கூறும். இவ்வாறு ஒன்றோடொன்றெவ்வாறு சமயங்கள் முரண்படும். ஆனால் அறம், பொருள், இன்பம் என்னும் உறுதிப்பொருள்களை எடுத்துரைக்கின்ற திருக்குறளின் பொருளை உண்மையென எம்மதத்தினரும் சம்மதமாய் ஒப்புக்கொள்வ ரென்றால், அந்நூலின் பெருமை சொல்லாமலே விளங்குமன்றோ?

கல்லாடர் மதிப்புரை

ஆயினும் சைவ சமயத்திற் காணப்படும் உயரிய விழுமிய கொள்கைகளும், கருத்துக்களும் திருக்குறளில் காணப்படுகின்றன வென்பதும் உண்மையேயாகும். 'கடவுள்

வாழ்த்து' என்னும் முதல் அதிகாரத்தில் இறைவனை 'எண் குணத்தான்' என்று நாயனார் கூறுவது சைவசமயக் கருத் தென்று கருதலாகும். மூழு முதற் பொருளாய சிவபெருமானை 'எட்டு வான் குணத்து ஈசன்' என்று அப்பர் பெருமானும், 'இறைவனை, மறைய வனை, எண்குணத்தினனை' என்று சுந்தரப் பெருமானும் தேவாரத்தின் கண்ணே அமைத்தருளினார். இதுவுமன்றி,

திருக்குறளில் விளங்கும் சைவ சமய உண்மைகள்

சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்

என்ற தெய்வப்புலவர் குறளைத் திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனார் என்னும் சைவசமய ஆசிரியர், தமது திருக்களிற்றுப்படியார் என்னும் சமய நூலில்,

சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் என்றமையால்
சார்புணர்வு தானே தியானமுமாம்—சார்பு
கெடஒழுகின் நல்ல சமாதியுமாங் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று

என்று அமைத்திருக்கின்றமையால் ஆசிரியர் இருவரும் சைவ சமய நூற்கருத்தும் ஒன்றேயென்று தெரியலாகும். இன்னும் சைவ சமயப் பெரியார் ஒருவர்,

தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகம்என் றுணர்.

என்றருளிச் செய்தமையால் திருக்குறள் சைவ சமய நூல் களுள் ஒன்றாகவே கருதப்படுதல் தெளிவாக விளங்கும்.

இவ்வாறே வைணவ சமயத்தாரும் திருக்குறளைத் தம் சமயச் சார்பான நூல் என்றும் கருதுகின்றார்கள்.

திருக்குறளும் வைணவ சமயமும்

'தாமரைக் கண்ணான் உலகு' என்றும், மற்றும் பூவினுறைசெய்யாளைக் குறித்து அமைந்திருக்கின்ற சொற்களையும் ஆதரவாகக் கொண்டு திருக்குறளைத் தம் சமயநூல் என்பார்கள்.

இன்னும் பௌத்தம், சமணம் முதலிய சமயங்களும் நாயனாரைத் தம் சமயத்தவர் என்று பாராட்டி மகிழ்கின்றன. சமண சமயத்தில் கடவுள் பூமேல் நடந்தான் என்னும் கருத்துக் காணப்படுகின்றதென்றும், அக் கருத்தே 'மலர்மிசை யேகினான்' என்னும் நாயனார் சொற்றொடரில் விளங்குகின்றதென்றும் சமண சமயத்தார் கருதுகின்றார்கள். பௌத்த சமயத்தின் அடிப்படையான கொள்கைகள் நாயனார் நூலில் அழுத்தமாகக் கூறப்பட்டிருத்தலால், திருக்குறள் பௌத்தமதச் சார்பாய் எழுந்த நூல் என்று கருதுவாரு முளர். பௌத்த சமயத்தில் அடிப்படையான கருத்தை மணிமேகலை ஆசிரியரான சாத்தனார்,

திருக்குறளும் பௌத்த சமயக் கொள்கையும்

பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்
பிறவார் உறுவது பெரும்பே ரின்பம்
பற்றின் வருவது முன்னது பின்னது
அற்றோர் உறுவது அறிக

என்று தெளிவாகக் கூறியிருத்தலால், பிறப்பால் வருவது துன்பமே யென்றும், பிறப்பை யொழித்துப் பிறவாமை யாகிய பெரும் பேறு பெறுவதற்கு இருவகைப் பற்றையும் அறவே ஒழித்தலே வழியென்றும், துறவறமே பிறவியை

வேரறுக்கும் மருந்து என்றும் பௌத்த சமயர் கூறும் கொள்கையே, திருக்குறளில் துறவு என்னு மதிகாரத்தில்,

> தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
> வலைப்பட்டார் மற்றை யவர்

என்னும் குறளிலும், மற்றைய குறளிலும் காணப்படுகின்றது. ஆகவே இவ்வாறு பலவகைச் சமயத்தினரும், திருக்குறளைத் தம் நூல் என்று போற்றிப் புகழ்கின்ற தன்மையால், அவ்விழுமிய நூல் உலகிலுள்ள உயரிய சமயக்கொள்கைகளை யெல்லாம் தன்னகத்தே யடக்கித் தனக்கு அங்கங்களாய் அமைத்துக்கொண்டு, அவையனைத்திற்கும் நிலையாய் நிற்கும் தகுதி வாய்ந்த ஒரு தனி நூல் என்பது உள்ளங்கையின் நெல்லிக்கனிபோல் விளங்குகின்றது.

## காலத்தாற் பொது நூல்

ஒரு நூலின் பெருமை காலத்தாற் காணப்படுமென்பது மொழிநூல் வல்லார் துணிபாகும். காலம் என்னும் கடுவாரியில் அகப்பட்டு, அதனை யெதிர்த்து வெற்றிபெற வலியற்று மறப்பென்னும் கடலுள் ஆழ்ந்து போகின்ற நூல்கள் உலகில் பலவாகும். ஆனால் உயரிய உண்மைகள் அமைந்த நூல்கள் காலஞ் செல்லச் செல்ல, வளர் மதியம்போல வளர்ந்தோங்கி எங்கும் தண்ணொளி பரப்பி, உலகுள்ளளவும் வாழையடி வாழையென வருகின்ற மக்களனைவர்க்கும் தமது வண்மையையும் வளத்தையும் அளித்து மேம்படச் செய்கின்றன. தெய்வப் புலவர் செய்த 'தமிழ்மறை' இத்தகைய நூலாகும். முக்காலத்திற்கும் பொதுவாய, விழுமிய உண்மைகள் நிறைந்து திகழுகின்ற காரணத்தால், திருக்குறளைக் காலம் கடந்த நூல் என்று கூறுவது மிகையாகாது. ஒவ்வொரு காலத்தில் எழுதப்படுகின்ற

நூல்களிற் பல, அக்காலத்தில் வாழும் மக்கள் வாழ்க்கைக்கே பயன்படத் தக்கனவாய், அக்காலத்தில் மாந்தர் கருத்தைப் பெரிதும் கவர்கின்ற பொருள்களைப் பற்றியனவாய் இருப்பதால், அவை பிற்காலத்தில் பயன்குன்றிப் பாழ்படுகின்றன. ஆனால் மக்கள் உயர்நெறி யறிந்து உய்தற்குரிய உறுதிப்பொருள்களாய அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றின் திறம் தெரிந்து திருவள்ளுவனார் செய்த நூல், எக்காலத்திலும் மாறாப் பயன்தரும் மாண்புடைய நூலாய் விளங்குகின்றது.

ஒருவன் தன் வாழ்நாளிலேயே பலமுறை படிப்பானாயின், அவனது அறிவின் திறத்திற்கும், அனுபவமுதிர்ச்சிக்கும், மனப்பாங்கிற்கும் ஏற்பப் பொருள் சுரக்கும் ஞானச் சுனையாக நாயனார் நூல் விளங்குகின்றது. நவில்தொறும் நயம்பெருக்கும் நூலே விழுமிய நூல் என்றும், அறியுந் தோறும் முன் அறியாமையை விளங்கக் காட்டுதலே அருநூலின் தன்மையென்றும் நாயனார் கூறிய சீரிய உண்மைகளுக்கு அவர் நூலே சிறந்த சான்றாகும். நவில் தொறும் நவில் தொறும் நயம் மிக விளைப்பதும், பயில் தொறும் பயில் தொறும் பயன் மிக விளைப்பதும் திருக்குறளின் திறமென்பதனை, அந்நூலை ஓதி யுணர்ந்த அறிஞர் தெள்ளிதில் அறிவார்கள். திருக்குறளின் ஆழத்தை அறியுமிடத்து, தெளிந்த நீர் சுரந்து நிற்கின்ற கிணற்றை உற்றுப் பார்ப்பான் ஒருவன், அதன் தளம் எட்டக் கூடிய எளிய ஆழத்திலிருப்பதாக எண்ணி இறங்கும்பொழுது அதன் ஆழம் தன்னளவிற்குப் பன்மடங்கு அதிகமா யிருத்தலைக் காணுதல்போல, இரண்டடியாய் ஓதற் கெளிதாய் அமைந்துள்ள திருக்குறள் உணர்தற்கரிதாய் அறிய ஒண்ணாத ஆழமுடையதாய் விளங்குகின்றது. ஆதலின் ஒரு

வன் எக்காலத்திலும் நாயனுர் கருத்தை அளவிட்டு அறிந்து விட்டதாகச் சொல்ல இயலாது. ஆகவே எக்காலத்திற்கும் பொதுவாய உண்மைகள் பொதிந்ததாய், பயில் தொறும் புதிய எழுச்சியும், உணர்ச்சியும் தந்து மக்களுக்கு உறுதி பயக்கின்ற நூல் திருக்குறள் என்று கூறுவதில் யாதும் ஐயமில்லை.

## சாதிப் பொதுநூல்

திருக்குறள் எல்லாச் சமயங்களுக்கும், எல்லாக் காலங்களுக்கும் எவ்வாறு பொது நூலாய் விளங்கு கின்றதோ அவ்வாறே எல்லாச் சாதிகளுக்கும் பொது நூலாய் அமைந்திருக்கின்றது. உண்மையில் ஆசிரியரது உள்ளக் கருத்தை நாம் அறிவோமானுல் சாதி, குலம், பிறப் பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறுகின்ற தன்மை அவரிடம் இல்லை யென்பது வெள்ளிடை மலைபோல் விளங்கும். தொழில் வேற்றுமையால் உலகில் பாகு பாடுகள் காணப் படுமேயன்றிப் பிறப்புக் காரணமாக ஏற்றமும், தாழ்வும், வேற்றுமையும் இல்லை யென்பது ஆசிரியரது அடிப்படை யான கருத்தாகும்.

பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யால்

என்ற குறளே மேற்கூறிய உண்மைக்குப் போதிய சான்ருகும். இத்தகைய பொதுத் தன்மையை அக்காலத்துப் புலவர்களும் போற்றிப் பாராட்டி யிருக்கின்ருர்கள். வட மொழியில் சீரிய நூலாகவும் செய்யா மொழியாகவும் கருதப் படுகின்ற வேதத்தையும் தமிழ் மொழியில் தமிழ் மறை யென்று பெயர்பெற் ருெளிரும் பொய்யா மொழியையும் ஒப்பிட்டுப் பார்த்து,

செய்யா மொழிக்கும் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருள் ஒன்றே—செய்யா
அதற்குரியர் அந்தணரே யாராயின் ஏனை
இதற்குரியர் அல்லாதார் இல்.

என்று வெள்ளிவீதியார் என்னும் புலவர் கூறுகின்றார். ஆரிய வேதமாகிய எழுதா மறைக்கும், தமிழ் வேதமாகிய பொய்யா மொழிக்கும் பொருள் ஒன்றேயாம். ஆயினும் வடமொழி வேதத்திற்கு அந்தணரே உரியரல்லால், மற்றைய வகுப்பினர் அதனைப் படித்துப் பயனடைதற் குரியரல்லர். ஆனால் பொய்யா மொழியாய தமிழ் வேதத்தைப் படித்துப் பயனடைதற்குரிய ரல்லாதாரில்லை என்றமையால் எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும் அறிவுடையாரெல்லாம் திருக்குறளைப் படித்துப் பயனடையலாகும் என்ற பரந்த பொது நோக்கமே இந்நூல் யாவர்க்கும் பொது வென்னும் உண்மைக்குப் போதிய சான்றாகும். இன்னும் திருக்குறளை வியந்து கூறிய கோதமனார் என்னும் மற்றொரு புலவர்,

ஆற்றல் அழியுமென்று அந்தணர்கள் நான்மறையைப்
போற்றியுரைத்து ஏட்டின் புறத்தெழுதார்—ஏட்டெழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்
சொல்லிடினும் ஆற்றல்சோர்வு இன்று.

என்று கூறினார். வடமொழி நான்மறைகளையும் ஏட்டில் எழுதி வைத்தால், பலரும் படித்தலால் அவற்றின் ஆற்றல் குறையும் என்று எண்ணி வேதத்தை ஏட்டில் எழுதாமல் வாய்ப்பாடமாக, வழிமுறை, வழிமுறையாக ஓதி யுணர்ந்து அந்தணர் அவற்றைப் போற்றினார்கள். ஆனால் திருவள்ளுவர் தாம் செய்த நூலை வல்லாரும், வன்மையில்லாரும் ஓதினாலும் தம் நூலின் திறம் குறையாதென்று, ஏட்டில்

எழுதிவைத்து உலகமெல்லாம் பயனடையுமாறு செய்தார். சொல்லே பெரிதென்று போற்றுகின்ற காரணத்தால் வட மொழி மறையோர் ஒலி வழுவாமற் பாதுகாத்தார். ஆனால் நாயனார் பொருளே பெரிதென்று கொண்ட பெரியாராத லின், தம் நூலை யாவரும் ஒல்லும் வகையால் அறிந்துய்ய வேண்டும் என்னும் பொதுநோக்கத்தில் நிலைநின்றவராய்த் தம் கருத்தை உலகத்திற்கு வெளிப்படுத்தினாரென்ற உண்மைகள் நன்றாக விளங்குகின்றன. ஆகவே ஒரு சாதி யினர்க்காவது, ஒரு வகுப்பினர்க்காவது சிறப்பாகச் செய் யப்பெற்ற நூல் திருக்குறள் அன்றென்பதும், மக்களாய்ப் பிறந்தார் அனைவர்க்கும் அது பொது நூல் என்பதும் இனிது அறியப்படும்.

**பொது நீதி பொதிந்த பெரு நூல்** — யாவர்க்கும் பொதுநூலா யிருப்பதோடு பொய்யா மொழி தன்னகத்தே பொது நீதிகளைக் கொண்ட பெரு நூலாகவும் விளங்குகின் றது. தமிழ் மொழியில் நீதி நூல்களும், ஒழுக்க நூல்களும் மிகப் பலவாய்க் காணப்பட்டாலும், அவற்றிற் கெல்லாம் தலைமை வாய்ந்து நிற்பது திருக்குற ளேயாம். ஆனால் வடமொழியில் வழங்குகின்ற நீதி நூல் களுக்கும் இந்நீதி நூலுக்கும் பெரிதும் வேற்றுமை காணப் படுகின்றது. வடமொழி நீதி நூல்கள் பெரும்பாலும் சாதி வேற்றுமையை அடிப்படையாகக் கொண்டு, வழக்கு தண்டம் முதலிய துறைகளில் ஒரு சாதிக்கொரு நீதியாக வும், ஒரு குலத்துக்கொரு நீதியாகவும் அமைத்துக் கூறு கின்றன. அறங்கூறவையத் தலைவனை நீதியாளன், குற் றம் செய்தான் ஒருவனது குலத்தை அறிந்தே அதற்கேற்ற தண்டனை விதிக்க வேண்டும். ஒரு குற்றத்தை உயர்குலத் தானொருவன் செய்தால் எளிய தண்டனையும் தாழ்குலத்

தாமொருவன் செய்தால் கடிய தண்டனையும் விதிக்கப்பட்டிருத்தலை மநுநீதி முதலாய நீதிநூல்களிற் காணலாம். ஆனால் திருவள்ளுவர் நீதிநூலில் சமன் செய்து சீர் தூக்கும் கோல்போன்ற நடு நிலை வழுவாத பொது நீதியே போற்றப் பட்டுள்ளது. இவ்வுண்மையை நன்குணர்ந்த செந்தமிழ்ப் புலவர் சுந்தரம்பிள்ளையவர்கள் தமது மனோன்மணீயத்தில்,

> வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள்
> உள்ளுவரோ மனுவாதி ஒருகுலத்துக் கொருநீதி

என்று உளம் மிகநொந்து, ஏனைய நீதி நூல்களென்று பெயர் வாய்ந்தனவற்றை உள்ளத்தால் உள்ளலும் தீது என்று கூறியுள்ளார்.

இத்தகைய பெருமை வாய்ந்த திருக்குறள், அருந் தமிழ் மொழியில் முதனூலாக எழுதப்பட் டிருப்பினும், அஃது எம்மொழியாளர்க்கும் பொது நூல் என்பதை அறிவுடையோர் எவரும் மறுக்க மாட்டார்கள். பல நூற்றாண்டுகளாக நமது அமிழ்துறழ் தமிழ் மொழியின் திறமுணரா திருந்த மேற்புலத்து மக்கள் திருவள்ளுவர் நூலின் நயம் உணராதிருந்தனர். ஆனால் தமிழ் நாட்டில் இப்பொழுதும் போப்பையர் என்று வழங்குகின்ற ஆங்கிலப் பாதிரியார், இத் திருந்திய நூலைத் தம் மொழியில் மொழி பெயர்த்து ஆங்கிலம் பயிலுகின்ற நாடெல்லாம் பயனடையுமாறு செய்த நன்முயற்சியைப் பின்பற்றி இப்பொழுது மேலை நாட்டில் வழங்கி வருகின்ற பன்னிரண்டு மொழிகளில் திருக்குறள் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளதென்று தெரிகின்றது. இன்னும் வடமொழியாய ஆரியத்திலும் இந்நூல் மொழி பெயர்க்கப் பட்டுள்ளதென அறிகின்றோம். இவ்வாறு கால

திருக்குறள் பல மொழிகளில் மொழி பெயர்க்கப் பட்டுள்ளமை

# திருவள்ளுவர் நூல்நயம்

தேச வரையறையின்றி உலகினர்க்கெல்லாம் ஒரு தனி நூலாய் நாயனார் நூல் விளங்குவதை நன்கறிந்த ஒரு புலவர் 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ் கொண்ட தமிழ் நாடு' என்று மன மகிழ்ந்து வாழ்த்தினர். ஆயினும், மொழி பெயர்க்கின்ற பேராசிரியர்கள் இந்நூல் வளத்தால் தம்மொழியும் மேம்பட வேண்டுமென்னும் விழுமிய நோக்கத்துடன் தமது பணியைச் செய்யவேண்டும். அவ்வாறன்றித் தமிழ் நூலைத் தம் மொழியில் மொழிபெயர்த் தமைத்துக்கொண்டு சூழ்ச்சிகள் பல செய்து, இன்னும் சில காலத்தில் தம் மொழியிலேயே இந்நூல் முதல் நூலாக இயற்றப்பெற்ற தென்றும், ஆசிரியர் திருவள்ளுவனார் அதனை மொழி பெயர்த்துத் தமிழுலகிற்குத் தந்தாரென்றும் நன்றி கொன்று உயிர்வாழும் நச்சுத்தன்மை தவிர்ந்து நன்னோக்கமே தலைப்படுமாயின் தமிழ்நாடு தழைத்தலோடு ஏனைய நாடுகளும் ஏமம் உறும்.

## ௩. அறத்தின் திறம்

அறத்தினூங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலி னூங்கில்லை கேடு

உலகில் மக்களாய்ப் பிறந்தார்க்கு, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கும் உறுதிப் பொருள்களென உயர்ந்தோரால் எடுத்தோதப்படும். இவற்றுள் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றுமே நூல்களில் விரிவாக எழுதப்படும். வீடென்னும் விழுமிய பொருள் மனமும் மொழியும் செல்லா நிலைமைத்தாகலின், அதனை அளவிட்டுக் கூறாமல், அனுமானத்தால் அறிந்து கொள்ளுமாறு ஆசிரியர்களால் அமைக்கப்பெறும் வீட்டைப்பற்றி நாயனார் வெளிப்படையாக மொழியாமல், மற்றைய மூன்று பொருள்களையே தமது நூலில் மொழிகின்றமையால், திருக்குறள் முப்பால் நூல் என்று பெயர் பெற்றது. ஆயினும் வீட்டின் தன்மையை நாயனார் குறிப்பாக உணர்த்தாமற் போகவில்லை யென்பது திருக்குறளைத் தெளிவாக ஓதி யுணர்ந்த புலவர் கருத்தாகும். அந்நூலின் நயமுணர்ந்து கற்ற நற்றமிழ்ப் புலவர் ஒருவர்,

திருக்குறள் முப்பால் நூல் என்று பெயர் பெற்ற காரணம்

அறனறிந்தேம் ஆன்ற பொருள் அறிந்தேம் இன்பின்
திறனறிந்தேம் வீடு தெளிந்தேம்

என்று கூறுகின்றமையால், முன்னைய மூன்றையும் வெளிப் படையாகவும், வீட்டைக் குறிப்பாகவும் நாயனார் உணர்த்

தினர் என்பது இனிது விளங்கும். இவ்வீட்டு நெறியென்னும் ஒளி நெறியைக் குறிப்பாகக் கூறினரேனும் ஆசிரியர் அதனை மிகத் தெளிவுபெறக் கூறியுள்ளாரென்பது

**வள்ளுவர் வீட்டு நெறியையும் கூறி யுள்ளார்**

> இம்மை மறுமை இரண்டும் எழுமைக்கும்
> செம்மை நெறியில் தெளிவுபெற—மும்மையின்
> வீடுஅவற்றின் நான்கின் விதிவழங்க வள்ளுவனார்
> பாடினர் இன்குறள்வெண் பா.

என்னும் பெருங்கண்ணனார் பாட்டால் இனிது விளங்கும்.

அறம் என்னும் பொருளை ஆசிரியர் இல்லறம், துறவறம் என வகுத்து ஆராய்கின்றார். இல்லறமென்பது ஒருவன் மனைத்தக்க மாண்புடையாளை மனையாளாகக் கொண்டு, நல்லொழுக்க நெறி நின்று, அறவோர்க் களித்தல், அந்தணரோம்பல், துறவோர்க் கெதிர்தல் ஆகிய நல்லறங்களை நாள்தோறும் இயற்றி இனிது வாழ்தலாம்.

**அறம், இல்லறம் துறவறம் என இருவகைப்படும்**

துறவறமென்பது இவ்வுலகப் பொருள்களின் நிலையாமை கண்டு பிறப்பால் வருவது துன்பமே யென்றும், பிறவாமையாகிய பேறே பெரும் பேறென்றும் கொண்டு, இருவகைப் பற்றையும் அறவே ஒழித்து, மறுமைப் பயன் கருதித் தவஞ் செய்யும் விழுமிய நெறியாம்.

இவ்வுலகில் நன்னெறி யென்றும், தீயநெறி யென்றும் இருநெறி யுண்டென்பதும், நன்மையைப் போற்றித் தீமையை அகற்றி மக்கள் வாழவேண்டுமென்பதும் நாயனாரது அடிப்படையான கருத்தாகும். நன்னெறி தீநெறி

## அறத்தின் திறம்

**நன்னெறியும், தீநெறியும்**

யாகிய இருநெறியின் இயல்புகளைப் பகுத்தறிந்து, மக்களை நல்வழிப்படுத்தும் அறிவே பகுத்தறிவெனப்படும். அறிவின் தன்மை கூறப் போந்த ஆசிரியர் வள்ளுவனார்,

> சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
> நன்றின்பால் உய்ப்பது அறிவு

என்று அருளுகின்றமையால், மனத்தைச் சென்றவிடமெல்லால் செல்லவிடாமல் தீநெறியை விலக்கி, நன்னெறியிற் செலுத்துவதே அறிவாகும் என்று நன்கு அறிகின்றோம். இவ் இரு நெறியின் பாகுபாடுகளை நன்குணர்ந்து நன்னெறியாகிய பெரு நெறி பிடித்தொழுகும் பெருமை பெறாதவர், மக்களாய்ப் பிறந்தும், அவ் உயரிய பிறவிக்குரிய பெரும் பயனை இழந்தவரே யாவர் என்பது ஒரு தலையாம்.

**வினையின் பயன்**

நல்வினை தீவினை யென்னும் இரண்டின் தன்மையை ஆராயுங்கால், நல்வினை எப்பொழுதும் நன்மையே பயக்கும், தீவினை எப்பொழுதும் தீமையே பயக்கும் என்பது தெளிவாகும்.

> தீயவை தீய பயத்தலால் தீயவை
> தீயினு மஞ்சப் படும்

என்று ஆசிரியர் அருளுகின்றார். 'தினையை விளைத்தவன் தினையை அறுப்பதுபோல வினையை விளைத்தவன் வினையை அறுப்பான்' என்பது தமிழ் நாட்டுப் பழமொழியாகும். வினை செய்தார் தம் வினையின் பயனினின்றும் எக்காலத்தும் தப்பிப் பிழைப்பது இயலாது.

> தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
> வீயாது அடியுறைந் தற்று

என்று நாயனார் கூறுகின்றமையால், ஒரு பொருளை எப்பொழுதும் பிரியாது தொடர்ந்து செல்லும் அதன் நிழலைப் போன்று தீவினை செய்தானை அவ்வினை விலகாது பின்சென்று அடும் என்பது உண்மையாகும்.

*தீவினையைத் திரிகரணங்களாலும் நீக்குதல்*

தீவினையை மனம், மொழி, மெய் என்னும் மூன்று கரணங்களாலும் நீக்குதல் வேண்டும். அஃதாவது தீய எண்ணங்களை மனத்தால் எண்ணுதலும், தீய சொற்களை வாயாற் சொல்லுதலும், தீய தொழில்களைச் செய்தலும் ஆகாவாம். தீய சொல்லுக்கும் தீய செயலுக்கும் தீய எண்ணமே காரணமாக இருத்தலால், அத்தீய எண்ணம் வருவதற்கு நிலைக்களமாயிருக்கும் மனம் எப்பொழுதும் மாசற்றதாய், தூயதாய் விளங்கவேண்டும். இதனாலேயே நாயனார்,

> மனத்துக்கண் மாசில னாதல் அனைத்து அறன்
> ஆகுல நீர பிற

*மனத்தில் மாசு இன்மையே அறம்*

என்று அருளிச் செய்தார். மனத்தின்கண் மாசின்மையே அறமென்றும், மாசுடைமையே மறமென்றும் நன்கு உணரப்படும். ஒருவன் மனத்தின்கண் நிகழுகின்ற தீய கருத்துக்கள் அழுக்காறு, அவா, வெகுளி யென மூவகைப்படும். இவற்றுள் பிறர் ஆக்கங்கண்டு மனம்பொறாமையாகிய அழுக்காறு மனத்தில் நிகழுமாயின், அஃது இம்

*மனத்தில் நிகழும் மூன்று தீய எழுச்சிகள்*

மையில் செல்வத்தை ஒழித்து, மறுமையிலும் தீயுழி உய்த்துவிடும். அழுக்காறுடையான்கண் ஆக்கமின்மை யென்பதும், அஃதுடையான் கெடுதல் ஒருதலை யென்பதும்,

நாயனாரது முடிந்த முடிபாகும். இனி அவா வென்பது

க. அழுக்காறு

பிறரை வஞ்சித்து, அவர் பொருளைக் கரவாற் கைப்பற்றக் கருதும் மன நிகழ்ச்சியாம். பிறர் பொருளாய அவர் உடைமையையும், மனையாளையும் இச்சித்துக் கைப்பற்ற வழி தேடும் ஒருவன், கெடுதல் ஒருதலையாம்.

உ. அவா

அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்

என்னும் குறளால், பிறர் பொருளைக் கரவால் வஞ்சிக்கக் கருதும் ஒருவன் கெடுவது திண்ணம் என்பது இனிதுணர்த்தப் பட்டது. இனிப் பிறன் பொருளாகிய இல்லாளை விரும்புதலும் பெரும் பேதைமை யாதலோடு ஏதம் பெரிதும் தருவதாகும்.

பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்

என்றமையால், பிறன் மனையாளை நயக்கும் பேதை யொருவன், நீங்காப் பகைக்கும், நிறைந்த அச்சத்திற்கும், நிலைத்த பாவத்திற்கும், பழிக்கும் ஆளாவான் என்று ஆசிரியர் அருளுகின்றார். ஆகவே பிறர் உடைமையாகிய, பொருள்மீதும், பெண் மீதும் செல்லுகின்ற ஆசை தீவினைக்கே வித்தாக இருத்தலால் அதனை ஒழித்தல் அவசியமாகும். இனி மனத்தின் கண்ணே நிகழும்

௩. வெகுளி

வெகுளி யெனப்படும் சினமும் கேடு பயக்கு மாதலால், அதனையும் வேரோடு அழிக்க வேண்டும்.

தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்

என்று திருக்குறள் கூறுகின்றது. இன்னும் சினமே தீவினைக்கு வித்தாகும் என்பது,

மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய
பிறத்தல் அதனால் வரும்

என்னும் திருவாக்கால் அறியலாகும். ஆகவே மக்களுக்கு எக்காலத்திலும் தீமையே பயக்கின்ற அழுக்காறு, அவா, வெகுளி யென்னும் மூன்றையும் அறவே ஒழிக்கவேண்டுமென்பது அறியப்படும்.

தீய எண்ணங்களை அகற்றுவது அவசியமாதல்போல, தீய சொற்களையும் ஒழிப்பது இன்றியமையாததாகும். தீய சொற்களும் தீமை பயப்பனவாதலால் அவற்றையும் அறவே விலக்கவேண்டும். தீய சொல் என்பதனை நாயனார் பயனில் சொல்லென்றும், பிறரைப் பழிக்கும் சொல்லென்றும், இன்னாச் சொல்லென்றும், பொய்ச்சொல்லென்றும் நான்காக வகுத்துக் கூறுகின்றார்.

தீய சொற்கள் நால் வகைப்படும்

தமக்கும் பிறர்க்கும் அறம், பொருள், இன்பமாகிய பயன்களுள் ஒன்றும் பயவாத சொற்களே பயனில் சொற்களாம். இத்தகைய பயனற்ற சொற்களைப் பாராட்டிப் பேசும் இயல்புடையவர் மக்களல்லர், மக்களுள் பதர் என்று ஆசிரியர் கூறுகின்றார். ஆகவே எவ்வாற்றானும் ஒருவன் பயனுடைய சொற்களையே சொல்லவேண்டுமென்பதும், பயனற்ற சொற்களை ஒழிக்க வேண்டுமென்பதும் நாயனார் கருத்தாகப் பெறப்படும்.

௧. பயனில்லாச் சொல்

இனிப் பிறரைப் பழிக்கும் சொல்லாவது, அவரில்லா

விடத்து அவரை இகழ்ந்துரைக்கும் புறங்கூறுதலாகும்.

உ. புறங்கூறல்

புறங்கூறிப் பொய்த்து உயிர் வாழ்தலினும், உயிர் துறத்தல் சாலவும் நன்றென்பது,

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்
அறங்கூறும் ஆக்கம் தரும்

என்ற தமிழ்மறையால் விளங்குகின்றது. இனி இன்னாச் சொல்லாவது, கேட்டார்க்குத் துன்பம் பயக்கும் சொல்லாம். இனிய சொற்களைச் சொல்லாது, இன்னாச் சொற்களைச் சொல்லுதல் 'கனியிருப்பக் காய் கவர்ந்தற்று' என்று நாயனார் அருளுகின்றார்.

௩. இன்னாச்சொல்

இன் சொல்லால் இவ்வுலகம் மகிழுமேயன்றி, வன் சொல்லால் என்றும் மகிழாதாம். இன்சொல் இயம்புவதாய அறம் எல்லார்க்கும் இயலுமோர் இனிய அறமாகும். ஈதலாகிய அறத்தைச் செய்வதற்குப் பொருள் வேண்டும். ஆனால், இன் சொல்லாகிய அறத்திற்கு ஒன்றும் வேண்டாமாகையால், இது யாவரும் கையாளுதற்குரிய சீரிய அறமாகும். இவ்வுண்மையைத் திருமூலநாயனார்,

யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு விற்கொரு வாயுறை
யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே

என்று அருளினார். இன்னாச்சொல் இம்மையும் மறுமையும் துன்பம் விளைக்கும். இனியசொல் இம்மையும் மறுமையும் இன்பம் பயக்கும். ஆகலின் அகத்தே அன்பு

நிறைந்த ஆன்றோர், மறந்தும் இன்னாச்சொல் இயம்பமாட்டார்கள்; இனிப் பொய்ச்சொல் என்பதற்கு நாயனார் தீமை பயக்கின்ற சொல் என்று கட்டுரை கூறுகின்றார். நன்மை பயக்கின்ற சொல் வாய்மை யென்றும், தீமை பயக்கின்ற சொல் பொய்ம்மை யென்றும் நாயனார் செய்துள்ள பாகுபாடு, பலரும் சொற்போர் விளைப்பதற்கு நிலைக்களமாக நிற்பதாகும். ஒருவன் சொல்லுகின்ற சொல்லின் பயன் நோக்கியே, அதனை மெய்ச்சொல், அன்றிப் பொய்ச்சொல் என்று துணிய வேண்டுமேயன்றி, சொல்லளவால் அவ்வாறு கூறுதல் பொருந்தாதென்று நாயனார் கருதுகின்றார். 'வாய்மை' யென்பதற்குக் கட்டுரை கூறப்போந்த ஆசிரியர்,

௪. பொய்ச்சொல்

> வாய்மை யெனப்படுவது யாதெனில் யாதொன்றும்
> தீமை யிலாத சொலல்

என்று அருளினார்.

வாய்மையின் கட்டுரை

யாதொரு தீமையும் பயவாத சொற்களைச் சொல்லுதலே வாய்மையென்று சிறப்பித்துச் சொல்லப்படும் என்று நாயனார் மொழிவதை நோக்குமிடத்து, நயம் ஈன்று நன்மை பயக்கும் சொற்களைச் சொல்லுதலே வாய்மை யென்றும், தமக்கும், பிறர்க்கும் தீமை பயக்கின்ற சொற்களைச் சொல்லுவது பொய்ம்மையென்றும் நாயனார் கருதியதாக அறிகின்றோம். இக்கருத்தையே மீண்டும் வற்புறுத்தும் பொருட்டு,

> பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
> நன்மை பயக்கு மெனின்

என்று நாயனார் தெளிவு படுத்துகின்றார். குற்றமற்ற நன்மை பயக்குமாயின், பொய்ம்மை யென்று உலக வழக்கிற் சொல்லப்படுகின்ற சொற்களும் வாய்மையின் பாற்படும் என்பதே, இக்குறளின் கருத்தாகும். களவு என்ற சொல்லைக் கேட்ட அளவிலேயே, அது தீது என்று கொள்ளலாகாது. களவு நன்றாமாறும் உண்டு என்று இறையனார் அகப்பொருள் உரைகண்ட நக்கீரர் கூறுவது போல, பொய் என்ற சொல்லைக் கேட்ட அளவிலே அது தீதென்று கொள்ளலாகாது. பொய் நன்றாமாறு முண்டு என்பதே நாயனார் கருத்தாகத் தெரியப்படும். களவினால் நன்மையும் விளையும் என்பதற்கு நக்கீரர் ஒரு சான்றுரைக்கின்றார். ஒரு மனையாள், தன் நலைவனோடு மாறுபட்டு, உலக வாழ்க்கையை வெறுத்து நஞ்சுண்டு உயிர் நீக்கக் கருதி, ஒரு கலத்தில் நஞ்சு கலந்து ஒருவரும் அறியாத பொழுது, உண்ணும் பொருட்டு அதனை ஓரிடத்தில் ஒளித்து வைத்திருந்தால், அதனை யறிந்த அருளுடையான் ஒருவன், அப்பெண்மணியின் ஆருயிர் காக்கும் அருங் கருணையால், அக் கலத்தினை அவளறியாமல் கவர்ந்து, வெளியே கொண்டுபோய் நஞ்சைக் கொட்டிவிட்டான். இச்செயலறியாத அப்பெண், மருங்கிலுள்ளா ரெல்லாரும் நன்றாக உறங்கும் நள்ளிரவில், தான் நஞ்சை மறைத்து வைத்திருந்த இடத்திற்குச் சென்று பார்த்தாள். அங்கு அதனைக் காணாமல் திகைத்து உயிர் துறத்தற்கு வழியற்றுப் பின்னும் வாழ்ந்திருந்தாள். இச்செயலை ஆராயுமிடத்து, நஞ்சாகிய பொருளை, அதற்குரியளான அந்நங்கை யறியாமல், அருளாளன் கவர்ந்து கொண்டது களவே யாகும். ஆயினும் புறத்தே நிகழ்ந்த செயல் நோக்கி அதனைக்

பொய்ம்மையும் வாய்மையும்

ளவெனக் கருதாது, அச்செயலின் பயன் நோக்கி அதனை அறமெனக் கருதவேண்டும். நஞ்சினைக் கரவால் கைப்பற்றிய செயலால், ஓர் ஆருயிர் பிழைத்தது. ஆகவே தோற்றத்தால் ஒரு செயலின் தன்மையை அளவிட்டுரைத்தல் ஆகாதென்பதும், அதன் பயன் நோக்கியே நல்லதென்றும், அல்லதென்றும் வகுத்துக் கூறவேண்டு மென்பதும் நற்றமிழ் வல்ல நக்கீரர் கருத்தாகத் தெரிகின்றன. அதுபோல், சொல்லின் பயன் நோக்கி, அச்சொல் பொய்ம்மையின் பாற் படுமோ, அன்றி வாய்மையின்பாற் படுமோ என்று ஆராய வேண்டுமே யன்றி, இல்லதைச் சொல்வது பொய் யென்றும், உள்ளதைச் சொல்வது மெய்யென்றும், வெளிப்படையாகக் கூறும் வேற்றுமை நாயனாருக்கு உடன்பாடான கொள்கையாகத் தோன்றவில்லை.

*நன்மை பயக்கும் பொய்ச்சொல்லும் வாய்மையாம்*

இதனை யோர் உதாரணத்தால் விளக்கலாம். ஓர் ஆடவன் இறந்தபொழுது, அவன் உற்றார் உறவினரெல்லாரும் ஒருங்கு சேர்ந்து, கற்புநிலை வழுவாத அவன் மனையாளையும் உடன் கட்டையேற்றி வளர்ந்தெரிகின்ற நெருப்பில் இட்டு எரித்து விடவேண்டும் என்னும் தீய எண்ணத்துடன், அம்மாதைத் தலைவிரிகோலமாகத் தெருவழியே இழுத்துச் செல்வதை அருள் நிறைந்த ஓர் ஆண்மகன் கண்டான். கண்டு மனங்கரைந்து தான் நீதியாயின யாவையும் எடுத்துரைத்தாலும் அக்கயவர் கேளாரென் றெண்ணி அவர்பால் விரைந்து சென்று, "ஏ! கொலைத் தொழில் புரியும் கொடிய மாந்தர்காள்! நில்லுங்கள். இவ்வாறு முறையின்றி ஓர் உயிர்ப் பொருளைக் கொல்வாரைத் தூக்கு மரத்திலேற்றிக் கொல்லுமாறு நமது அரசனது ஆணை பிறந்திருக்கிறது. அவ்

*ஓர் உதாரணம்*

வாளைக்குத் தப்பி நீங்கள் உயிர் பிழைக்க வேண்டுமாயின் இம்மாதைக் கொல்லும் எண்ணத்தை அறவே தவிர்த்து அரசனது ஆணையைப் போற்றுமின்!" என்று கூறிய உறுதியான சொற்கேட்டு அவ்வாணையை உண்மையென்று நம்பிப் பயந்து, கயவரும் பெண்ணைக் கொல்லாது விட்டுச் சென்றனர். இச்செயலை ஆராயுங்கால், அவ்வருளாளன் உரைத்தவாறு அரசனது ஆணை யொன்றும் இல்லை யென்று வைத்துக்கொள்வோம். அவ்வாறாயின் அவன் கூறிய சொல், பொய்யோ, மெய்யோ என்று ஆராயுமிடத்து உள்ளதை உள்ளவாறு கூறாமல் இல்லதை உள்ளதாகக் கூறினமையால் அதனைப் பொய்யென்போமா; அன்றி அச்சொல்லின் பயன் ஒரு பெண்ணின் ஆருயிர் காத்த நல்லறமாதலால் அதன் பயன் நோக்கி அதனை வாய்மை யென்போமா! என்னும் ஆசங்கை நிகழுமிடத்து, ஆசிரியர் திருவள்ளுவனார் அதனை வாய்மையென்றே கொள்வர் என்று கருதலாகும். ஆகவே தீமை பயக்கின்ற சொற்களும் பொய்ச் சொற்களேயென்றும், அவற்றை ஒழித்து நன்மை பயக்கின்ற சொற்களாய மெய்ச் சொற்களையே சொல்லவேண்டுமென்றும் நாயனார் அருளிச் செய்தார்.

இனித் தீய எண்ணங்களையும், தீய சொற்களையும் எவ்வாறு களைய வேண்டுமோ, அவ்வாறே தீயசெயல்களையும் அறவே ஒழிக்கவேண்டும். தீய செயல்களாவன; ஒருயிர்க்குத் துன்பம் செய்தல், ஒருயிரைக் கொல்லுதல் முதலியனவாம். ஓர் உயிர்க்கு நாம் முற்பகலில் துன்பம் செய்தால், பிற்பகலில் நமக்குத் துன்பம் தானே வரும் என்பது ஆசிரியர் துணிபாகும். இன்னும்,

தீய செயல்கள்

நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்

என்றமையால், இன்னுசெய்தார் எப்பொழுதும் துன்பத்திலேயே வீழ்ந்து உழல்வர் என்றும், தமக்குத் துன்பம் வேண்டாதவர் பிறர்க்குத் துன்பம் செய்தலை ஒழித்தல் வேண்டுமென்றும் தெளிவாகத் தெரிகின்றது.

க. இன்னு செய்தல்

ஓர் உயிர்க்கு இன்னு செய்தலினும், அதனைக் கொல்லுதல் பன்மடங்கு தீமை பயக்கும் என்று சொல்லவும் வேண்டுமோ?

நல்லா றெனப்படுவது யாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழு நெறி

என்று நாயனுர் அருளினமையால், கொல்லாமையாகிய அறமே நன்னெறி யென்றும், கொலை செய்தலாகிய முறையே தீநெறி யென்றும் தெள்ளிதிற் பெறப்படும். உலகில் இறைவனது ஆணையால் வாழுகின்ற உயிர்ப்பொருள்களைக் கொன்று அதனுல் எய்தற்பாலதாகிய ஆக்கம் அளவிறந்ததாயிருப்பினும் அவ்வாக்கம் கருதிக் கொலை செய்தல் பெருங்கேடு விளைப்பதாகுமென்று நாயனுர் கூறுகின்றுர்.

கொலை செய்தல்

நன்றுகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றேர்க்குக்
கொன்றுகும் ஆக்கம் கடை

என்னும் குறளினும்,

அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத்து உண்ணுமை நன்று

என்னும் குறளினும் நாயனார் தம் காலத்தில் சில நாடுகளில் நிகழ்ந்த பழக்க வழக்கங்களை மறுத்து உண்மையை நிலை நாட்டுகின்றார். ஆசிரியர் காலத்தில் வட நாடுகளில், வேள்விகள் மிகுந்து உயிர்க்கொலையும் பலவாய்ப் பெருகினமையால், அதனை ஒழித்து அருள் நெறியை நிலைநிறுத்தும் பொருட்டுப் புத்தர் என்னும் பெரியார் உலகில் தோன்றிக் கொல்லாமையாகிய நன்னெறியை வட நாடெங்கும் பரப்பினர் என்று இந்திய சரித்திரம் எடுத்துரைக்கின்றது. இத்தகைய கொலை நிகழ்த்திப் புரியும் வேள்வியால் வரும் ஆக்கத்தினும், கொல்லாமையால் வரும் அறமே சிறந்ததென்று ஆசிரியர் அழுத்தமாகக் கூறுகின்றார்.

இன்னும் கொல்லாமையாகிய அறத்தினை ஆசிரியர் எவ்வாறு போற்றுகின்றாரென்பது,

> ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
> பின்சாரப் பொய்யாமை நன்று

**கொல்லாமையே உயரிய அறமாகும்**

என்னும் திருக்குறளால் தெரியலாகும். பொய்யாமையின் சிறப்புச் சொல்ல வந்த பொழுது,

> பொய்யாமை பொய்யாமை யாற்றின் அறம்பிற
> செய்யாமை செய்யாமை நன்று

என்று பொய்யாமையாகிய அறத்தின் பெருமையை நாயனார் வியந்துரைத்தார். பின் கொல்லாமையைக் குறித்துப் பேசுங்கால், இவ்வறத்தின் நலமை நோக்கிப் பொய்யாமைக்கும் மேலாய பெருமை யளித்த அழகு கண்டு மகிழ்வதற் குரியதாகும்.

பெரும்பாலும் கொலை நிகழ்வது ஊனைத்தின்று ஊனைப் பெருக்கும் பொருட்டேயாதலால், அவ்வழக்கத்தை நாயனார் நன்கு கண்டிக்கின்றார்.

> தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிதூ னுண்பான்
> எங்ஙனம் ஆளும் அருள்

ஊனைத் தின்று ஊனைப் பெருக்குதல்

என்று மிக மனம் நொந்து, மக்கள் ஊனைத் தின்று ஊனைப் பெருக்கும் வழக்கத்தை மேற்கொண்டிருப்பின், எவ்வாறு அருள் நெறி உலகில் நிலைபெறும் என்று ஏங்கி வருந்துகின்றார். உலகில் அருள்நெறி யென்னும் ஒளி நெறி நிலைபெற வேண்டுமாயின் கொலைத்தொழில் அறவே ஒழிய வேண்டும். கொல்லாமையாகிய நெறி குவலயமெலாம் பரவி ஓங்கவேண்டும். மன்னுயிரனைத்தையும் மக்கள் தம்முயிர்போல் எண்ணி வாழும் அன்பு நெறி எங்கும் சிறக்கவேண்டும். இன்னும் தவம் என்பது இத்தன்மைத்தெனக் கட்டுரை கூறப்போந்த விடத்தும் நாயனார்,

> உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
> அற்றே தவத்திற்கு உரு

இன்னா செய்யாமையே தவம்

என்று உலகிலுள்ள ஓருயிர்க்கும் தீங்கு செய்யாதிருத்தலே உயரிய தவமென எடுத்தோதுவாராயினர். ஆகவே தீய எண்ணங்களும், தீய சொற்களும், தீய செயல்களும் தீமையே பயக்குமாதலால், மனம், மொழி, மெய்யாகிய மூன்றினும் தீமையை விலக்க வேண்டுமென்பது பெறப்படுகின்றது.

தீவினை தேயுமாயின் நல்வினை ஓங்கி வளருமென்பது ஓர் உண்மையாகும். தீமை பயக்கின்ற மறம் தளர்ந்து அறம் வளர்ந்தோங்க வேண்டுமாயின் அன்பென்னும் அருங்

குணம் போற்றி வளர்க்கப்படவேண்டும். அன்பு என்பது

அன்பின் தன்மை

தொடர்புடையார் மாட்டு நிகழுகின்ற ஓர் உள்ள நெகிழ்ச்சியாம். அன்பின் தன்மை கூறவந்த ஆசிரியர் நக்கீரர், 'குடத்துள் விளக்கும் தடற்றுள் வாளும் போல' இதுகாண் அன்பென்று தந்து காட்டலாகாது. 'அன்புடையரான குணங்கண்ட விடத்து இவை யுண்மையான் ஈங்கு அன்புண்டென்று அனுமித்துக் கொள்ளற்பாற்று' என்று கூறுகின்றமையால், அன்பு இத்தன்மைத்தெனக் கட்டுரை கூறுதல் இயலாதென்பதும், அவ்வன்பால் நிகழும் புறச் செயல்களாலேயே அஃதுண்டென்று அனுமானத்தால் உணரப்படுமென்பதும் விளங்கும். இவ் அன்புதான், நிகழுமிடநோக்கிப் பல பெயரால் வழங்கும். எல்லாம் வல்ல முழுமுதற் பொருளால் இறைவன்பால் வைத்த அன்பு பக்தியென்றும், மனையாள்பால் வைத்த அன்பு காதல் என்றும், ஒத்தவர்பால் வைத்த அன்பு நட்பென்றும் இவ்வாறு பல பெயர்கொண்டு விளங்கும். இவ் அன்பு சிறிது சிறிதாக வளர்ந்து, தம்முடன் தொடர்பிலார் மாட்டும், ஏனைய அறிவாற் குறைந்த உயிர்ப்பொருள்கள் மாட்டும் பரவிச்செல்லும்பொழுது அருள் என்னும் பெயரா லமையும். இவ்வுண்மையை 'அன்பின் குழவி அருள்' என்று நாயனூர் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தார். அன்பிலாரெல்லாரும் எப்பொழுதும் தம் நலமே, பெரிதாகக் கருதும் தன்மையில் அமர்ந்திருப்பாரென்பதும், அன்புடையார், பொதுநலம் பேணும் பெருமை வாய்ந்து, தமக்கென வாழாது பிறர்க்குரியராய் வாழ்ந்து வருவார்கள் என்பதும்,

> அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
> என்பும் உரியர் பிறர்க்கு

என்னும் திருக்குறளால் தெளிவாக விளங்கும். அன்புடை யார் எப்பொழுதும் இன்சொல் இயம்பும் இயல்புடையரா யிருப்பரே யல்லாமல், மறந்தும் வன்சொல் வழங்கார். அன்புடையாரது உள்ளம் பிறர் துன்பங் கண்டு பொறுமல், வெந்தழலிற்பட்ட மெழுகு போல் உருகி அத்துன்பத்தை ஒல்லும் வகையால் நீக்க முன்னின்று முயலும். தம்மிடம் உள்ள பொருளை உண்ண உணவும், உடுக்க உடையும் இல்லாத வறியார்க்கு வழங்கி அவர் துயரைக் களைய அன்புடையார் முன்வருவர். தம் மிடத்துச் செல்வம் சுருங்கிய காலத்தும், 'ஆற்றுப் பெருக் கற்று அடிசுடும் அந்நாளும், அவ்வாறு ஊற்றுப் பெருக்கால் உலகு ஊட்டல்போல்,' தம்மால் இயன்ற அளவு அறஞ் செய்வதில், அன்புடையார் சிறிதும் தளரார். பசிப்பிணி யால் வருந்தும் மக்களுக்கு ஆருயிர் மருந்து என்று அறிஞர் கூறுகின்ற அன்னம் அளித்தல் தவத்தினும் பெரியதோர் தகுதியுடைய அறமாகும்.

அன்பும் அறமும்

ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின்

என்று நாயனர் கூறுகின்றமையால்,பசிநோயைப்பொறுத்துப் புற்றுய் மரமாய் வற்றிக் கிடந்து தவஞ் செய்யும் உயரிய ஆற் றலைப் பார்க்கிலும், அப்பசியை மாற்றி, அதனல் வருந்தும் உயிர்க்கு இன்பம் அளித்தல் உயர்ந்ததாகும் என்பது பெறப் படுகின்றது. பொருளுடையவர், பசியால் வருந்தும் ஏழைக ளுடைய பசியைத் தீர்த்து அவ்வாருகிய அழகிய பெட்டி களிலேயே, தம் பொருளை அமைத்துப் பாதுகாக்கவேண்டும் என்று நாயனர் நன்ருகக் கூறுகின்ருர். 'இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம், விருந்தோம்பி வேளாண்மை செய்தற்

பொருட்டே' யாகுமென்பது நாயனாருடைய அடிப்படையான கருத்தாகும்.

இவ்வாறு அறத்தைப் பாதுகாக்கின்ற பெரியார், அடக்க முடையாராய், நல்லொழுக்க முடையாராய், நடுநிலை தவறாதவராய், பொறுமை யுடையராய் வாழ்ந்து வருவர். தன்னலம் கருதியேனும், அறியாமையாலேனும், ஒருவன் தீமை செய்தவிடத்து, அதனைப் பொறுத்தல் பெரியார் தன்மையாகும். இவ்வாறு பிறர் செய்த தீமையைப் பொறுத்துக் கொள்வது நன்றேயெனினும், அத்தீமையை மறத்தல் அதனினும் நன்று. இவ்வாறு மறந்தலோடமையாது தீமை செய்வார்க்கு அவர் காணும்படி நன்மையும் செய்தலே சான்றாண்மைக்கு அழகாகும். இன்னா செய்தாரை ஒறுக்கும் உபாயத்தை நாயனார்,

**தீமை செய்தார்க்கு நன்மை செய்தல்**

> இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
> நன்னயம் செய்து விடல்

என்று அருள்கின்றார். ஒருவனுக்குத் துன்பம் செய்தவர்களையும், தீங்கு இழைத்தவர்களையும் ஒருவன் தண்டிக்கும் முறை யாதெனின் தீமை செய்தவர் நாணும்படி அவர்க்கு உயரிய நன்மை செய்துவிடலாகும். தீமை செய்தவனுக்கு நன்மையே ஒருவன் செய்யுங்கால், அவன் நெஞ்சே அவனைச் சுட்டுணர்த்தி நல்வழிப்படுத்தும்.

> இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
> என்ன பயத்ததோ சால்பு

என்றமையால், இன்னா செய்தார்க்கும் இனியவை செய்தலே சிறந்ததாகும் என்பது இனிது விளங்கும். இவ்வுண்மை,

> அறத்திற்கே அன்பு சார்பென்ப அறியார்
> மறத்திற்கும் அஃதே துணை

என்னும் குறளாலும் விளங்கும். அறத்தை வளர்ப்பதற்கு அன்பு அவசியமாதல் போல, மறத்தைக் கொன்று ஒழிப்பதற்கும், அன்பே கருவியாய் அமைந்துள்ளது.

**துறவற நெறி**

இனித் துறவறமென்னும் உயரிய நெறியில் நிற்கும் பெரியார், இவ்வுலகின் நிலையாமையை உணர்ந்து, உடலோடு உயிர் ஒன்றி நிற்கின்ற காலத்தே மறுமைப்பயனை அளிக்கவல்ல முறையினைத் தேர்ந்து ஒழுக ஆர்வம் கொண்டு, இருவகைப் பற்றையும் அறவே ஒழிக்க ஆன்றோராவர். சுருங்கச் சொல்லின், புறமாகிய செல்வத்தின்கண்ணும் அகமாகிய உடம்பின்கண்ணும் உள்ள பற்றை அறவே விடுதலே துறவெனப்படும். யான், எனது என்னும் செருக்கொழிந்து ஐம்பொறிகளை வாயிலாக உடைய ஐம்புலன்களும் அவிந்து, இறைவனை நினைந்து பிறவாமையாகிய பெரும்பேறு பெறுவதற்குத் தவம் புரியும் பெரியோரே பற்றற்றவராவர். 'பற்று அற்ற கண்ணே பிறப்பறுக்கும்' என்றமையால் உலகப்பற்று ஒழிந்த இடத்து, பிறப்பும் ஒழியும் என்பது பெறப்படும். இத்தகைய இருவகைப் பற்றையும் ஒழிப்பதற்கு யாதொரு பற்றும் இல்லாத இறைவனைப் பற்றுதலே நெறியாகும். இவ்வாறு உயரிய துறவற நெறியில் நின்ற பெரியார், 'பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும் செம்பொருள் காணும் மெய்யறிவு' பெறுவர். இத்தகைய மெய்ஞ்ஞானம் பெற்றோர், கற்றோர் யாவரும் அறியா அறிவினராய்க் கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையராய் உலகில் வாழ்ந்து வீடு பெறுவர்.

இத்தன்மையாளரது பெருமை, இவ்வளவென்று கூறுதல் இயலாதென்பது நாயனார் கருத்தாகும்.

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை யெண்ணிக்கொண் டற்று

என்னும் திருக்குறளால் இவ்வறவோர் பெருமை அளவிடற் கரிதாம் என்பது இனிது அறியப்படும். உண்மையாக உலகப்பற்றற்ற உயர்ந்தோர் பெருமையை, நாயனார் பலபடப் பாராட்டிக் கூறினரேனும், அகத்தில் களவொழுக்கமும், புறத்தே துறவொழுக்கமும் உடைய போலியரை, நெல்லினின்றும் பதரை வேறாகப் பிரிப்பதுபோல, நமது அறிவாற் பகுத்துணர்ந்து உண்மைத் துறவிகளையே போற்ற வேண்டுமென உறுதியாகக் கூறுகின்றார். அகத்தில் அன்பில்லாதார் செய்யும் பூசனையும், பூவும் நீரும் பயன் படாதவாறு போல, அகத்துறவில்லாத போலியர், புறத்தே துறவியர்க்குரிய உடைபுடுத்தலாற் போந்த பயன் யாதுமில்லை. உலகில் உயர்ந்தோர் பழிக்கும் செயல்களை ஒருவி

உண்மைத் துறவும், போலித் துறவும்

மனத்தூய்மையுடைய உள்ளத்துறவுடையோர் சடை முடியும், மரவுரியும் தரித்துக் கந்த மூலம் புசித்துக் கானகத்திடை வதிந்து கடுந்தவம் புரிய வேண்டிய அவசியமில்லை.

மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழித்து விடின்

என்று நாயனார் கூறுகின்றமையால், ஒழுக்கமே பெரிதென்பதும், உடையாலும் சடையாலும் உயர்வு பெற முடியாதென்பதும், உள்ளங்கையின் நெல்லிக்கனிபோல்

விளங்கும். உண்மையாக ஆராயுங்கால், காட்டிடைச் சென்று கந்தமூலம் புசித்துக் கடுந்தவம் புரியும் பெரியோரைப் பார்க்கிலும் நாட்டிடை வாழ்ந்து நற்றவம் செய்யும் நல்லோரே நனி சிறந்தவர் என்பது நூலறிந்த நுண்ணறிவுடையோர் கருத்தாகும். பழுதறு தீங்கனிகள் நிறைந்து மணங் கமழ்ந்து மனத்தையும் கண்ணையும் ஒருங்கே கவரும் கவின்பெறு சோலையின் நடுவே, பசித்திருந்தும் அப்பழங்களின்மேற் செல்கின்ற ஆசையை அடக்குவதே அடக்கமென்று சிறப்பாகச் சொல்லப்படும். அதுபோன்று ஓவியத்தில் எழுதவொணு உருவமும், குழலும் யாழும் அமிழ்தும் குழைத்தாற்போன்ற மெல்லிய குரலும், அன்ன மன்ன மென்னடையும் அமையப்பெற்ற மங்கையர் நிறைந்து, மாசறு பொன்னும், மணியும், தூசியும், துகிரும் மலிந்து நிரம்பித் திகழ்கின்ற மாநகரத்தி லிருந்துகொண்டு அப்பொருள்களின் மேல் செல்லும் இச்சையை ஒழித்து இறைவன்பால் மனத்தைச் செலுத்தும் மாட்சியே சிறந்ததாகும். அதுவன்றி அனுபவப் பொருள்கள் யாதுமின்றிக் கல்லும், முள்ளும் கலந்து விளையாடும் கானகத்தி லிருந்துகொண்டு, மனத்தை யடக்கி விட்டதாகச் சொல்வது கவிநயமே யன்றி உண்மையன்று. ஏனெனில், ஐம்பொறிகளையும், மனத்தையும் கவரத்தக்க பொருள்கள் ஒன்றுமில்லாதவிடத்து, மனத்தை அவைகள்மேற் செல்லவொட்டாது அடக்கவேண்டிய அவசியமும் இன்றாய்விடும். அன்றிக் காட்டில் சென்ற பின்னரும், மனம் தான் விட்டகன்ற பொன்னையும், பொருளையும், பெண்ணையும் நினைந்து பின்னிற்குமாயின், அத்தகைய உள்ளமுடையான் துறவி யல்லன் என்பது ஒருதலையாம். ஆகலின் மாளிகையி லிருந்தாலும் மலைக் குகையில் வதிந்தாலும் மனத்தை யடக்கித் தூய

நெறியாய துறவற நெறிபற்றி ஒழுகுதலே சீரும் சிறப்பும் தருவதாகும் என்பது நாயனுர் கருத்தாகும்.

நமது நாட்டில் இப்பொழுது காணப்படுவதுபோலவே, அக்காலத்திலும் நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து வாழ்ந்து வந்தனர் என்பது திருக்குறளின் வாயிலாகத் தெளிவாக விளங்குகின்றது. புலியின் தோல் போர்த்து மேயும் பசுப்போல மனத்தின்கண் மாசுடையராய் மறைந்தொழுகும் மாந்தர் உலகில் பலராவர். இவ்வாறே பசுத்தோல் போர்த்த புலிகளும் உலகில் உண்டு. இத்தகைய போலித் தவத்தினரைப் பூத சதுக்கத்தினின்றும் பூதம் வெளிப்பட்டுக் காத நான்கும் கடுங்குரல் எழுப்பிப் புடைத்துண்ணும் என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. இப்பெற்றியராய போலித் துறவிகளைப் போக்கி, உண்மைத் துறவிகளையே இல்வாழ்வான் உண்டி முதலியவற்ருல் பேணிப் போற்றவேண்டும்.

பசுத்தோல் போர்த்த புலிகள்

> துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
> இல்வாழ்வா னென்பான் துணை

என்று நாயனுர் கூறுமிடத்து, காவியுடை யுடுத்தவரையெல்லாம் கண்டு வணங்கி, அவர் குறையை நிறை செய்ய வேண்டுமென்று கருதினாரல்லர். ஆகவே துறவறத்திற்குரிய உயரிய ஒழுக்கத்தில் வழுவா திருப்பவரே துறவோரென்பதும், அவரே இல்வாழ்வாரால் போற்றப்படுதற்குரியரென்பதும் எளிதில் விளங்கும்.

இத்தகைய மெய்த்துறவிகளே மெய்யுணர்ந்து, வினையின் நீங்கிய தம் விளங்கிய அறிவினால், மக்களாய்ப் பிறந்

தார்க்கு உறுதிப் பொருள்களை எடுத்துரைக்கும் மறை மொழிதானே மந்திரம் எனப்படும்.

> நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
> மறைமொழி தானே மந்திரம் என்ப

என்னுந் தொல்காப்பியனார் பெரு வாக்காலும்,

மறைமொழி

> நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
> மறைமொழி காட்டி விடும்

என்னும் திருக்குறளாலும் இவ்வுண்மை தெளிவாக அறியப் படும். உலகில் பல சமயநெறிகளை நிறுவிய பெரியாரெல் லாரும், தாம் மெய்யாகக் கண்ட உண்மைகளை உலகமெல்லாம் உணர்ந்து உய்தற்பொருட்டு, உலகினர்க்கு மொழிகளின் வாயிலாக அருளிச் செய்வர். இம்மொழிக ளடங்கிய நூல் களே மறையென்று உலகில் வழங்கும். இப்பெருமை வாய்ந்த பெரியார், அறவோர் என்னும் சிறப்புப் பெயரால் ஆசிரியரால் அழைக்கப் பெறுகின்றனர்.

> அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
> செந்தண்மை பூண்டொழுக லான்

என்னும் குறளால், அறவோரே அந்தண ரென்றும், அரு ளாளர் என்றும் நாயனார் சிறப்பித்துள்ளார். இல்லறத் திற்கு அன்பு அடிப்படையாய் விளங்குதல்போலத் துறவறத் திற்கு அருள் அடிப்படையாகும். பொருளிலார்க்கு இவ் வுலக மில்லாதவாறு போல, அருளிலார்க்கு அவ்வுலக மில்லை யென்று ஆசிரியர் தெளிவாகக் கூறுகின்றார்.

இனி, இல்லறம் நன்றோ? துறவறம் நன்றோ? என் னும் ஆராய்ச்சி சில இடங்களில் நிகழினும் இத்தகைய கணக்

காயர் பாடத்தால் பெரும் பயன் அதிகம் இன்றென்பது திருக்குறளை நன்கு ஓதி யுணர்ந்த பெரியார் கருத்தாகும். நாயனர், இவ்விரு நெறியையும் இரு கண்ணெனவே போற்றுகின்றாராதலின், அவர் மனத்தில் இதனின் இது சீரியது என்னும் எண்ணமே எழுந்ததாகத் தோன்றவில்லை. 'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' யென்று இல்லறத்தைச் சிறப்பித்த நாயனர், 'தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி வலைப்பட்டார் மற்றையவர்' என்று துறவறத்தின் சிறப்பைக் கூறினர்.

இல்லறம் நன்றோ? துறவறம் நன்றோ?

அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவ தெவன்

என்று இல்லறத்தை வியந்து கூறிய நாயனர்,

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம்

என்று துறவறத்தைப் பாராட்டினர். ஆகவே இவ்விரு பெரு நெறியில் எந்நெறியில் நின்றாலும், அறத்தைப்போற்றி வளர்க்கும் பெரியார், அந்தமில் இன்பத்து அழிவில் வீடு அடைவது ஒரு தலையா மென்பதே நாயனர் கருத்தாகத் தெரிகின்றோம்.

## ௪. அரசியல் முறை

நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்

நம் தமிழ் நாட்டில் அரசியல் நடாத்திய மூவேந்தரது வரலாறு பெரும்பாலும் அறியாமை யென்னும் ஆரிருள் வாய்ப்பட்டு, விளக்கமாக அறிதற்கு வழியற்றுக் கிடக்கின்றது. தமிழகத்தின்கண் அக்காலத்தில் ஆட்சி புரிந்த அரசரெல்லாரும் தமது உரிமைகள் எவ்வகையாகவும் வரையறுக்கப்படாமல், அரசியல் நடாத்தினர் என்பது சில சரித்திர ஆசிரியர்களின் கருத்தாகும். இக்காலத்தில், பல நாடுகளில் காணப்படுகிற குடியரசு என்னும் முறை அக்காலத்தில் தமிழகத்தில் இல்லை யென்றே சொல்லலாம். ஆனால் அரசன் நாடாளுகின்ற காலத்தில் குடிகளின் நன்மையைக் கண்ணும் ஆவியுமாகக் கருதி வளர்த்தானென்பதும், தனக் களவிறந்த அதிகார மிருந்தபோதிலும், அதனை அறத்தின் வழிச் செலுத்தி ஆட்சி செய்தானென்பதும் நன்கு தெரிகின்றன. இவ்வாராய்ச்சியில், தமிழ் நாட்டு அரசியல் முறைகளை விளக்கமாக எடுத்துரைத்த தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் கருத்துக்களைத் தெரிதல் அவசியமாகும்.

*தமிழ் அரசரின் தன்மை*

அரசனது இயல்புகளை ஆசிரியர் திருவள்ளுவனார் விரிவாக எடுத்துரைக்கின்றார். அரசன், இன்ன குணங்களுடையவனா யிருக்கவேண்டும், இன்ன குற்றங்களினீங்கி யிருக்கவேண்டும், இன்ன அங்கங்களை யுடையவனாய்

அரசியல் நடத்த வேண்டும் என்ற அமைதிகளெல்லாம் இப்பொய்யா மொழியின்கண் நன்றாக வகுத்துரைக்கப் பெற்றுள்ளன. முறை தவறாது அரசியல் நடத்தி மக்களைக் காப்பாற்றும் மன்னவன் இறைவனோடு ஒப்பவைத் தெண்ணப்படுவானென்றும், மனத்திண்மையும், அறிவும், ஊக்கமும் அரசனுக்கு இன்றியமையாதன வென்றும், தன்னைக் காண விரும்புவோர்க் கெல்லாம் எளிதில் காணக்கூடியவனாய், கடுஞ்சொல் வழங்காது இன்சொல் சொல்லும் இயல்புடையவனாய், அரசன் அமைந்திருக்க வேண்டுமென்றும், செருக்கும் சிறுமையும் இல்லாது, குற்றமும், சீற்றமும் தன்னைச் சாராது அரசியல் நடத்த வேண்டு மென்றும், நாயனார் அருளுகின்றார். இத்தகைய உயரிய குணங்களெல்லாம் அமையப் பெறுவதற்கு அரசன் கல்வி யறிவுடையவனா யிருக்க வேண்டுமென்பது சொல்லாமலே அமையும். மணற்கேணியில் தோன்றுகின்ற அளவாக நன்னீர் சுரத்தல் போலக் கல்வியை முனைந்து கற்க, கற்க, அறிவு மேம்பட்டு வளரும். இத்தகைய அறிவுடைய அரசன் எல்லாமுடையவன் என்றும், அறிவில்லா அரசன் என்னுடையனேனும் இலனேயாவன் என்றும் நாயனார் நன்றாய்க் கூறுகின்றார். அறிவில்லாத ஒருவனிடமுள்ள பொன்னும், பொருளும், மாதரும், மக்களும் மற்றெல்லாம் பயனற்றனவாம். அறிவே அரசனுக்கு இறுதி வாராமல் காக்கும் அருங்கருவியாகும்; பகைவர் அழிக்கலாகா அரணாகும்.

நல் அரசின் குணங்கள்

இத்தகைய அறிவு அமையப்பெற்ற அரசன், பெரியாரைத் துணைக்கொண்டு, சிற்றினஞ் சேராது அரசியல் நடத்த வேண்டும். விண்ணினின்று விழும் மழைநீர்,

யாதொரு நிறமும், சுவையும் அற்றதாய் இருப்பினும், அந்நீர் எந்நிலத்தில் வீழ்ந்து சேருகின்றதோ, அந்நிலத்தின் நிறத்தையும் பண்பையும் ஏற்றுக்கொள்ளுதல் போல, அரசனது மனப் பண்பும் அவன் சார்ந்து நிற்கும், மக்களது இயல்பால் மாறுதலடையும். நல்லாரைத் துணைக்கொண்டால் அரசன் நன்னெறியில் நின்று செங்கோல் செலுத்துவான்.

அரசனைச்சுற்றியுள்ளோர்

தீயாரைத் துணைக்கொண்டால் தீய நெறியில் நின்று கொடுங்கோல் மன்னனாவான். ஆதலால் அரசன் எப்பொழுதும் அறனறிந்து மூத்த அறிவுடையாரைத் துணைக்கொண்டு அரசியல் நடத்த வேண்டும் என்று ஆசிரியர் அருளுகின்றார். நம் பண்டைத் தமிழரசனைச் சூழ்ந்து, எப்பொழுதும், ஐம்பெருங் குழுவும், எண்பேராயமும் இருந்தனவென்று சிலப்பதிகாரம் முதலிய சங்க நூல்களால் அறிகின்றோம். அரசன் ஓர் அரும் பெருந் தொழிலைச் செய்ய முயலுமுன், தன்னைச் சுற்றியுள்ள அறிவுடையாரில், அத்தொழில் முறையில் நூலறிவோடு நுண்ணறிவும் அமையப் பெற்றவர்களுடன் ஆலோசித்து, அவர்கள் கருத்தைத் தழுவியே, தான் எண்ணிய கருமங்களைத் திண்ணமாய் முடிப்பான்.

அரசன் ஊக்கம் பெரிதும் உடையவனாய்த் தான் எண்ணிய தொழில்களை ஓயாது, உலையாது சலிப்பின்றிச் செய்யும் மன உறுதியுடையவனா யிருக்கவேண்டும். ஒரு தொழிலைச் செய்யத் தொடங்கு முன் அதனைப் பலவகையாலும் ஆராய்ந்து தெளிந்து துணியவேண்டும்.

ஊக்கமுடைமை

எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு

என்று திருக்குறள் கூறுகின்றது. இவ்வாறு துணிந்தபின் எவ்வாற்றானும் பின் வாங்காது திண்ணமாய் முன்னின்று முயன்று அதனை முடிக்கவேண்டும். அரசன் மன உறுதி யுடையவனாயிருப்பின், செயற்கரிய செயல்களும் மிக எளி தில் முற்றுப்பெறும்.

> எண்ணிய எண்ணியாங்கு எய்துவர் எண்ணியார்
> திண்ணிய ராகப் பெறின்

என்று இவ்வுண்மையை நாயனார் எடுத்துரைக்கின்றார். ஓர் அருந்தொழிலை முடிக்க நினைக்கும் அரசன், மிக்க மன வுறுதியுடன் முயல்வானேயானால், அவன் எண்ணிய கருமம் எண்ணியவாறே முற்றுப்பெறு மென்பது திண்ணம். விதி வலிதே யாயினும், அவ்விதியையும் ஊக்கத்தால் வெல்லலாம் என்பது ஆசிரியர் கருத்தாகும்.

> ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
> தாழாது உஞற்று பவர்

என்பது நாயனார் திருவாக்காகும்.

போர் செய்து பொருள் ஈட்டுதல் அரசற்குரிய முறை யென்று நமது அறநூல்கள் கூறுகின்றன. ஆயினும் போர் அறப்போரென்றும், மறப்போரென்றும் இருவகைப்படும். இவ்வகையில், மறப்போர் செய்யாது, அறப்போர் செய்வதே அரசனுக்கு ஆக்கம் தருவதாகும். இவ்வாறு அறப்போர் செய்யும் அரசன், பல படைகளை யுடையவனாய் விளங்கி னாலும், பகைவர்மேல் போர் செய்யத் தொடங்கும் பொழுது, காலமும், இடமும், எதிரியின் வலிமையும் அறிந்தே போர்க்கு முற்பட வேண்டும். தனக்கு வெற்றியும், மாற்றரசனுக்குத் தோல்வி யும் தரவல்ல, தகுந்த இடத்தை அரசன் போர்க்களமாகக்

இடம் தேர்தல்

கொள்ளவேண்டும். தனக்குரிய இடந்தவறிச் செல்லும் அரசனது படை இடர்ப்படுமென்பதில் சிறிதும் ஐயமில்லை. தண்ணீரில் வாழுகின்ற முதலை, தனக்குரிய நீர் நிலையில் இருக்கு மளவும், மிக வலிமையுடையதாய், அவ்விடம் வருகின்ற யானையையும் இழுத்துக் கொல்லும் ஆற்றலுடைய தாய் விளங்கும். ஆனால் அம்முதலை தன்னிலை தவறித் தரைசேருமாயின், ஒரு சிறு நாயும் அதனை இழுத்துச் செல்லும் இயல்புடையதாகும். அது போன்று, அரசன் தனக்கு ஏற்ற இடத்துப் படை வகுத்துப் போர் செய்வானா னால், வெற்றி பெறுவான். இல்லாவிட்டால் பகைவர் தன்னி லும் படையிலும் பலத்திலும் குறைந்தவரா யிருப்பினும் தோல்வியே அடைவான்.

தனக்கு ஏற்ற இடத்தைத் தேர்ந்து அமைத்துக் கொள்ளுதல் போல அரசன் தனக்கு ஏற்ற காலத்தையும் அறிந்து போர் தொடங்கவேண்டும். ஞால முழுதையும் கைப்பற்றக் கருதியிருக்கும் அரசர் காலம் கருதியிருப்பர் என்று நாயனர் மிக அழகாக அருளுகின்றார். நீரோடையில் ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும் வாடியிருக்கும் கொக்கைப் போல, தனக்கேற்ற காலம் வரும் வரையில் பசுப்போ லிருந்து பின் பகைவர்மேல் புலிபோல் பாய்ந்து அரசன் வெற்றி பெறுவான்.

காலம் தேர்தல்

கூகை காக்கையைப் பார்க்கிலும் மிக வலிமையுடையதே யானாலும் அது பகலில் வெளியே வருமானால் காக்கை அதனைக் குத்திக் கொன்றுவிடும்; ஆனால் இரவில் கூகை யிருக்குமிடத்திற்குப் போவதற்குக் காக்கை யஞ்சும். அது போல், அரசன் தனக்கு வலிய காலமும் பகைவர்க்கு வலி குன்றிய காலமும் தேர்ந்து போர்செய்ய முற்பட வேண்டும் இதனையே,

பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது

என்று நாயனார் அருளினர்.

மேற்கூறிய அனைத்தும் அமைந்திருந்தாலும், அரசன் கொடுங்கோல் மன்னனாய் இருப்பானானால், அவனுக்கு வெற்றி கிடைப்பது அரிதாகும். குடிகளின் நலத்தைத் தன்னலம்போல் பேணிப் போற்றுகின்ற அரசன் எத் தொழிலை முயன்றாலும் வெற்றி பெறுவான். அரசனுக்கு வெற்றி தருவது அவனது வேலும் படையும் அல்ல. அவனது செங்கோல் ஆட்சியே யென்று ஆசிரியர் கூறுகின்றார்.

செங்கோன்மை

வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோல் அதூஉம் கோடா தெனின்

என்ற குறளால் மேற்கூறிய உண்மை விளங்கும். தனது குடிகளைத் தன்னோடு இணக்கிக்கொண்டு, அரசியல் நடாத்தும் மன்னவன், இவ்வுலகனைத்தையும் ஒரு குடைக்கீழ் அரசாளும் பெருமை வாய்ந்தவனாய் விளங்குவான். இவ்வுலகத்தை யெல்லாம் காக்கும் அரசனைக் காப்பது அவனது செங்கோன்மையே யன்றி வேறன்று. கொடுங்கோல் அரசன் ஆளும் நாட்டில் கடும்புலி வாழும் காடு நன்றே யென்றாற்போலக் குடிகளை வருத்தி வரிவாங்கும் அரசனுக்கு அக் குடிகள் அழுத கண்ணீரே அழிக்கும் படையாகும் என்று நீதிநூற் கூறுகின்றது.

அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை

என்று நாயனார் அருளுகின்றார்.

இனி அரசாங்கம் நடைபெறுவதற்கு இன்றியமையாத பொருளை எவ்வாறு அரசன் பெற்று அரசியல் நடாத்த வேண்டுமென்பது ஆராய்தற்குரியதாகும். பொருளை மிகுதியாகவுடைய அரசனே பகைவர் அஞ்சும் பான்மையில் அமைந்து, தான் எண்ணிய தொழில்களை எண்ணியாங்குச் செய்யும் ஆற்றல் வாய்ந்தவனா யிருப்பன்.

பொருள் உடைமை

இவ்வுண்மை,

> பொன்னி னாகும் பொருபடை, அப்படை
> தன்னி னாகும் தரணி, தரணியில்
> பின்னை யாகும் பெரும்பொருள், அப்பொருள்
> துன்னுங் காலைதுன் னாதன வில்லையே

என்னும் சிந்தாமணிச் செய்யுளால் சிறந்து விளங்கும். அரசனுக்குரிய பொருளை வகுத்துரைக்க வந்த நாயனார்

> உறுபொருளும் உல்கு பொருளும் ஒன்னார்த்
> தெறுபொருளும் வேந்தன் பொருள்

என்று கூறுகின்றார். உறுபொருளாவது தனது முயற்சியின்றி அரசனுக்குத் தானாகவே வந்து சேரும் பொருளாகும். பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்து மாண்டுபோன குடிகளின் புதையற் பொருள்களும், தாயத்தாரில்லாது வழிதூர்ந்த மக்களின் பொருள்களும், அரசனுக்குரிய பொருளாம். இனி 'உல்கு பொருள்' என்பது சுங்கத்தால் வரும் பொருள் என்று பொருள்படும். மிகப் பழைய காலத்தே தமிழகத்து வாழ்ந்து வந்த மக்கள் ஐரோப்பிய நாட்டில்

பொருள் ஈட்டு முறை

புதையற்பொருள்

அக்காலத்தில் தலைமை வாய்ந்திருந்த யவனருடன் (Greeks) வாணிகம் செய்து வந்தார்கள் என்பது சரித்திர உண்மையாகும். வியாபாரத்தாற் கிடைக்கும் பெரும் பொருளுக்காகத் தமது நாட்டைவிட்டுத் தமிழ்நாடு போந்து, தமிழ் மக்களுடன் வேற்றுமையின்றிக் கலந்துறைந்த யவனருடைய மாளிகைகள், காவிரிப்பூம் பட்டினத்தில் கண்ணுக் கெட்டாத தூரம் விண்ணளாவி இருந்தன வென்று சிலப்பதிகாரம் கூறுகின்றது.

சுங்கப்பொருள்

கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்
கலந்திருந் துறையும் இலங்குநீர் வரைப்பும்

என்றும்,

கயவாய் மருங்கில் காண்போர்த் தடுக்கும்
பயனற வறியா யவனர் இருக்கையும்

என்றும் காணப்படுகிற குறிப்புக்களால், யவனர் நம் தமிழ் நாட்டில் அக்காலத்தே குடிபுகுந்து வாணிகம் செய்து பெரும் பொரு ளீட்டினர் என்பது தானே போதரும். இவ்வாறு மரக்கலங்களிலும், வேறு வழிகளிலும், தன் நாட்டெல்லைக் குள் வந்தியங்கிய பொருள்களுக்கு அரசன் 'சுங்கம்' என் னும் வரி வகுத்திருந்ததாகத் தெரிகின்றது.

நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்

எனப் பட்டினப்பாலை கூறுவதால், அக்காலத்தில் வாணி கம் செய்யப்பெற்ற பொருள்கள் இத்தன்மையன என்று

அறியலாகும். அரசன் சுங்கமென்னும் வரியை வணிகருக்கு அமைத்ததுபோல, உழுதுண்டு வாழும் பெரு மக்களிடமும் ஆறிலொன்று இறை பெற்றான் என்று அறியப்படுகிறது.

இனி அரசன் பகைவர்மேற் படையெடுத்துச் சென்று மாற்றாரைப் போரிற் புறங்கண்டு, அவரிடம் பெறுகின்ற கையுறையும், கப்பமும் அரசாங்கத்திற்குரிய பொருளாகும்.

வெற்றிப்பொருள்

அக்காலத்தில் தமிழ் நாட்டில் அடலேறென விளங்கிய **கரிகால் பெருவளத்தான்** என்னும் பெயர் பெற்ற சோழ வேந்தன், போர்க்கோலம் கொண்டு, வடநாடு சென்று, தன்னை எதிர்ப்பாரும், பொருவாரும் இன்றி இமயமலையளவும் சென்று, அதற்கப்பாலும் தன்னைச் செல்லவொட்டாது குறுக்கிட்டுத் தடுத்த அம் மலைமீது கடுங் கோபங் கொண்டு, தன் புலி முத்திரையை அம்மலைமேல் பொறித்து, மீண்டும் தமிழ்நாடு நோக்கி வரும்பொழுது,

> மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்
> கோனிறை கொடுத்த கொற்றப் பந்தரும்
> மகத நன்னாட்டு வாள்வாய் வேந்தன்
> பகைப் புறத்துக் கொடுத்த பட்டி மண்டபமும்
> அவந்தி வேந்தன் உவந்தனன் கொடுத்த
> நிவந்தோங்கு மரபின் தோரண வாயிலும்

பெற்றான் என்று சிலப்பதிகாரம் முழங்குகின்றது. இவ்வாறு அரசன் பெறும் பொருளும் அரசாங்கத்திற்கே உரிய பொருளாம்.

வரிவாங்கும் முறை

குடிகளிடம் வரிவாங்கும் பொழுது, அரசன் எவ்வாற்றானும் அவர்களை வருத்தி வாங்குதல் கூடாது. குடிகள் தம் பொருளை அன்போடும் அருளோடும் அரசனுக்குக் கொடுக்க வேண்டுமேயன்றி, அவர்கள் மனம் நொந்து கொடுக்கும் இறைப்பொருள், அரசனுக்குக் கேடு பயப்பதாகும் என்பது நாயனார் பலவிடங்களில் வற்புறுத்துகின்ற உண்மையாகும். 'அழக்கொண்ட வெல்லாம், அழப்போம்' என்றமையால் குடி கொன்று இறைகொள்ளும் கோமகன் கெடுவது ஒரு தலை யென்பது நன்கு உணர்த்தப் பட்டது.

போர் செய்து பொருளீட்டல் அரசற்குரிய முறையேயெனினும், அரசன் அறப்போர் செய்ய வேண்டுமே யன்றி மறப்போர் ஒரு நாளும் செய்யலாகாது.

> ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
> சான்றோர் பழிக்கும் வினை

அறப்போர் செய்தல்

என்றமையால், அறிவுடையார் பழிக்கும் வினையை அரசன், ஒரு பொழுதும் செய்ய வொண்ணாது என்பது பெறப்படும். இவ்வாறன்றி மறப்போர் விளைத்துச் சேர்த்த பொருளெல்லாம், பச்சை மட்கலத்தில் நிறைத்து வைத்த நீர் போல, நில்லாது அழியும் என்று ஆசிரியர் கூறுகின்றார். அறப்போர் செய்யும் அரசன் மாற்றரசர் படையின்றி வலியிழந்து நிற்குங்கால் அவரை வெல்லுதல் அழகன்று எனக் கருதிப் பெருந் தன்மையோடு, அப்போது அவர் மேல் செல்லாமல், தனது ஆண்மையையும் அன்பையும் ஒருங்கே அமர்க்களத்தில் வெளிப்படுத்திய தன்மை நம்

தமிழ் நூல்களால் அறியப்படுகின்றது. நாயனாரும் இதனை,

> பேராண்மை யென்ப தறுகண் ஒன்றுற்றக்கால்
> ஊராண்மை மற்றதன் எஃகு

என்று அருளினார். பகைவர்மேல் மிக வலிமையோடு போர் செய்தல் ஆண்மையே யாயினும், மாற்றரசனுக்குத் தாழ்வு வந்தவிடத்து அவன் மீது இரக்கங்கொண்டு அன்பு பாராட்டுதலே, ஆண்மைக்கு அணியாகும். இப்பெருந் தன்மை கவிப் புலவராய கம்பர் பெருமானால் நன்கு விளக்கப்பட்டுள்ளது. தன் படைக்கல மிழந்து, தனியனாய் அகப்பட்ட இலங்கையர் கோனது வலியற்ற நிலைகண்ட இராமவீரன், பகைவன் மீது பெருங் கருணைகொண்டு, 'இன்று போய்ப் போர்க்கு நாளை வா வென்று' சொல்லிய பெருந் தன்மையைக் கம்பர்,

**ஆண்மையும் அருளும்**

**இராமனது அருள்**

> ஆளை யாவுனக் கமைந்தன மாருத மறைந்த
> பூளை யாயின கண்டனை யின்றுபோய்ப் போர்க்கு
> நாளை வாவென நல்கின னாளிளங் கமுகின்
> வாளை தாவுறு கோசலை நாடுடை வள்ளல்

என்று அழகாக எடுத்துரைத்தார். இன்னும் பாரதத்தில் படைத்தலைவனான கர்ணனும், வில்லின் வீரனான விசையனும், போர் செய்த காலத்துத் தன் படைக்கல மிழந்து தனியாய் நின்ற கர்ணனை விசையன் பார்த்து, 'இன்று போய்ப் போர்க்கு இனி நாளை வாவென்று' கூறிய வீரத்தன்மையை வில்லிபுத்தூராழ்வார்,

**விசையனது அருள்**

அன்று போர்புரி சேனை யின்பதி யான வீரனை நீ
இன்று போயினி நாளை வாவென இனிதியம் பினனால்
வென்றி கூர்வரி வின்மை யாலடல் வெவ்வ ரக்கரை முன்
கொன்ற காளையை ஒத்த பேரிசை கொண்ட ஆண்மையினான்

என்று வியந்து கூறுகின்றார். இன்னும்,

வீறின்மையின் விலங்காமென மதவேழமும் எறியான்
ஏறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சல்என் றெறியான்
மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையும் எறியான்
ஆறன்மையின் முதியாரையும் எறியான் அயில்உழவன்

என்று அரசனது ஆண்மையோ டளாவிய அருளைச் சிந்தாமணி யாசிரியர் கூறுகின்றார். வேலைக் கையில் தாங்கிய வீர வேந்தன், ஒரு விலங்கை தன் வேலால் எறிந்து கொல்லுதல் இழுக்காமென்று எண்ணி வெறிகொண்ட வேழத்தையும் வெட்டமாட்டான். போர்க்களத்தில் வடுப்பட்ட வீரன் தனக்கு ஒப்பானவனாயிருப்பின், மற்றொருவன் புண் படுத்திய வீரனைத் தான் வேலால் வெல்லுதல் வெற்றியன் றென நினைந்து விலகிப் போவான். தன்னின் இளையாரையும், முதியாரையும், வேலாலெறிவது அறமன்றென் றெண்ணி அவர்மீது படையைச் செலுத்தான் என்று சிந்தாமணி ஆசிரியர் வீரனது அருளின் திறத்தை வியந்து கூறுகின்றார். இன்னும் புறநானூற்றில்,

மாண்ட அறநெறி முதற்றே அரசன் கொற்றம்

என்று கூறுகின்றமையால், அறப் போரால் வரும் பொருளே அரசற்கு ஆக்கம்தருவதா மென்றும், மாநிலங் காக்கும் அரசர் எஞ்ஞான்றும் மறப்போர் செய்யலாகாதென்றும் நன்கு தெரிகின்றது.

இவ்வாறு போர்செய்கின்ற நால்வகைப் படைகளையுடையராய் அரசர் இருந்தாரென்று பழைய நூல்களால் தெரிகின்

றோம். தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாள் படை ஆகிய நால்வகைப் படைகளும் அரசற் குரியனவாகச் சொல்லப்படுகின்றன.

நால்வகைப் படை

உறுப்பமைந்து ஊறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாம் தலை

என்று நாயனார் கூறுகின்றமையால், அஞ்சாது போர்க்களத்தில் நின்று போர் செய்யும் நாற்படைகளையுடைய அரசன் மிகச் சிறந்தோன் என்பது நன்கு விளங்குகின்றது. வீரமும் மானமும் ஒருங்கே யமைந்தவராய், போர்க்களத்தில் பூதவுடம்பை நீத்துப் புகழுடம்பைப் பெறுவதே பெரும் பேறென்று கருதிய வீரர் அக்காலத்தில் தமிழகத்திலிருந்தா ரென்று பழைய நூல்களால் தெரிகின்றது. இதுவு மன்றிப் போர்க்களத்திற்சென்ற தமது மக்கள் அஞ்சா நெஞ்சுபடைத் தவராய் மாற்றார் முன்னின்று போர்புரிந்து, அவர் படைக் கலத்தால் வெட்டுண்டு, போர்க்களத்தில் இறந்தார் என்னும் சொற் கேட்டுப் பெற்றபொழு தடைந்த இன்பத்தினும் பேரின்ப மடைந்த வீரத்தாயர் நம் தமிழ்நாட்டி லிருந்தன ரென்று புறநானூறு முதலிய பழைய நூல்களால் அறிகின் றோம்.

வீரமக்களும் வீரத்தாயரும்

இவ்வாறு நாட்டின் நன்மைக்காக உயிர் துறந்த பெருமக்களது வீரமும் புகழும் உலக முள்ளளவும் திகழ வேண்டும் என்னும் பெரு நோக்கங்கொண்டு, அவ்வீரரது உருவமைந்த ஒரு பெருங்கல் நட்டு, அக்கல்லில், அவ்வீரர் செய்த அரும்பெருஞ் செயல்களையும், அடைந்த வெற்றிகளை யும் எழுதி, அவர் புகழை நிலைநிறுத்துவது தமிழ் வழக்க மாகும். இத்தகைய 'வீரக்கல்' தமிழ் நாட்டில் இப்பொழுது பல விடங்களில் நிலை பெற்றிருப்பதாகத் தோன்றுகின்றது. இவ்வழக்கம்,

வீரக்கல்

என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலரென்னை
முன்னின்று கல்நின்ற வர்

என்னும் குறளாலும் விளங்குகின்றது. ஒரு போர்வீரன் தன் எதிரில் நின்ற வீரனைப் பார்த்து, "எம்முடன் போர் செய்ய வந்துநிற்கும் வீரரே! எம்மரசனுடன் போர் செய்து இதற்கு முன் அவன் வேலாயுதத்தால் அழிந்து, கல்லிலே நிற்கின்ற வீரர் பலர். ஆகையால் நீரும் அவரைப்போல் கல்லில் நில்லாமல் உடலோடு நிற்க நினைத்தால், எம்மரசனை எதிர்க்கவேண்டாம்" என்று கூறும் வாயிலாக வீரக்கல்லின் தன்மையை நாயனார் விளங்க உரைத்தார். இவ்வழக்கம் தமிழ் நாட்டுப் பழைய வழக்கமென்பது,

காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தல்

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தாலும், மற்றும் புறநானூறு முதலிய நூல்களாலும் அறியப்படுகின்றது. தகுந்த இடத்தில் சென்று ஒரு கல்லெடுத்து அக்கல்லை அவ்வீரனது உருவாக்கி, அதனை நதியில் நீராட்டி, குறித்த ஓரிடத்தில் நட்டு, வீரனும், பெயரும், பீடும் எழுதி, அதற்குக் கோயிலும், மதிலும், வாயிலும் அமைத்து, வாழ்த்தி வணங்கி விழாவெடுக்கும் வழக்கம் தொல்காப்பியம் முதலிய நூல்களில் விரிவாகக் கூறப் பெற்றுள்ளது.

வீரக்கல்லின் தன்மை

ஆடவர் பீடும் பெயரும்எழுதி யதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்

என்னும் அகப்பாட்டும் இவ்வழக்கத்தையே குறிக்கின்றது. தமிழ் நாட்டில் அக்காலத்தில் ஒப்புயர்வற்று விளங்கிய **சேரன் செங்குட்டுவன்** என்னும் அரசன் வீரமா தெய்வமாகிய கண்ணகியார்க்கு வீரக்கல் நட்டு மகிழும் பொருட்டு

இமயமலையிற் சென்று கல்லெடுத்து, கங்கையாற்றில் நீர்ப் படைசெய்து, வஞ்சிமாநகரில் கண்ணகிக் கோட்டம் என்னும் கோயிலமைத்து, நடுகல் நட்டு விழா வெடுத்த வரலாறு சிலப்பதிகாரத்தில் மிக விரிவாக விளங்குகின்றது. இத்தகைய விழாவையும் பெருமையையும் கண்ட வீரர், எப்பொழுதும் அழிதற் பாலதாகிய பூதவுடம்பைப் போர்க்களத்தில் மாய்த்தேனும் உலக முள்ளளவும் பொன்றி ஒழியாத புகழுடம்பைப் பெற ஆர்வம் கொண்டார்கள்.

கண்ணகியின் வீரக்கல்

நெடுங்கடலிற் செல்லும் மரக்கலத்திற்கு மாலுமி யொருவன் எவ்வாறு அவசியமோ அவ்வாறே ஒரு நாட்டிற்கு வேந்தன் அவசிய மென்பது தமிழ்நாட்டுக் கொள்கையாகும். எல்லா வளங்களும் நிறைந்ததா யிருப்பினும், வேந்தனில்லாத நாடு மதியிலா வானம்போலும், மணமிலா மலர்போலும், ஒளியிலா மணிபோலும் பயனற்றதாகு மென்பது,

> ஆங்குஅமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
> வேந்தமை வில்லாத நாடு

என்னும் திருக்குறளால் அறியப்படும். நாட்டில் குற்றம் நிகழ்ந்த பொழுது அதனை விசாரித்து நீதி செலுத்தியதும் அரசனே என்று தெரிகின்றோம். இப்பொழுது பல நாகரிக முற்ற நாடுகளிலும் காணப்படுகின்ற நீதிபதிகளைத் தலைமையாகக் கொண்ட நீதி மன்றங்கள் அக்காலத்தில் இருந்தன வென்று கொள்வதற்குச் சான்று கிடைப்பது அரிதாயிருக்கின்றது. முறை தவறாமல் நடுநிலை நின்று நீதி செலுத்தும் மன்னவன், குடிகளால் பெரிதும் பாராட்டப் பெறுவானென்பது,

நீதிபோற்றும் அரசனே இறைவன்

முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்.

என்னும் குறளால் அறியலாகும். இவ்வண்ணம் முறையால் உலகம் காக்கின்ற அரசனை முழுமுதற் பொருளோடு ஒப்பவைத் தெண்ணுவது, தமிழ் நாட்டு வழக்க மென்பது,

திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே

என்னும் திருவாய்மொழியாலும் அறியப்படும்.

வேந்தன் நீதி செலுத்தும் பொழுது நடு நிலையில் நின்று ஆராய்ந்து குற்றத்திற்குரிய தண்டனை விதித்தானென்று தெரிகின்றது.

குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்

என்பதனால் குற்றம் செய்தவனைத் தண்டித்து ஒடுக்குதல் அரச நீதி யென்பது விளங்கும். மேலும்,

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்

என்னும் குறளால், கொடுங்குற்றம் செய்யும் கொடியாரைக் கொல்லுவது, வளரும் பயிருக்குக் களை பறித்தாற்போல, நாட்டிற்கு நன்மை பயக்கும் என்பது அறியப்படும். பயிர் செழித்தோங்கி வளர வேண்டுமாயின் அதற் கிடையூறு செய்கின்ற களை பறித்தல் எவ்வாறு அவசியமோ அவ்வாறே நாட்டில் நலம் பெருக வேண்டுமாயின் அரசன் கொடியாரைத் தண்டித்து நாட்டினின்றும் களையவேண்டும் என்பது ஆசிரியரது கருத்தாகும்.

குற்றம் கடிதல்

உலகம் காக்கின்ற வேந்தரிடத்து ஓர் ஒளி உண்டென்றும், அவ்வொளியே உலகினைக் காக்கும் பெருந் திறமாமென்றும், அவ்வொளியே அவர் மாட்டுள்ள தெய்வத் தன்மையை உணர்த்துமென்றும் தமிழ் நூல்கள் கருதுகின்றன. அரசன் உருவத்தால் சிறியனேயாயினும், அவன்பாலுள்ள ஒளியால், அவனை மக்கள் போற்ற வேண்டுமென்னும் கருத்தை நாயனார்,

வேந்தன் ஒளி

> இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற
> ஒளியோடு ஒழுகப் படும்

என்று அரசனிடத்துள்ள ஒளியைக் குறிக்கின்றார். இக் கருத்தையே **சிந்தாமணி** ஆசிரியரும்,

> உறங்கு மாயினும் மன்னவன் தன்ஒளி
> கறங்கு வெண்திரை வையகங் காக்குமால்
> இறங்கு கண்ணிமை யார்விளித் தேயிருந்து
> அறங்கள் வெளவ அதன்புறம் காக்கலார்

என்னும் பாட்டால், அரசன் உறங்குகின்ற காலத்தும், அவன் ஒளி உலகத்தைக் காக்கும் என்னும் உண்மையை விளக்குகின்றார். இவ்வொளி பொருந்திய அரசன் நீதி போற்றும் முறையில் நேர்மைகுன்றி ஒரு திறம் பற்றுமாயின், அவ்வரசனுக்கு அறமே கூற்றாகும் என்று பழந் தமிழ் நூல்கள் முழங்குகின்றன.

செங்கோல் வழுவாத அரசியல் நடத்துகின்ற அரசனைச் சூழ்ந்து, ஐம்பெரும் கூட்டங்களும், எட்டுப் பெரிய ஆயங்களும் அமைந்திருந்தன வென்று **சிலப்பதிகாரம்** முதலிய நூல்கள் கூறுகின்றன. நாயனாரும் அமைச்சனது தன்மை கூறுகின்ற இடங்களில், அவனுக்கு மிக இன்றியமையாத குணமாகச் சொல்வன்மையை அமைத்திருக்

சபைகளும் ஆயங்களும்

கின்றார். நாடாளுகின்ற அரசற்குத் துணையாயிருக்கும் அமைச்சர், அவையஞ்சா திருக்க வேண்டும், சொல்வன்மையுடையராய் இருக்க வேண்டும், சபையின் குறிப்புத் தெரிந்து பேச வேண்டும் என்று பலவாறாகக் கூறுகின்றமையால், அக்காலத்தில் அரசனைச் சுற்றிலும் பெரிய சபைகள் இருந்தன வென்பதும், அச் சபையாருக்கு அரசாங்க முறைகளை எடுத்துக் கூறி, அவருடைய ஆதரவு பெறுதற்கு அமைச்சர் பேசும் திறமை பெற்றவராயிருக்க வேண்டு மென்பதும், அவ்வாறு சபையார் ஒப்புக்கொண்ட கருத்தையே அரசன் நடத்தி முடித்தான் என்பதும் அனுமானத்தால் அறியப்படும். இக்காலத்தில் சட்டசபைகளிலும் மற்றைய சபைகளிலும், அரசாங்க முறைகளைத் தெளிவாகவும், உறுதியாகவும் எடுத்துப் பேசுந் திறமை வாய்ந்தவர்களையே அமைச்சர்களாக நியமிக்கக் காண்கின்றோம். அதுபோலவே, அக்காலத்திலும், அரசாங்கத்தில் சில சபைகள் இருந்ததனாலேயே, சொல்வன்மை அமைச்சர்க்கு வேண்டும் அருங்குணங்களில் தலையாய் நிற்கும் தகுதிபெற்றது போலும்! இன்னும் அமைச்சனா யிருப்பவனுக்குத் தருக்க நூல் பயிற்சி (Logic) இன்றியமையாத தென்று நாயனார் கூறுகின்றமையால், அக்காலத்திலும் சபையிலுள்ள அங்கத்தினர் அமைச்சரிடம் கேள்விகள் கேட்கும் வழக்கமிருந்த தென்று ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம்.

சொல்வன்மை

> ஆற்றின் அளவறிந்து கற்க அவையஞ்சா
> மாற்றம் கொடுத்தற் பொருட்டு

என்று ஆசிரியர் கூறுகின்றமையால், சபையின் உறுப்பினர் நிகழ்த்தும் வினாக்களுக்கு அஞ்சாமல் அப்போதைக் கப்போது மாற்றம் கொடுத்தற்கு அமைச்சர் அளவை நூல்

(Logic) நன்ருய் அறிந்திருக்க வேண்டுமென்பது பெறப் படுகின்றது. பல நூல்களைப் படித்திருந்தாலும் சொல் வன்மை யில்லையானுல் அமைச்சர்க்குச் சிறிதும் பயனில்லை யென்பது ஆசிரியரது அடிப்படையான கருத்தாகும். அழகிய மலருக்கு மணமே சிறப்பாயிருத்தல்போல, அறி வுடைய அமைச்சர்க்குப் பேசுந் திறமையே பெருஞ் சிறப் பாகும். பேசும் திறமைபெற்ற அமைச்சனை வெல்லுதல் அரிதாமென்பது,

> சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை
> இகல்வெல்லல் யார்க்கும் அரிது

என்னும் திருக்குறளால் தெளிவாக விளங்கும்.

இனி அரசனைச் சூழ்ந்திருந்த ஐம்பெருங் கூட்டங்கள் எவையென்று ஆராயுங்கால், அமைச்சர், காலக்கணிதர், தானைத்தலைவர், தூதுவர், சாரணர் இவர்களே ஐம்பெருஞ் சபையினர் என்று திவாகரம் முதலிய நூல்கள் கூறுகின்றன. ஏற்ற பொருள் களை ஏற்றபொழுது அரசற்கு எடுத் துரைக்கும் தன்மை வாய்ந்தவராய், இயற்கையாகிய நுண் ணறிவோடு, நூலறிவும் அமையப் பெற்றவராய், பேசுந் திறமை பெற்றவராய்த் திகழ்பவரே அமைச்சராதற் குரியர்.

**ஐம்பெருஞ் சபைகள்**

அரசன் சொல்லும் பொருளை யெல்லாம் ஆமோதித்தல் அமைச்சர்க்கு அழகன்று. அரசனுக் கும், நாட்டிற்கும், உறுதி பயப்பன வற்றைத் தேர்ந்து சொல்லுதலும், அரசனது செவ்வி பார்த்துக் குறிப்பறிந்து, தன் கருத்துக்களைச் செம்மையாகச் சொல்லுதலும், அவ்வாறு தான் துணிந்து கூறிய தெளி பொருளை அரசன் ஒப்புக்கொள்ளானுயின், தனது நுண்

**௧. அமைச்சர்**

ணிய அறிவாலும் சொல் வன்மையாலும், உண்மையை உறுதியாக எடுத்துரைப்பதும், அமைச்சனது தன்மையாம். அரசன் நன்மையை நாடிச் செய்யும்பொழுது அவனை மேன் மேலும் அவ்வழியிற் செல்லுமாறு ஊக்கப்படுத்தியும், தீய வழியிற் செல்லும்பொழுது அவ்வாறு செல்ல வொட்டாது தடுத்தும் அறங்காப்பவனே அமைச்சனுவான். இவ் வுண்மை யைக் கம்பர் பெருமான்,

> தம்முயிர்க் குறுதிஎண்ணூர் தலைமகன் வெகுண்டபோதும்
> வெம்மையைத் தாங்கிநீதி விடாதுநின் றுரைக்கும்வீரர்
> செம்மையில் திறம்பல்செல்லாத் தேற்றத்தார் தெரியுங்காலம்
> மும்மையும் உணரவல்லார் ஒருமையே மொழியும்நீரார்

என்று அழகாகக் கூறியருளினூர்.

வேந்தரைச் சார்ந்தொழுகும் அமைச்சர் அவரை மிக நெருங்காமலும், விலகி அகலாமலும் நெருப்பினிடத்தே குளிர் காய்வார்போல நின்றொழுக வேண்டுமென்று நாயனூர் கூறுகின்றூர்.

அக்காலத்திய அரசர் போர் தொடங்குமுன், நன்னு ளும் நற்பொழுதும் பார்த்து, அதன் பின்னரே தாம் மேற் கொண்ட வேலையில் இறங்குவர் என்பது நம் பண்டைநூல் களில் ஆங்காங்குக் காணப்படுகின்றது. இவ்வாறு நல்வேளை யும் பொழுதும் பார்த்துச் சொல்வதற்குக் காலக்கணிதர் இன்றியமையா திருந்தமையால், அவரும் ஐம்பெருங் குழுவில் ஒன்றுயினர் போலும்! அக்காலத்தில் அரசர் போருக்குப் புறப்படும் பொழுது நன்னுள் பார்த்து, தம் வாளும் குடையும் முரசும் பிறிதோரிடத்தில் பெயர்த்துவைத்துப் பின் படை திரட்டிப் போருக்கு எழுந்தனர் என்று தெரிகின்றது. வட நாட்

உ. காலக்கணிதர்

டுக்குப் படையெடுத்துச் சென்ற திருமா வளவன் என்னும் கரிகாற்சோழன்,

> வாளும் குடையும் மயிர்க்கண் முரசும்
> நாளொடு பெயர்த்து

நாட்செய்து கொண்டு போர்க்கு எழுந்தானென்றும், செழும் போர் வல்ல சேரன் செங்குட்டுவன், சில குறுநில மன்னர் குறும்பை அடக்குமாறு, வெகுண்டு போர்க்கெழுந்த காலத்து, அங்கிருந்த காலக்கணிதன் எழுந்து, அரசனது கோபத்தை ஆற்றி, நல்ல முழுத்தம் இது வென்று சொல்ல, வேந்தனும் உடனே போர்க்கு நாட்செய்தான் என்றும் சிலப்பதிகாரத்துள் கூறப்பட்டிருக்கிறது. அரசன் அடல் ஏறு போன்று எழுந்தகாலத்து,

> ஆறிரு மதியினும் காருக வடிப்பயின்று
> ஐந்து கேள்வியும் அமைந்தோன் எழுந்து
> வெந்திறல் வேந்தே வாழ்கநின் கொற்றம்
> இருநில மருங்கின் மன்னரெல் லாம்நின்
> திருமலர்த் தாமரைச் சேவடி பணியும்
> முழுத்தம் ஈங்கிது முன்னிய திசைமேல்
> எழுச்சிப் பாலை ஆகென் றேத்த
> மீளா வென்றி வேந்தன் கேட்டு
> வாளும் குடையும் வடதிசைப்
> பெயர்க்கெனப் பணிந்தான்

என்றும் சிலப்பதிகாரம் கூறுவதால், நல்ல முழுத்தத்தில் காலக்கணிதரைக் கலந்தே அரசன் போர் செய்தான் என்று தெரிகின்றோம். இவ்வழக்கம் புறப்பொருள் வெண்பா மாலை முதலிய தமிழ் நூல்களிலும் பாராட்டப் பெற்றுள்ளது.

இக்காலத்தில் போர் நிகழ்த்தும் அரசர் தானைத் தலைவரை யெல்லாம் ஒருங்கே யழைத்து ஆலோசித்தல் போல, அக்காலத்திலும் போர்த் தொழிலைக் குறித்து ஆராய்வதற்குச் சேனாபதியரா லமைந்த ஒரு சபை இருந்ததென்று அறியப் படுகின்றது.

௩. சேனாபதியர்

இவ்வாறே, தூதுவரும் அரசனுக்கு ஓர் அங்கமாக விளங்கினர் என்பது நாயனார் குறளால் நன்கு தெரிகின்றது. தூதின் இயல்பு கூறவந்த நாயனார், அறிவும், ஆராய்ச்சியும், ஆன்ற குடிப்பிறப்பும் உடையார் தூதாம் தொழிற்குரிய ரென்றும், மாற்றரசரிடம் தாம் மேற்கொண்ட பொருளைப்பற்றிப் பேசுங்கால், காலமும் இடமும் தேர்ந்து,தொகுத்தும் வகுத்தும் இன் சொல்லால் எடுத்துச் சொல்லி, தம் அரசருக்கு நன்மை பயப்பவரே தலையாய தூதுவரா மென்றும் கூறுகின்றார். தூதுவர் பகை யரசரிடத்திற் பேசும்பொழுது, உறுதியோடு தம் கருத்தை யுரைக்க வேண்டுமேயன்றிச் சொல்லிற் சோர்வும், கலங்கிய உள்ளமும் தூது செல்வார்க்கு ஆகாவாம். தூது செல்பவர் அறிவிலும், சூழ்ச்சியிலும் வல்லவரா யிருந்தால் பெரிதும் அரசனுக்கு நன்மை விளையு மென்பதற்குப் பாண்டவர்க்காகத் தூது சென்ற கண்ணபிரான் கதையே போதிய சான்றாகும்.

௪. தூதுவர்

தூதுவர் போலவே அரசாங்கத்திற்கு ஒற்றரும் மிக அவசியமாகும். மற்றைய நாடுகளில் நிகழுகின்ற நிகழ்ச்சிகளையும், இயக்கங்களையும் அறிவதற்கு ஒற்றர் மிக அவசிய மென்பது திருவள்ளுவர் கொள்கையாகும். அறிவுடைய அரசன், ஒவ்வொரு நாளும் நடை பெறுகின்ற நிகழ்ச்சிகளை ஒற்றரால் நன்கு

௫. ஒற்றர்

அறிந்து கொள்வான். பிறர் தம்மைக் கண்டு ஐயுறு வண்ணம் அயல்நாடு சென்று, அங்கு நிகழும் செயல்களின் தன்மையை உள்ளவாறுணர்ந்து, தம் அரசர்க்கு உணர்த்துபவரே ஒற்ற ராம் தொழிலுக்கு உரியராவர். தமிழ் நாட்டில் ஒற்றர் பெரும்பாலும் துறவிக்குரிய காவியுடையைத் தரித்து, துற வொழுக்க முடையவர்போல நடித்து அயல் நாட்டு நிகழ்ச்சி களை நன்றாய் அறிந்தன ரென்பது சரித்திர உண்மையாகும். துறவிக்குரிய உடை தரித்தவர் பல நாடுகளுக்குச் சென்றால்,

ஒற்றரால் விளையும் நன்மை

பற்றெல்லாம் அற்ற பெரியார், உண்மை காணும் பொருட்டு உலகில் சுற்றித் திரிகின்றார் என்று எண்ணுவார்களே யன்றி, எவரும் அயல் நாட்டாரென்று ஐயுறார். இவ்வாறு சென்று மற்றைய நாடுகளிலுள்ள குடிகளின் மனப்பாங்கையும் உட்பகை புறப்பகை முதலிய பகைகளையும் தெளிவாக உணர்ந்து ஒற்றர் தம் அரசனுக்குச் சொல்வார்கள். அயல் நாட்டின் உட்கிடை யுணர்ந்த அரசன் பகைவரை எளிதில் போர்க்களத்தில் வென்று, வெற்றிமாலை சூடுவான். இத் தகைய நன்மைகளை யெல்லாம் நன்குணர்ந்தே ஒற்றரை ஆளா அரசற்குக் கொற்றம் இல்லை என்றும் நாயனார் வியந் துரைக்கின்றார். இனி ஒற்றரின் தொழிலை உணர்த்தப் போந்த நாயனார்,

> வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு
> அனைவரையும் ஆராய்வது ஒற்று

என்று கூறுகின்றமையால், தன் நாட்டில் பலவகைத் தொழிலில் அமர்ந்திருப்போரையும், சுற்றி யிருக்கும் சுற்றத் தாரையும், ஏதிலராகிய பகைவரையும் ஆராயும் தன்மை ஒற்றரிடத்தே அமைந்து விளங்கும். ஆகவே அரசன் தன் நாட்டிலுள்ள காவாடும் வன்னெஞ்சக் கள்வரையும், உட்

பகையையும் நன்றாய் ஒற்றரால் உணரவேண்டு மென்பது விளங்குகிறது.

பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு

என்று நாயனார் அருளுகின்றமையால், அரசாங்க விரோதமாக அமைந்துள்ள பல கூட்டங்களையும் (Cliques) உடனுறைந்தே கொல்லும் உட்பகையையும், போர்க்காலத்தில் மாறுபடும் குறும்பர் கூட்டங்களையும், அரசன் ஒற்றரால் நுணுக்கமாய் அறிந்து அவற்றை அழிக்கவேண்டும். ஓர் ஒற்றர் அறிந்து சொல்லும் பொருளை மற்றோர் ஒற்றரது கருத்தைக் கொண்டு ஆராய்ந்து, ஒருவர்க்கு மேற்பட்ட ஒற்றர் உரைக்கும் பொருளில் ஒற்றுமை காணப்பட்டால், அஃது உண்மையெனத் துணிந்து, வேண்டுவன செய்ய முற்படவேண்டும்.

ஒற்றரை ஆளும் தன்மை

ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல்

என்ற திருக்குறளில் கண்ட பொருளையே சிந்தாமணியாசிரியரும்,

ஒற்றர் தங்களை ஒற்றரி னாய்தலும்
கற்ற மாந்தரைக் கண்ணெனக் கோடலும்
சுற்றம் சூழ்ந்து பெருக்கலும், சூதரோ
டொற்றங் கொள்குறிக் கொற்றவர்க் கென்பவே

என்று அமைத்தனர். இவ்வாறு மறைவிடத்தில் நிகழும் செயல்களை யெல்லாம் அறியும் ஒற்றரைத் தன்னாட்டினரும் ஒற்றர் என்று உணராதவாறு அவர்க்கு அளிக்கும் பெருமையையும் பொருளையும் மறைவாகவே அரசன் கொடுக்க

வேண்டும். இத்தகைய ஒற்றர், அரசாங்கத்தில் ஐம்பெரும் சபையில் ஒன்றாய் அமைந்திருந்தன ரென்பது அறியற்பாலதாகும்.

எண்பேராயம்

இனி 'எண்பேராயம்' என்று சிலப்பதிகாரம் கூறுகின்ற பெருஞ் சபைகளின் வகை,

> கரணத் தியலவர் கரும விதிகள்
> கனகச் சுற்றம் கடைக்காப் பாளர்
> நகர மாந்தர் நளிபடைத் தலைவர்
> யானை வீரர் இவுளி மறவர்
> இனையர் எண்பே ராய மென்ப

என்னும் திவாகரக் குறிப்பால் தெரிகின்றது. இவற்றுள், நகரமாந்தர் என்பது நாட்டில் வாழும் மக்கள் தொகுதியினைக் குறிக்கும் என்று கொள்ளப்படுமாறல், அக்காலத்திலேயே குடிகளின் கருத்தை அரசாங்கத்திற்கு அறிவிப்பதற்கு ஒரு பேராயம் (Popular Assembly) இருந்ததென்றும், அரசன் குடிகளையும் தன் அரசியலில் இணைத்து அவர் தம் உரிமையை உணர்த்தினன் என்றும், இம்மாந்தர் ஆயமே குடியரசின் முளையாக அக்காலத்தில் விளங்கிய தென்றும் கொள்ள இடமிருக்கின்றது. ஆகவே இக்காலத்தில் அரசியல் முறையில் வழங்கி வருகின்ற அங்கங்களிற் பல, அக்காலத்தே முளை கிளம்பி யிருந்தன வென்பதும், சில முற்றி யிருந்தன வென்பதும் அறியப்படுகின்றது.

மாந்தர் ஆயம்

இனி அரசனது ஆட்சிக்குட்பட்டிருந்த நாடு எத்தன்மைத்தென்றும், அந்நாட்டில் வாழ்ந்த நன்மக்கள் எத்தன்மையரென்றும் ஆராய்வது அவசியமாகும். நீர்வளம், நிலவளம், மலைவளம், குடிவளம் ஆகிய நால்வகை வளங்களும்

உடையதாய்ப் பசியும், பிணியும், பகையும் இன்றி, வசியும் வளமும் சுரந்து விளங்கும் இடமே நாடென்று பெயர் பெறும். தன்னிடம் பொருந்திவாழும் குடிகளுக்கு வருத்த மின்றிப் பொருள் அளிக்கும் வளமுடையதாய், பிறநாடு கள் பொறுத்த பாரமெல்லாம் ஒருங்கே தன்னிடம் வந்த காலத்தும், அவற்றைத் தாங்கும் தகுதியுடையதாய் அமைந்தி ருப்பதே நாடாகும். வேளாண்மையால், வளம் பெருக் கும் தாளாளரும், நற்றவஞ்செய்யும் நல்லோரும், வாணி பத்தாற் பொருள் பெருக்கும் வணிகரும் பொருந்தி வாழு மிடமே நாடென்று சிறப்பித்தற் குரியதாகும்.

நாட்டின் நால்வள மும் நல் இயல்பும்

> தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
> செல்வருஞ் சேர்வது நாடு

என்று திருக்குறள் கூறுகின்றது. இவ்வுண்மையைச் சிந் தாமணி யாசிரியரும்,

> நற்றவஞ் செய்வார்க்கிடம் தவஞ்செய்வார்க்கு மஃதிடம்
> நற்பொருள் செய்வார்க்கிடம் பொருள்செய்வார்க்கு மஃதிடம்

என்று எடுத்துரைத்தார். வறியார்க்கு வழங்கக் குறையா வளத்தை யுடையதாய், பகைவரால் அழிக்கப் பெற்றாலும் தன் வளம் குன்றாததாய், ஆற்றுப் பெருக்கும், ஊற்றுப் பெருக்கும் உடையதாய், மலைவளமும், நிலவளமும் பொருந்தியதாய் விளங்கும் நாடே நன்னாடாகும். இத் தகைய நாட்டில் அரசருக்குப் பகை செய்யும் பல்குழுவும், நாட்டைப் பாழ் செய்யும் உட்பகையும், கொற்றவனை யலைக்கும் கொல் குறும்பும் காணப்பட்டால், பசும்பயிரைச் செழித்து வளர வொட்டாது தடுக்கும் நச்சுக் களையைப் பறித்தெறிவதுபோல, அரசன் அவற்றை வேரோடு களைய

வேண்டும். பகைவர் பயமின்றிக் குடிகள் நன்கு வாழு மாறு நால்வகை அரண்களை யுடையதே நாடாகும். நீர் அரண், நிலவரண், மலை அரண், காட்டரண் என அரண் நால்வகைப்படும் என்பது,

> மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழல்
> காடு முடைய தரண்

என்னும் குறளால் நன்கு விளங்கும்.

நாட்டில் வாழும் குடிகள் உயர் குடிப் பிறந்தார்க் குரிய ஒழுக்கங்களை யுடையராயிருத்தல் வேண்டும். நற் குடிப்பிறந்தார் ஒழுக்கமும், வாய்மையும், நாணும் உடைய ராய் ஈகையும் இன்சொல்லும் அமையப் பெற்றவரா யிருப் பர். இத்தகைய நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தாரானாலும் வறியார்க்கு எஞ் ஞான்றும் இல்லை யெனமாட்டார்.

குடிகளின் தன்மை

> இலனென்னும் எவ்வம் உரையாமை யீதல்
> குலனுடையான் கண்ணே உள

என்று நாயனார் அருளினார். நிலத்தின் இயல்பை அதன் கண் முளைத்த முளை காட்டுதல்போல், குலத்தின் இயல்பை, அக்குலத்திற் பிறந்த மக்கள் சொல் காட்டிவிடும். தீய சொற்களை வழுக்கியும் வாயாற் சொல் லுதல் ஒழுக்க முடையார்மாட்டு இல்லை யாம். ஒழுக்கம் விழுப்பம் தருதலால் அதனை உயிரினும் மேலாக மேன்மக்கள் போற்றுவார்கள். மானமே உயிரினும் மாண்புடைய தெனப் போற்றுவது நன்மக்கள் குணமாகும்.

பண்புடைமை

> மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
> உயிர்நீப்பர் மானம் வரின்

என்ற நாயனார் வாக்கே இதற்குப் போதிய சான்றாகும்.

மானமுடைமை

குடிகள் செருக்கும் சிறுமையும் இல்லாது, பெருமை யுடையவர்களாய் வாழ்ந்திருப்பர். 'பெருமை பெருமிதமின்மை' யென்றும் 'பணியுமாம் என்றும் பெருமை' என்றும் கூறப்படுகின்ற பெருமையின் இயலுக் கிணங்க, பணிதலாகிய அணியைக் கொண்டு அவர் விளங்குவர். நன் மக்கள், பிறரது சீரெல்லாம் எடுத்துரைத்து, சிறுமை புறங்காத்து எல்லாருக்கும் நல்லாராய் வாழ்வர். பெறுதற்கரிய பகுத்தறிவு பெற்ற

சான்றாண்மை

மக்களுக்குரிய ஒழுக்கத்தை நாயனார் சான்றாண்மை யென்னும் தலைப் பெயரால் நன்கு எடுத்துரைக்கின்றார்.

> அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ
> டைந்துசால்பு ஊன்றிய தூண்

என்றமையால், இவ்வைந்து குணங்களும் அமையப் பெற்றவரே மக்கட் பண்புள்ளவர் என்று நாயனார் கருதுகின்றார்.

இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தல் சான்றாண்மைக்கு அழகாகும். இன்னா செய்தாரை ஒறுத்தல், அவர் நாணும் வண்ணம் நன்னயம் செய்துவிடலேயாம் என்று நாயனார் அருளுகின்றமையால், துன்பம் ஒருவன் நமக்குச் செய்த விடத்து அதனைப் பொறுத்தலோ டமையாது, அவனுக்கு நன்மையே செய்யவேண்டு மென்பது இனிது பெறப்படுகின்றது. தம்மிடம் எப்பொழுதும் பகைமையே செய்

இனியவை செய்தல்

தொழுகுவார் மாட்டும் தாம் பண்புடையராய் ஒழுகுதலே அறிவுடையார்க் கழகாகும். அறிவுடையார் பெரும்பாலும்

உலகில் பொருளுடையராய் இராரென்றும், பொருளுடையார் பெரும்பாலும் அறிவுடையராய் இராரென்றும் உலகில் விளங்கும் உண்மையை நாயனார் நன்றாய்க் கூறிப் போந்தார்.

> இருவேறு உலகத் தியற்கை திருவேறு
> தெள்ளிய ராதலும் வேறு

என்று நாயனார் அருளுகின்றார். அளவிறந்த பொருள் பெற்றிருந்தும், அதனைத் தாமும் துய்த்துப் பிறர்க்கும் வழங்கிப் பயன் படுத்த அறியாத பேதையர் இவ்வுலகில் இருப்பதும் இறப்பதும் ஒன்றேயாம். பொருளல்லவற்றைப் பொருளென் றுணர்ந்து, அவற்றை முயன்று தேடியும் பயன்படுத்தாது பற்றுள்ளம் செய்யும் மயக்கமே, பிறப்பிற்கு வித்தாகும். வறியார்க்கு ஒன்றும் வழங்காத வன்கண்ணனிடம் உள்ள செல்வம் ஊர் நடுவே நச்சு மரம் பழுத்தாற் போலவும், நயனுடைய நல்லானிடம் உள்ள செல்வம், பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தாற் போலவும் விளங்கும்.

ஈகையின்பம்

மக்கள் தாம் வாழும் குடியை மேன் மேலாகப் பெருக்கி வளர்க்க வேண்டும். அறிவினாலும், முயற்சியாலும் ஒருவனது மரபின் பெருமை உயரும். அறியாமையாலும் மடியினாலும் அப்பெருமை தளரும். மக்கள் மேற்கொள்ளத்தக்க முயற்சிகள் பலவாயிருப்பினும் அவற்றுள் பல வகையாலும் தலையாய் நிற்கும் தகுதிவாய்ந்தது பயிர்த்தொழிலேயா மென்று நாயனார் சிறப்பித்துக் கூறுகின்றார்.

முயற்சியுடைமை

> உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
> தொழுதுண்டு பின்செல் பவர்

என்றமையால், வேளாண்மையே மற்றெல்லாத் தொழிலி லும் சிறந்த தென்பது விளங்கும். வேளாண்மையே மேற் கொண்ட தாளாளர் பிறரிடம் குறை கூறி ஒரு பொருளை இர வார். தம்மிடம் வந்து இரப்பவர்க்கு அவர் வேண்டிய பொருளைக் கரவாது கொடுப்பர். உலகிலுள்ள பசி நோய் நீங்க ஆருயிர் மருந்தாய உணவை ஆக்கி, நாட்டையும் அரசாங்கத்தையும் காப்பது வேளாண்மையே யாகும் என்று சொல்வது மிகையாகாது.

வேளாண்மை

வாழிநான் மறையோர்கள் வளர்க்கின்ற வேள்விகளும்
ஆழியால் உலகளிக்கும் அடல்வேந்தர் பெருந்திருவும்
ஊழிபெய ரினும்பெயரா உரையுடைய பெருக்காளர்
மேழியால் விளைவதலால் வேறொன்றால் விளையாவே

என்று கல்வியிற் பெரிய கம்பர் வேளாண்மையின் பெரு மையை விரித்துரைத்தார். வேளாண்மையே வறுமையை நாட்டினின்றும் அகற்றும் நற்பணியா மென்பது,

இலமென் றசைஇ இருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள் நகும்

என்னும் நாயனார் நயம் பொருந்திய வாக்கால் நன்குணரப் படும். இத்தகைய முயற்சி திருவினையாக்கும்; முயற்சி யின்மை இன்மை புகுத்திவிடும். வறுமைபோல் துன்பம் உலகில் வேறில்லை. இல்லானை இல்லாளும் வேண்டாள்; ஈன்றெடுத்த தாய் வேண்டாள்: அவன் வாய்ச் சொல்லும் செல்லாத தாகும்.

நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்

என்றமையால், மெய்ந்நூற் பொருளை ஐயந் திரிபற அறிந்து

சொன்னாரேனும், வறியார் சொல் சோர்வு படும் என்பது விளங்கும். இவ்வறுமை காரணமாகப் பிறரிடம் சென்று இரந்து உயிர்வாழ்தல், வறுமையிலும் துன்பம் தருவதாகும். கரவாத திண் அன்பில் கண்ணன்னார் கண்ணும் இரவாது வாழ்வதே வாழ்க்கையெனப்படும். நம் வறுமை காரணமாக மானம் துறந்து, குறை யிரந்து வறியார் நிற்குங்கால், 'சொல்லப் பயன்படுவர் மேலோர்' என்றவாறு, மேலோர் வறுமை யென்ற சொற்கேட்ட அளவிலே, பொருள் கொடுத்து வறுமை நோய் களைவர். கீழ் மக்கள் தம்மை வறியார் இறைஞ்சி ஏத்திப் 'பாரியே' யென்று பன்முறை கூறினும் யாதும் கொடார். ஆகவே, மேற்கூறிய நல்லொழுக்கம் அமையப் பெற்றவராய், வறுமை, அறியாமை முதலிய இழுக்குக்களின் நீங்கியவராய் வாழும் மக்களே நற்குடிகள் என்று எடுத்துக் கூறும் இயல்புடையராவர்.

வறுமை

## ரு. இன்ப இயல்

காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே.

அறம், பொருள், இன்பம் என்னும் உறுதிப்பொருள் மூன்றனுள், இன்பத்தை நாயனார் காமத்துப்பால் என்னும் பகுதியில் இனிது எடுத்துக் கூறுகின்றார். தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் தமது அரிய பெரிய நூலில் சிற்றின்பத்தின் இயல்பை எடுத்துரைக்கின்ற காமத்துப்பாலை அமைத்தது, அந்நூலின் பெருமைக்கும், அப்பெரியாரது உயரிய மன நிலைமைக்கும் பொருந்தாதென்று, அப்பாலின் உண்மைத் தன்மை யுணராத ஒரு சிலர் கருதுகின்றார்கள். ஆதலின் இன்பப்பாலின் வகையினையும் அழகினையும் ஆராயப் புகுமுன்னர், ஆசிரியர் சிற்றின்பத்தின் இயல்பைத் திருக்குறளில் அமைத்து எழுதிய கருத்தைச் சிறிது ஆராய்வது மிகையாகாது. காமம் என்ற சொல்லைக் கேட்ட அளவாலே அது தீது என்று கொள்ளுதல் தவறாகு மென்று நற்றமிழ்ப் புலவர் நக்கீரர் அருளுகின்றார். சிற்றின்பத்தின் உண்மைத் தன்மையினை ஆசிரியர் நன்கு அறிந்தவரே யாதலால், பேரின்பத்தின் பெருமையையும், செம்மையையும், மக்கள் செவ்வையாய் அறிந்து, அப்பேரின்பப் பெருவாழ்வை அடைய ஆர்வம் கொள்ளுதற் பொருட்டே சிற்றின்பத்தின் திறத்தை விளக்கமாக எடுத்துரைத்தார். மேலும் இன்பம் என்பதே இன்னதென்று அறியாத ஒருவனுக்குப் பேரின்பத்தின்

இன்ப இயலின் உண்மை நோக்கம்

பெருமையை எடுத்துரைத்து, அவனை அப்பேரின்ப நெறியில் ஈடுபடச் செய்வது இயலாததாகும்.

சிற்றின்பம் கூறிப் பின் பேரின்பம் கூறல் எளிது

உலகப் பொருள்களின் அழகையும் நயத்தையும் ஒரு சிறிதும் காணப்பெறாத ஒருவனுக்கு உலகத்தின் அருமை பெருமைகளை எடுத்துக் கூறுதல் இயலாதவாறு போலவும், சுவை யென்பதே இன்னதெனை அறியாத ஒருவனுக்கு அமுதத்தின் அருமையை விளங்க உரைத்தல் இயலாதவாறு போலவும், இன்பம் என்பதே இன்னதென்று அறியாத ஒருவனுக்குப் பேரின்பத்தின் பெருமையை விளங்கக் கூறுதல் பெரும்பாலும் இயலாததேயாகும். உலகில் மக்களாய்ப் பிறந்தவர்களுள், மேலைத் தவத்தால் மெய்த்துற வடைந்த பெரியாரைத் தவிர்த்துப் பெரும்பாலும் மாந்தர் சிற்றின்பத்திலேயே ஈடுபட்டிருக்கக் காண்கின்றோம். இவ்வாறு சிற்றின்பத்தில் அழுந்திக் கிடக்கும் மக்களை, அந்நிலையினின்றும் உயர்த்தி அவர் கருத்தை விழுமிய பேரின்ப நெறியில் பதித்தலே இன்பப்பாலின் உண்மையான நோக்கமாகும். சிற்றின்பமே பெரிதெனை நினைந்து, சிற்றின்பம் துய்த்தலே மக்களாய்ப் பிறந்தார் பெறும் பேறு என்று எண்ணியிருக்கும் ஒருவனை, எளிதில் அந்நெறியை விட்டு நன்னெறிக்குக் கொண்டு வருதல் இயலாத தாகும். ஆனால் அவன் அவ்வின்பத்தை ஆரத் துய்த்து நுகரும்பொழுது அது தான் எண்ணிய அளவாக இல்லாது, குறைவா யிருத்தலைக் கண்டு சிற்றின்பத்தின் உண்மைத் தன்மையை உணர்ந்து கொள்வான். எப்பொழுதும் மறைபொருள் மீது மக்கள் மனம் மிகுந்து சென்று, அதனை யறிய ஆர்வமுறுதல் இயற்கையாகும். ஒருவனது கண்ணையும், கருத்தையும் ஒருங்கே கவரும் எழில்நலம் வாய்ந்த ஒரு பொருளை

அனுபவித்தல் தகாதென்று சொல்லவே, அதன்கண் இயற்கையாகவே உள்ள பற்று, நெருப்பில் நெய்வார்த்தாற்போலப் பன்மடங்கு அதிகமாக வளர்ந்தோங்குவதாகும். ஆதலால் மக்களது ஐம்புல இன்ப நுகர்ச்சியைத் தடுத்து, அதனால் ஆசையை மிகுதிப்படுத்துவதைத் தவிர்த்து, சிற்றின்பத்தில் இடையூறின்றி மனத்தைச் செல்ல விடுவதனால் அதன் சிறுமையும், குறையும் மக்களுக்குத் தெளிவாகத் தெரிந்து, அதனினும் மேலாய பொருளில் ஆர்வம் கொள்வார்கள். ஆதலால் சிற்றின்பப் பற்றுடையான் ஒருவனுக்கு அவன் மனம் இயற்கையாகவே நாடி நிற்கும் இன்பத்தில் நிறைவான, பழுதற்ற சீர்மையை எடுத்துரைக்க அவன் உள்ளம் பள்ளத்துள் பாயும் வெள்ளம்போல், அவ்வழியாக விரைந்து சேரும். உலகில் சிற்றின்ப அனுபவத்தில் காணப்படுகின்ற குற்றம் குறைகளை நீக்கி, நிறைவான இன்பத்தை இனிதாக எடுத்துரைக்குமிடத்து அவ்வின்பத்தைப் பெறும் வழியை நோக்கி மக்கள் முயல்வது இயற்கையேயாகும். எக்காலத்தும் மூப்பு, பிணி, வறுமை முதலிய குறைகளின் நீங்கித் தலைமகன் பதினாறாண்டும் தலைமகள் பன்னீராண்டும் அமையப் பெற்றவர்களாய், ஒத்த குணமும், ஒத்த நலமும் ஒத்த அன்பும், ஒத்த அறிவும், ஒத்த செல்வமும் உடையராய் இருவரும் இன்பம் துய்ப்பர் என்று இன்ப இயல் எடுத்துரைக்கும். இவ்வாறு சொல்லவே, இத்தகைய சிறந்த இன்பத்தைப் பெறும் வழி யாது என மக்கள் மிக்க ஆர்வத்தோடு ஆராயத் தொடங்குவர். அப்பொழுது இப் பெரிதாய இன்பம் வனப்பாலும், வலிமையாலும் பெற இயலாது. வேண்டியார்க்கு வேண்டியவற்றைக்

சிற்றின்பத்தின் நிறைவை இன்ப இயல் கூறும்

சிற்றின்பம்பெறும் வழிகளைத்தேடி முயற்சித்தல்

கொடுக்கும் தவம்செய்தாற் பெறலாம் என்று உண்மைநூல் கூறும் உறுதிமொழியைக் கேட்டுத் தாமும் தவம் செய்யத் தொடங்குவர். இவ்வாறு சிற்றின்பம் பெறக் கருதிச் சீரிய தவம் செய்வானிடம், அத்தவம் சிற்றின்பத்திற்கும் மேலாகிய சிறப்பு வாய்ந்த பேரின்பம் பயக்கும் பெருமை வாய்ந்தது என்று கூறிப் பின் பேரின்பத்தின் இயல்பைப் பெருகக் கூறும். அப்பேரின்பம், பிறப்பு, பிணி, இறப்பு முதலிய குறைகள் அற்றதாய், அவலக் கவலையின் நீங்கியதாய், மணியினது ஒளியும், மலரின் மணமும், தண்ணீரின் தண்மையும் போல உள்நின்று எழுகின்ற ஒரு பேரின்ப வெள்ளமாமென்று சொல்லக்கேட்டு, அப்பெற்றித்தாய பேரின்பத்தில் பதிந்த மனமுடையராய், மக்கள் தவமும் ஞானமும் புரிந்து வீடு பெறுவர். இவ்வாறு கடுத்தின்னுதானைக் கட்டி பூசிக் கடுத் தீற்றியவாறு போலவும், நீர் வேட்கையால் அண்மையிலுள்ள கலங்கல் நீரை உண்ணக் கருதிய ஒருவனுக்குக் கானலைக் காட்டி நல்ல நீருள்ள பொய்கையிற் கொண்டு சேர்த்தாற் போலவும், சிற்றின்பத்தில் ஆழ்ந்து கிடக்கும் ஒருவனை வஞ்சித்துப் பேரின்ப நெறியில் சேர்த்தலால் இன்ப இயல் களவியல் என்னும் பெயர் பெறும்.

பேரின்பத்திற் கொண்டு சேர்த்தல்

ஆதலின், இன்ப இயல் இறுதியில் வீடுபேறு பயக்குமென்பதும், அப்பெரும் பயன் கருதியே, ஆசிரியர் வள்ளுவரும் தமது நூலில் இன்பப்பாலை அமைத்தருளினர் என்பதும் நன்கு அறியப்படும். இவ் வுண்மையை உணர்ந்தே இறைவன்பால் ஈடுபட்டுப் பத்திமையால் பணிந்து பாமாலை பாடிய பெரியாரும் கடவுளையும், உயிரையும், காதலி காதலன் என்னும் முறையில் அகத்திணை அழகுகளை யெல்லாம் அமைத்துப் பேரின்பப் பெருமையை எடுத்துரைப்பாராயினர்.

இத்தன்மை மணிவாசகப் பெருமானது திருவாசகத்திலும், நம்மாழ்வாரது திருவாய் மொழியிலும் மற்றைய சமய நூல்களிலும் அமைந்து விளங்குகின்றது.

அருள் நூல்களில் அகத்துறையை அமைத்தல்

இனி, இன்பத்தின் தன்மையைக் கூறப்போந்த நாயனார், அதனைக் களவியல் கற்பியல் என இரண்டாக வகுத்து எழுதுகின்றார். இவ்வாறு பாகுபாடு செய்வது தமிழ் நூல் வழக்கென்பது பழைய நூல்களால் அறியப்படுகின்றது. இவற்றுள் களவொழுக்கமாவது, பிணி, மூப்பு இவையின்றி, எப்பொழுதும் ஒரு தன்மையராய், உருவும், திருவும், குலமும், குணமும், பருவமும், அன்பும் ஒத்தவராய தலைமகனும் தலைமகளும் பிறர் கொடுப்பவும் அடுப்பவும் இன்றி, ஊழ்வினைப் பயனாய்த் தாமே எதிர்ப்பட்டுக் காதலித்துக் கலக்கும் முறையாகும். கற்பியலாவது, இங்ஙனம் கலந்த தலைமகனும் தலைமகளும் முறைப்படி மணம்புரிந்து இல்லறமாகிய நல்லறத்தை இனிது நடத்தி இன்பம் துய்த்தலும், பின் இவ்வுலக வாழ்க்கையின் நிலையாமை கண்டு வீடு பெற முயல்வதுமாம். இவ்விரு முறைகளும் தமிழ் நாட்டில் மிகப் பழைய காலம் முதலே வழங்கி வந்த மணமுறைகளாமென்றும், இவ்வொழுக்க நெறியே பின்னர் நூலறி புலவரால் இலக்கிய இலக்கணங்களில் வகுத்துரைக்கப் பட்டதென்றும் தொல்காப்பியம் முதலிய நூல்களிற் காணப்படுகின்றன. ஆகவே, ஆசிரியர் கூறும் களவியல், கற்பியல் இரண்டும் தமிழ் வழக்கத்தில் பழைய காலத்தே பயின்றிருந்த கருத்தேயன்றிக் கவிநயமும் கற்பனையும் அல்ல என்பது தெளிவாக உணரப்படும்.

களவொழுக்கத்தின் தன்மை

இனிக் களவியல் என்று நாயனார் வகுத்திருக்கின்ற முதல் பகுதியைச் சிறிது ஆராய்வோம். அன்பினாலும், குணத்தினாலும், கல்வியினாலும், உருவினாலும், திருவி லும் ஒத்தவராய்த் தம்மை ஒப்பாரும் மிக்காரு மின்றி உயர்வுற்ற தலைமகனும் தலைமகளும், தமியராய் ஒரு பொழில் இடத்து ஒரு வரை யொருவர் ஊழ்வினைப் பயனால் எதிர்ப்படுவர். அப்பொழி லிடத்தே

தலைமகனும் தலைமகளும் எதிர்ப்படல்

தலைமகளுடன் கூட விளையாட வந்த தோழியர், மலர் கொய்து மகிழ்ந்தும், மயிலாடக் கண்டு களித்தும், குயில் கூவக்கண்டு களித்தும், வாச மலர்க் கொடியில் ஊசலாடி விளையாடியும் தலைமகளைத் தனிமையாய் விட்டு, வெவ்வே றிடங்களிற் பிரிந்து செல்வர். இவ்வாறு தனித்து நிற்கும் தலைமகள் எழிலுற அமைந்த அப்பொழிலின்கண் விரை யுறு நறுமலர் கொய்து விளையாடி, பூவார் சோலை மயிலா டப் பரிந்து, குயில்கள் இசைபாட இன்புற்று மகிழ்ந்து இறுமாந்திருப்பாள். தலைமகள் மகிழ்ந்து விளையாடும் மணங்கமழும் பொழிலையும், அதன் எழிலுறு வனப்பை யும், நற்றமிழ்ப் புலவராய நக்கீரர், செந்தேன் துளிக்கும் செந்தமிழ்ச் சொற்களால் புனைந்துரைக்கின்றார். சந்தன மும், சண்பகமும், தேமாவும், தீம்பலவும், ஆசினியும், அசோகமும், கோங்கும், வேங்கையும், குரவமும் விரிந்து, நாகமும், திலகமும், நறவும், நந்தியும், மாதவியும், மல்லிகை யும், மவ்வலொடு மணங்கமழ்ந்து, பாதிரியும் பாவை ஞாழ லும் பைங்கொன்றையொடு பிணியவிழ்ந்து, பொரிப்புன் கும் புன்னாகமும் முருக்கொடு முகை சிறந்து, வண் டிரைந்து தேனார்ந்து வரிக்குயில்கள் இசைபாட, தண் தென்றல் தவழ்ந்துலவும் தண்ணரும் பொழிலின் நடுவே

பொழிலின் அழகிய காட்சி

விசும்பு துடைத்துப் பசும்பொன் பூத்து, வண்டு துவைப் பத் தண்தேன் துளிப்பதோர் வெறியுறு நறுமலர் வேங்கை கண்டாள். கண்டு பெரியதோர் காதல் களிகூர்ந்து, தன் செம்மலர்ச் சீறடிச் சிலம்புகள் ஆர்ப்ப, நடந்து சென்று நறைவிரி வேங்கை நாண்மலர் கொய்தாள். அப் பொழுது அம்மாமலைச் சாரலில் வேட்டைக்குப் பல இளைஞரோடு வந்துற்ற தலைமகனும், ஆண்டு எழுந்த தோர் கடுமானின் பின்றொடிக் காவல் இளைஞரைக் கைய கன்று, கடிகமழ் நறுங்கண்ணி மேற்கொண்டு, வண்டுமண மயர, அச்சாந்தின் நறுமணம் அகன்ற பொழிலிடைப் பரந்து வீச, வரிசிலையொடு கணையேந்தி வடிவு கொண்ட காமன் போலச் சென்று, அவள் நிற்கும் அழகிய பொழி லிடம் புகுவான். இவ்வாறு ஊழ்வினைப் பயனால் ஒருவரை யொருவர் எதிர்ப்பட்டுக் கண்டபொழுது, தலைமகன்

தலைமகனது ஐயம்

'இம்மாது பூவில் உறைகின்ற பூம களோ! அன்றி இப்பொழிலிடை உறையும் தெய்வமோ! அன்றி வானுறை தெய்வமோ' என்று தனக்குள்ளே ஐயுற்று, பின் ஓவியத் தில் எழுதவொண்ணு உருவமைந்த மாது ஓர் பெண் மணியே யெனத் தெளிவான். இவ்வாறு நிகழும் ஐயத்தை நாயனார்,

> அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
> மாதர்கொல் மாலும்என் னெஞ்சு

என்ற குறளால் கூறினர். இவ்வாறு தலைமகளை ஒரு

பெண் என்று தெளிதல்

பெண்மணியே என்று துணிந்த தலை மகன், தன் காதலைச் சொற்களால் சொல்லாது கண்களின் குறிப்பா லறி விப்பான். அவ்வாறே தலைமகளும் தனது காதலை வெளிப்

படக்கூறாது, தன் கண்களின் குறிப்பால் கூறுவாள். தலைவன் தன்னை நோக்குங்கால், தான் நிலத்தை நோக்கியும், அவன் தன்னை நோக்காதபோது, தான் அவனை நோக்கி மெல்லிய புன்முறுவல் பூத்தும், தலைவி தன் காதலைக் குறிப்பாக உணர்த்துவாள். காதலர் இருவர் கண் நோக்கும் ஒக்குமாயின், வாய்ச் சொற்களால் யாதும் பயனில்லை என்பது,

**கண்ணால் கலத்தல்**

> கண்ணொடு கண்ணிணை நோக்குஒக்கின் வாய்ச்சொற்கள்
> என்ன பயனு மில

என்னும் திருக்குறளால் தெரியப்படும். இவ்வாறு காதலால் இருவரும் கலந்தபின், தன் கண்ணிற் கினிய, கருத்திற் கிசைந்த காதலியின், நலத்தையும் குணத்தையும் தலைமகன் புகழ்ந்து மகிழ்வான். கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலனும், பெண்ணென்னும் பெருந்தகையாளிடம் அமைந்துள்ளன வென்றும், தனக்குக் காதல் நோயைத் தந்த காரிகையே நோய்க்கு மருந்தாகவும் அமைந்தா ளென்றும் அழகுபெறக் கூறி அகமகிழ்வான். மோப்பக் குழையும் மெல்லிய அனிச்ச மலரை நோக்கி அம்மலரினும் தன் மாது மெல்லியலாள் என்றுசொல்லி மகிழ்வான். அப்பொழிலிடை, தேனுண்டு திளைத்து நிற்கும் வண்டானது, தன் மாதின் கண்ணைக் கருங்குவளை மலரென்றும், கையினைக் காந்தள் மலர் என்றும், கொவ்வைச் செவ்வாயினை அழகிய ஆம்பல் மலரென்றும், அவள் குழல் மேலும் கோதை மேலும் சுழல்கின்றது என்று கூறுவான். இன்னும் வெண்ணிலா வீசுகின்ற தண்மதியை

**தலைமகளது நலம்புனைந்து உரைத்தல்**

**அனிச்சமலரை நோக்கி உரைத்தல்**

**வண்டை நோக்கி உரைத்தல்**

யும், தனது மாதின் முகத்தையும் ஒப்பிட்டு நோக்கி, மறு வுற்று விளங்கும் மதியினைப் பார்க்கினும், மறுவற்று விளங் கும் மாதின் முகமே சிறந்ததென்று கூறுவான். இன்னும்

சந்திரனை நோக்கி உரைத்தல்

மதியினைப்பார்த்து, 'நீ, இம்மலரன்னகண்ணாள் முகம்போல், மறுவற்று விளங்க வேண்டுமாயின், அவள் போலப் பலர் காணத் தோன்றாது, எனக்கு மட்டும் தோன்றுவா யாயின், உன்னிடமுள்ள மறு ஒழியும், உன் பாலுள்ள மறு ஒழிந்தால் நீயும் என் காதலுக்கு உரியாய்' என்று கூறு வான். இன்னும் அனிச்ச மலரும், அன்னத்தின் மெல் லிய தூவியும் தன்மாதின் மெல்லிய பாதங்களை உறுத்தி வருத்தும் என்று வருந்துவான். இன்னும், இப் பொழில் களில் செம்மாந்து, இறுமாந்து விண்ணை நோக்கி மலர்ந் திருக்கும் குவளை மலர்களிடம் காணும் தன்மையும், நாணுந்

குவளை மலரை நோக்கி யுரைத்தல்

தன்மையும் அமைந்திருந்தால், அவை இம்மாதின் அழகிய கண்களைக் கண்டு நாணித் தலை கவிழும் என்று கூறுவான். இவ்வாறு தன் பெண்மணியின் நலம் புனைந்துரைத்த தலைமகன், பின்னும் அவளுடன் நீடித்த காலமிருப்பின், அக்களவொழுக்கத்தைப் பிறர் காணில், பழித்தும், இழித்தும் உரைப்பார்கள் என்றும், அப்பழிச் சொல்லைக் கேட்டு நாணுடைய தலைமகள் சிறிதும் ஆற்றாள் என்றும் எண்ணி அவளது கருங்குழற் கற்றை மருங்கு திருத்தி, அளகமும் நுதலும் தகைபெற நீவி, ஆகமும் தோளும் அணி பெற வருடி, குளிர்ப்பக் கூறித் தளிர்ப்ப முயங்கித் தான் பிரிய வேண்டுமென்று கூறுவான். இவ் வாறு பெருமான் பிரியக் கருதியது உணர்ந்த பெண்மணி, கனல் முன் னிட்ட மெழுகுப்பாவை போல் மனமுருகிப்

பசந்து காட்டுவாள். இவ்வண்ணம் பிரிவாற்றாது வருந்தும் தலைமகளுக்குத் தலைவன் பலவாறாகத் தேறுதல் கூறித் தன்னூர் அண்மையிலேயே உள்ளதென்றும், தான் அடுத்தடுத்து அவளைக் காண்பது எளிது என்றும் எடுத்துரைத்து ஆற்றித் தேற்றிப் பிரிவான்.

தலைமகன் தலைவியைப் பிரிதல்

இவ்வாறு பிரிந்த தலைமகன் தனது காதலியை மறுமுறையும் கண்டு மகிழ் வெய்திக் காதலிற் கலக்கக் கருதி, முந்திய நாளில் அவளைக் கண்டு களித்த அழகிய பொழிலிடம் தானே செல்வான். தலைமகளும் அப்பொழிலிடை பூக் கொய்து விளையாட வந்தவள், தன் காதலன் தன்னிடம் மொழிந்தவாறே, பொழிலிடை வருவானோ என்னும் நாணத்தாலும், அன்றிப் பிரிவாற்றாமையால் இறந்தானோ என்னும் அச்சத்தாலும், கவலைகொண்டு நிற்பாள். அவள் கண்ணெதிரே தண்ணொளியுடைய தலைமகன் தோன்றுவான். இருவரும், கண்டு களிகூர்ந்து மகிழ்ந்து விளையாடிப் பின்னும் முன்போலவே பிரிவார்கள்.

இடந்தலைப் படுதல்

இவ்வாறு பிரியா விடைபெற்றுப் பிரிந்த காதலன் பிரிவாற்றாது பெரிதும் வருந்தி, ஒளி மழுங்கி, வனப்பழிந்து நிற்பதைக் கண்ட அவனது பாங்கன் என்னும் தோழன், அவ்வேறுபாட்டிற்குக் காரணம் என்னை என்று தலைமகனைக் கேட்பான். அவ்வாறு கேட்கவே தலைமகன் தன் பாங்கனிடம் ஒன்றையும் மறையாது, தான் கண்ட காட்சியின் கவின்பெறு நயத்தினை எடுத்துரைத்துத் தன்னுள்ளம் பள்ளத்து வழியாய்ப் பாயும் வெள்ளத்தைப்

தலைமகனிடம் தோழன் வேறுபாட்டிற்குக் காரணம்கேட்டல்

போல, அப்பாவை வழியாய்ப் பாய்ந்த தென்று பகர்வான். இதைக் கேட்ட பாங்கன், 'என் உயிரனைய நண்பனே, ஒரு நங்கையை நினைந்து வாடி நிற்றல் உன் தலைமைப்பாட்டிற்குச் சிறிதும் தகாதே' யெனப் பலவாறு எடுத்துரைத்தும், தலைமகன் சிறிதும் செவி கொடாளுய், 'நண்பனே, நான் காணப்பெற்ற உருவின் மிக்க திருவினை நீ கண்டாயல்லை; காண்பாயாயின் இவ்வாறு சொல்லாய்' என்று மறுத்துரைப்பான். தலைமகனது காதல் வரம்பிகந்து சென்றது என்றுணர்ந்த பாங்கன் 'அவ்வாறாயின் அத்தகைய திருவினுள் எங்கு உள்ளாள். எத்தன்மையாள் : அவளை உனக்காக நான் கண்டு வருவேன்' என மொழிவான். இது கேட்ட தலைமகன் ஒருவாறு மனந்தேறி, தன்னை இடர் செய்த பெண்மணி யுலாவிய இடத்தையும், அவள் நலத்தையும் விரித்துக் கூறுவான்.

*தலைமகன் காதல் உரைத்தல்*

*அவளது அழகும் இடமும் உரைத்தல்*

திரைவிரி தருதுறையே திருமணல் விரியிடமே
விரைவிரி நறுமலரே மிடைதரு பொழிலிடமே
மருவிரி புரிகுழலே மதிபுரை திருமுகமே
இருகயல் இணைவிழியே எனைஇடர் செய்தவையே

என்று தன்னை இடர் செய்த குழலையும், பொழிலையும் முகத்தையும் மொழியையும், வியந்துரைப்பான். இதனையே நாயனர்,

முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு

என்று கூறினர். அஃதாவது, என்னால் விரும்பப்பட்ட மாது மாந்தளிர்போன்ற நிறத்தை யுடையாள், முத்துப்

போன்ற பற்களையும், முகிழ்த்த இளநகையு முடையாள், இயல்பாகவே மணங் கமழும் எழில் மேனியுடையாள், வேல் போன்ற கூரிய கண்களை யுடையாள், வேய்போன்ற தோள் களை யுடையாள் என்று தலைமகளது வனப்பைத் தலைமகன் கூறக் கேட்ட பாங்கன், அவன் குறித்த இடம் சென்று மறைந்து நின்று காண்பான். அங்குத் தலைமகனைத் தேடித் தனித்துலாவும் மயிலன்ன பெண் மணியைக் காண்பான்.

தோழன் தலைமகளைக் கண்டு வியத்தல்

கண்டு கழிபெரு மகிழ்ச்சி கொண்டு, இத்தகைய பேரழகு வாய்ந்த பெண்மணியைக் கண்டு பிரிந்துவந்து, யான் கூறிய கடு மொழிகளையும் கேட்டுப் பொறுத்த எம் பெருமானது பெருமையே பெருமை என்று தன் தலைவனை வியந்து கூறி, அவனிடம் விரைந்து சென்று, தான் கண்ட காட்சியினை எடுத்துரைப்பான். தலைமகனும் பாங்கனால்

தோழனால் தலைவன் தலைமகளை எதிர்ப்படுதல்

குறிக்கப்பட்ட இடஞ்சென்று, தனியளாய் நின்ற தலைமகளை எதிர்ப்பட்டுக் கலந்து மகிழ்வான். பின் தன் காதலியை ஆயத்திற் போக்கித் தான் முன் போலவே பிரிவான்.

இவ்வாறு தானே தலைவியைக் கண்டும், பாங்கனது துணையால் கண்டும் கலந்து களித்த தலைமகன் பின்னும் அவ்வண்ணமே இன்பம் நுகர எண்ணுமல், தன் காதலியின் உயிர்த் தோழியை இரந்து, அவள் வாயிலாக எப்பொழுதும் தலைவியுடன் இன்பம் துய்க்கக் கருதுவான். இவ்வெண்ணத்தை மனத்தில் கொண்டு தோழியிடம் தெளிவாகத் தன் கருத்தை வெளியிடாது, கரந்த மொழிகளால் தன் விருப்பத்தைத் தலைமகன் உணர்த்துவான். தன் காதலியும் தோழியும் கலந்திருந்து விளையாடும் பொழி

விடத்தே காலம் பார்த்துச் சென்று, முன்னறியாதவன் போல, அவன் அவர்கள் ஊரும், பெயரும் வினவி நிற்பான். அல்லது அவர்களை நோக்கி, அத் தினைப்புனத்தின் வழியே கடுமால் வரைபோன்ற ஒரு தறுகண் யானை சென்றதோ? என்று வினவுவான். அல்லது, அவர் புனத்தின் வழியாகத் தன் இனத்திற் பிரிந்த ஒரு கலைமான் புகுந்ததோ? என்று கேட்பான். முன்னரே, தலைமகளது மெய் வேறு பாடுகளால், அவள் காதல் கொண்டுள்ளாள் என்று குறிப்பாலுணர்ந் திருந்த தோழியின் மனம் பின்னும் சிறிது தெளிவு பெறும். இம்மட்டோடு அமையாமல், தலைமகன் தழையும் அணியும் கையிலேந்தி அவர் முன்னின்று இத்தழை உமக்கு ஏற்ற உடையாகும், இவ்வணி உமக்கு ஏற்ற அணியாகும் என்று சொல்ல, அப்பொழுது காதலர் இருவர்பாலும் நிகழும் மெய் வேறு பாடுகளால் தோழி இருவருக்கும் முன்னமே காதலுண்டென்று நிச்சயிப்பாள்.

தலைமகன் ஊரும் பெயரும் வினுதல்

யானைசென்றதோ என்று கேட்டல்

மான் சென்றதோ என்று கேட்டல்

அணியும் தழையும் கொண்டு முன் னிற்றல்

> ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
> காதலார் கண்ணே யுள

என்றுற் போல, புறத்து அயலார் போலப் பொது நோக்கு நோக்கியும், இருவர் மனத்திலும் அன்பு நிலைத்துள்ளதென்று தோழி தன் அறிவால் உணர்வாள். இன்னும்,

> ஏனல் காவல் இவளு மல்லள்
> மான்வழி வருபவன் இவனு மல்லன்

நரந்தங் கண்ணி இவனொ டிவளிடைக்
கலந்த உள்ளமொடு கருதியது பிறிதே
நம்முன் நாணுநர் போன்று
தம்முள் மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சிபோல
உள்ளத் துள்ளே மகிழ்ப
சொல்லும் ஆடுப கண்ணி னானே

என்று தோழி ஐயம் நீங்கித் துணிவடைவாள். அஃதாவது உண்மையில் இங்கே இவள் தினைப்புனங் காப்பவளும் அல்லள், இவன் மானைத் தொடர்ந்து, அம்மானை நோக்கி வருபவனும் அல்லன். இவர் இருவரும் இங்குக் கருதியது வேறொன்றேயாகும். புறத்தே நாணுடையார் போன்று நடித்து, மதுவை மறைந் துண்ணும் மக்கள் மகிழுமாறு போல, இருவரும் தமக்குள்ளே மகிழ்கின்றார்கள். இன்னும் இவ்விருவர் கண்களும் தம்முள் பேசிக்கொள்கின்றன; ஆதலால் இவ்விருவரும் முன்னரே களவொழுக்க முடையாரெனத் தோழி நிச்சயிப்பாள்.

தோழி குறிப் புணர்தல்

இவ்வாறு தமது காதலைத் தோழியும் உணர்ந்தாளென்று தெரிந்த பின்னர், தலைமகன் தன் குறையை முடிக்குமாறு அத்தோழியை அடுத்தடுத்து நெருங்கத் தொடங்குவான். தழையும் கண்ணியும் கையிலேந்தி, பலகால் குறையிரந்தும், தன் விருப்பம் முற்றுப் பெறாத தலைமகன் தோழியைப் பார்த்து, 'இதுகாறும் எனது விருப்பம் உன்னால் முடியுமென்று கருதி வந்து முயன்றேன். இப்பொழுது அஃது உன்னால் முடியாதென்று உணர்ந்தேன். பெருங்காதலால் உழந்து வருந்தும் எனக்கு இனி மடலேறி உயிர் துறத்

தலைவன் தோழியிடம் தன் குறையிரத்தல்

தலே ஏற்றதல்லால் வேறு வழியில்லை' யென்று தலைவன் கூறுவான்.

காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம்
மடல்அல்ல தில்லை வலி

என்று நாயனார் கூறியவாறு மடல் ஏறத் துணிவான். இவ்வாறு சொல்லக் கேட்ட தோழி பின்னும் சிலகாலந் தான் தலைவனுடன் பேச எண்ணி, 'நாணும், நல்லாண்மையும் உடைய உம்மால் மடல் ஏறுதல் இயலாது' என்று கூறுவாள். அதைக் கேட்ட தலைவன்,

மடலேறத் துணிதல்

நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுற்றேன்
காமுற்றார் ஏறும் மடல்

என்று இயம்புவான்.

முற்காலத்தில் நான் நாணும் நல்லாண்மையும் உடையனா யிருந்தேன். ஆனால் அவ்விரண்டும் இப்போது என்னை விட்டு நீங்கினமையால், மடல் ஏறுவதில் சிறிதும் பின்வாங்க மாட்டேன் என்று தலைவன் உறுதியாக எடுத்துரைப்பான். பின்னும் தோழி அவனைப் பார்த்து, 'மடலூர்வதற்கு ஏற்ற காலமும் பொழுதும் போய்விட்டதே; நீர் இனி எவ்வாறு மடலேறுவது' என்று வினவ,

மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படல்ஒல்லா பேதைக்கென் கண்

என்று, 'பேயும் கண்ணுறங்கும் நள்ளிருள் யாமத்தும் யான் உறக்கம் கொள்ளாது மடலேறுதலே கருதாநிற்பேன்' என்று தலைவன் மிக உறுதியாகக் கூறுவான். இத்தகைய மன உறுதியைக் கண்டு ஆற்றாளாய தோழி, தலைவனைப்

பார்த்து, 'நீர் அவ்வாறு மடலேறி இறந்துபட லாகாது. நம் குறையை நானே முடித்துத் தருகின்றேன். நும்மால் கருதப்பட்டுள்ள தலைமகள் என் மாட்டுப் பெரிதும் அருளுடையாள்' என்று உறுதி கூறக் கேட்டுத் தலைவன் மனமகிழ்ந்து, தன் குறை நிறைவெய்தினனே போல் அவ்விடம் விட்டுப் பெயர்வான். தலைவன் போன பின்பு, தோழி தலைமகள்பால் சென்று என் உயிரனையாய்! நமது தினைப் புனத்துக்கு அடுத்தடுத்து, தழையும் கண்ணியும் கொண்டு பெருந்தகையான் ஒருவன் வருகின்றான். பல கால் வந்தும், தன் குறை நிறைவுறாமையால் பெரிதும் வருந்துகின்றான்.

தோழி தலைவன் கருத்தை முடிப்பதாகச் சொல்லித் தேற்றுதல்

கைதை வேலிக் கழிவாய் வந்துஎம்
பொய்தல் அழித்துப் போனார் ஒருவர்
பொய்தல் அழித்துப் போனார் அவர்நம்
ஐயன் மனம்விட் டகல்வா ரல்லர்

என்று மெலிதாகச் சொல்லிக் குறை நயப்பிக்கத் தலைவியும் தன் இணக்கத்தைக் குறிப்பால் உணர்த்துவாள். உடனே தோழி, தலைவனிடம் விரைந்து சென்று, நிகழ்ந்ததைக் கூறி இருவரையும் ஒரு பொழிலிடத்தே கொண்டு சேர்த்துத் தான் பூக்கொய்வாள் போல, அவ்விடம் விட்டு நீங்குவாள். இவ்வாறு தனியளாய தலைமகளோடு, தலைவன் கலந்து மகிழ்ந்து பின் பிரிந்து செல்வான். இதுபோலவே பின்னும் தோழியால் குறிக்கப்பெற்ற இடத்தைப் பகலிலும் இரவிலும் தலைமகன் அடைந்து, தலைவியுடன் கலந்து இன்பம் எய்துவான்.

தோழி தலைமகளிடம் மெலிதாகச் சொல்லுதல்

தலைமகள் உடம்படுதல்

இவ்வண்ணம் பலகாலும் வந்து இன்பம் நுகருமிடத்து அக் களவொழுக்கம் தலைமகளது நற்றாயாலும், சுற்றத்தாராலும் அறியப்படுமாயின் இழுக்காம் என்று அச்சம் கொண்டு, தோழி தலைமகனிடம் 'இத்தகைய மறைவொழுக்கம் உமது பிறப்பிற்கும் சிறப்பிற்கும் பொருந்தாததாகும். இனி நீர் ஊரார் அறியத் தலைமகளை மணஞ் செய்து கொள்ளுதலே தகுதி' யென்று குறிப்பாகவும் வெளிப்படையாகவும் கூறுவாள்.

வாரித் தாள நகைசெய்து வண்செம் பவள வாய்மலர்ந்து
சேரிப் பரதர் வலைமுன்றில் திரை யுலாவு கடல்சேர்ப்ப
மாரிப் பீரத்து அலர்வண்ண மடவாள் கொள்ளக் கடவுள்வரைந்து
ஆரிக் கொடுமை செய்தாரென்று அன்னை யறியின் என்செய்கோ

என்றும், உங்களிருவர் களவொழுக்கம் ஊராரால் அறியப்பட்டு எங்கும் பேரலராக எழும்பிப் பரவி நிறைந்துள்ளது என்றும் சொல்லக் கேட்ட தலைமகன் விரைந்து அவள் விரும்பியவாறு மணஞ் செய்யாது பின்னும் களவொழுக்கத்தையே கருதி நிற்பான். இவ்வாறு நாட்டில் அலர் எழும்ப, தலைவிக்குத் துன்பங்கள் பலவாகும்.

தோழி தலைவியை மணம் புரியுமாறு தலைவனை வேண்டுதல்

அவள் வீட்டை விட்டு வெளியே போகலாகாதவாறு கடுங்காவல் அமைக்கப்படும். காவலின் கடுமையால் காதலரைக் காணாது தலைமகள் பெரிதும் மனம் வருந்திப் பசந்து மெலிவாள். இவ்வாறு தலைமகள் மெலிந்தது கண்ட அவளது நற்றாய் முதலியோர் தோழியினிடம் இம்மெய் வேற்றுமைக்குக் காரணம் ஏதேனுமுண்டோ என வினவுவார்கள். அப்

ஊரில் அலர் எழும்புதல்

தலைமகள் வருந்துதல்

பொழுது அறிவினல் மிக்க அத்தோழி தாயது அறிவினேடும், தலைமகள் பெருமையோடும், கற்பினேடும், தனது காவலோடும், உலகியலோடும் மாறுபடாதவாறு மாற்றம் உரைப்பாள். 'அன்னய் என்னலும் அறியப்பெறுவது சிறிது உண்டு' என்று தோழி கூறத் தொடங்கி, 'எங்கள் இருவரையும், குதலை தேர் குழவிப் பருவத்தே மாழைகலந்த ஏழையாளரோடு நாட்கோலஞ் செய்து விளையாடி வரும்படி நீ அனுப்பினய். நாங்களிருவரும் அவ்வாறே சென்று வெண்மலர் பரந்த ஒரு தண்மலர்ப் பொழிலிடை விளையாடி நின்றேம். நின்றபொழுது பெருந்தகையாளன் ஒருவன் ஒரு சுனைக்குவளைப் பூக் கொண்டு அவ்வழியே வந்தான். நின்மகள் அவனை நோக்கி, 'அப்பூவினை என் பாவைக்கு நீ அணியத் தரவேண்டும்' என்றாள். அவனும் ஒன்றும் பேசாது பூவைக் கொடுத்து நீங்கினன். இஃது எங்கள் அறியாப் பருவத்தே நிகழ்ந்ததாகும். பின்னும் ஒருநாள் நாங்கள் இருவரும் காவலிருந்த தினைப் புனத்திலுள்ள தினையையும் கவர்ந்து கொண்டு எம்மையும் சினந்து சீறிய ஒரு பெரிய யானையை அவ்வண்ணல் தன் அம்பால் எய்து எம்மைக் காத்தான்.

காரணம் கேட்ட தாய்க்குத்தோழி யுரைத்தல்

மலர் கொடுத்தான் என்றல்

இடர் தீர்த்தான் என்றல்

இன்னும் ஒரு பொழுது நாங்க ளிருவரும் ஆற்றில் நீராடிக்கொண் டிருந்த காலத்தில் அந்நீரானது எங்களை இழுத்துச் செல்வதைக் கண்ட வேலன் போன்ற அவ்வருளாளன் அப்பொழுது வந்து உதவி எங்கள் ஆருயிர் காத்தான். இப்பெருந்தகையாளனிடம் தலைமகள் காதலாற் கலந்துள்ளாள். ஆதலால், நீங்கள் வெறியாட்டயர்ந்தும்,

வேறு மணம் பேசியும் போந்த செயல் கேட்டுப் பெரிதும் வருந்தினமையால் அவள் நலிந்து மெலிந்து வாடினாள் போலும்' என்று சொல்லி முடிப்பாள். இவ்வாறு தோழி கூறக் கேட்ட தலைமகளது பெற்றோரும், உற்றோரும், 'நம் குலமகள் இங்ஙனம் தனக்குரிய காதலனைக் கூடிக் கற்புக் கடம் பூண்டாள்' என்று களிமகிழ் வெய்தி, அவள் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட காதலனுக்கு மணஞ்செய்து மகிழ்வாராயின் அது சிறப்பிற்கு உரியதாகும். அவ்வாறன்றி அவள் கருத்திற்கு மாறாக மணம் முடிக்கக் கருதுவாராயின், காதலர் இருவரும், கருத்து ஒன்றுபட்டு ஒருவரும் அறியாவண்ணம், வெளியேறுவதற்கு வேண்டும் சூழ்ச்சிகள் தோழி செய்தமைக்க, காதலன் தன் காதலியை உடன் கொண்டு தன் ஊர் நோக்கிச் செல்வான். இவ்வாறு தலைமகளை உடன் கொண்டு செல்லும்போது அவளுடைய சுற்றத்தார் திரண்டு வந்து இடைவழியில் தடுக்க, அப்பொழுது தனது பெற்றோரும் உற்றோரும் செய்யும் செயலுக்குச் சிறிதும் மனம் ஒவ்வாது, தன் காதலனைச் சார்ந்து கற்பின் வழி நிற்கும் தலைமகளது தன்மையைக் கண்டு, அவ்வறநெறிக்கு இடையூறு விளையாமல் தலைமகள் கருத்தில் தாமும் உடம்பட்டு, உறவினர் யாவரும் தாம் வந்த வழியே ஊர் நோக்கிச் செல்வார்கள். அதன் பின்னர், தலைவியும் தலைவன் ஊர் சேர்ந்து, இருவரும் மணம்புரிந்து, இல்லறமாகிய நல்லறத்தை இனிது நடத்தி வாழ்வார்கள்.

காதலர் இருவரும் வெளியேறல்

தலைமகளைச் சார்ந்தோர் தடுத்தல்

பயனற்று மீண்டு போதல்

இவ்வாறு காதலனும், காதலியும், மலரும் மணமும் போலவும், மணியும் ஒளியும் போலவும் ஒன்றி வாழ்ந்து

'சுரும்புணக் கிடந்த நறும்பூஞ் சேக்கையில், கரும்பும் வல்லியும் பெருந் தோள் எழுதி, முதிர் கடல் ஞாலம் முழுவதும் விளக்கும் கதிர் ஒருங்கிருந்த காட்சி போலக்' கலந்து மகிழ்ந்து, மறப்பருங் கேண்மையொடு, அறப் பரிசாரமும், விருந்து புறந்தரும் பெருந்தண் வாழ்க்கையும், உடையராய் இன்புற்று வாழ்வார்கள். இவ்வாறு வாழும் காலத்தில், தலைவன் பல காரணங்களால் தலைவியை விட்டுப் பிரிய நேரும். இக்காரணங்களை இறையனார் அகப்பொருள் அறுவகையாக வகுத்துக் கூறுகின்றது. கல்வியின் பொருட்டும், காவல் காரணமாகவும், சமாதானத்தின் பொருட்டும், அரசாங்க நன்மையின் பொருட்டும், பொருள் ஈட்டும் பொருட்டும், விலை மாதர் பொருட்டும் தலைமகன் தலைமகளை விட்டுப் பிரிவான்.

காதலர் இல்லறம் நடத்தல்

தலைமகன் தலைமகளைப் பிரிதல்

தலைவன் முன்னரே அறிவு நூல்களையெல்லாம் அறிந்தவனே யாயினும், பிற நாடுகளிலும் சென்று தனது உலக அறிவைப் பெருக்கிக் கொள்ளக் கருதிப் பிரியினும் பிரிவான். அல்லது நாடாளுமிடத்து, கூனும், குருடும், வறியோரும் முதியோரும் ஆகிய இவரது குறைகேட்டு நிறை செய்யும் பொருட்டும், நாட்டில் பசியும், பிணியும் நீங்கி, வசியும் வளனும் வளர்ந்தோங்குவதற்கு இன்றியமையாத கா வளர்த்தும், குளந் தொட்டும், வளம் பெருக்குதற் பொருட்டும் தலைவன் பிரியினும் பிரிவான். அன்றியும் இருபெரு வேந்தர், தம்முள் மாறுபட்டுக் கலாம் விளைக்க முனைந்து நிற்கு மிடத்து அவ்வரசரது நாட்டில் வாழும் மக்கள் பாலும், மற்றைய உயிர்கள்

பாலும், வைத்த பேரன்பினால் தானே சென்று இருவரையும் இணக்கி வெம்போர் விலக்கும் பொருட்டுத் தலைவன் பிரிய நேரினும் நேரும். இன்னும் அரசாங்கத்திற்குரிய போர்த்தொழில் முதலிய பிற காரணங்களாலும், தலைவன் தலைமகளைப் பிரிய நேரும். இதுவுமன்றி, தலைமகன் தனது முன்னோரால் சேர்த்து வைக்கப் பெற்ற பலவகைப்பட்ட பொருளெல்லா மிருப்பினும் அவற்றைத் துய்ப்பது ஆண் தன்மைக்கு அழகன்றெனநினைந்து, தனது உழைப்பால் ஈட்டும் பொருளை வறியார்க்கு வழங்கி வள்ளலாக வாழ நினைந்து, அப்பொருள் சேர்க்குமாறு தலைமகளைப் பிரியினும் பிரிவான். இன்னும் குழலும், யாழும் எழிலுற ஏத்தி, செஞ்செவிய கஞ்சநிமிர் சீறடியாரகி, அஞ்சொல் இளமஞ்ஞையென அன்னமென மின்ன, வஞ்சியென நஞ்சமென ஒளிரும், வஞ்சமாதர்பால் ஈடுபட்டுத் தலைவன் பிரிய நேரினும் நேரும். இவ்வாறு தலைமகன் பிரிந்து செல்ல, தனியளா யமைந்த தலைமகள் பிரிவாற்றாது பெரிதும் வருந்துவாள். தீயானது தொட்டாரைச் சுடுமேயல்லால், விட்டாரை ஒருபோதும் சுடமாட்டாது. ஆனால் காதலோ, காதலன் விட்டு நீங்கிய காலத்தும் சுடும் தன்மையுடையதாயிருக்கின்றது என்று வருந்திப் பிரிவாற்றாமை யாகிய துன்பத்தால் நலிந்து மெலிவாள். காதல் நோயைப் பிறரறியாதவாறு மறைப்பினும் அது மேன்மேலும் ஊற்றில் நீர் சுரப்பதுபோலச் சுரக்கிறது என்று சொல்லி வருந்துவாள். காதல் நோயை மறைத்தலும் இயலாமல், பிறர்க்கு உரைத்தலும் இயலாமல் மனம் தடுமாறுவாள். காதலாகிய கடலை நீந்திக் கடப்பதற்கு ஏதமற்ற புணை ஒன்றுமில்

பிரிவு நேர்தற்குக் காரணம்

தலைமகள் வருந்திப் புலம்பல்

லையே என்று ஏங்கி வாடுவாள். காதல் நோயால் வருந்தும் தானே, இருள் செறிந்த இரவுக்கு அருந்துணையானதாக ஆற்றாது வருந்துவாள். தன் காதலரைக் காண விரும்பி வருந்தும் கண்களைப் பார்த்து, 'அன்று அவரை மிக விரைந்து நோக்கிய இக்கண்கள் இன்று தாமே இருந்து அழுகின்றன' என்று பரிதபிப்பாள். காதலர் வாராத பொழுது தூங்காது, வந்தபொழுதும் தூங்காது, தன் கண்கள் இடைவிடாது துன்பத்தையே அடைந்தன என்று அரற்றுவாள். தனக்கு நோயும் பசலையும் தந்து, தன் சாயலையும், நாணையும் காதலர் கொண்டாரென்றும், ஒளி நீங்கியவிடத்து ஓடி நிறையும் இருள்போல, தன் காதலன் நீங்கிய உடனே, பசப்பு வந்து நிறைந்து விட்டதென்றும், தன் மனத்திலும், வாக்கிலும், காதலன் தன்னை எவ்வாறோ வந்து சேர்ந்தனன் என்றும் நினைந்து நினைந்து நெஞ்சம் சோர்வாள்: தான் முன் தலைமகனுடன் கூடி நுகர்ந்த இன்பத்தை நினைத்தாலும் பெருமகிழ்ச்சி தருதலால் தேனினும் காதல் இனிதென்று தெளிவாள். தனது நெஞ்சத்தில், பிறரை வாராமல் பாதுகாத்துக் கொண்ட தன் காதலர், தன்னுடைய நெஞ்சின்கண் எப்பொழுதும் நாணாது வருகின்றார் என்று சொல்லி நலிவாள். முன்னாள் தாம் இருவரும் வேறல்லர் என்று சொல்லிப் பின்னால் பிரிந்து வேறாய காதலர், பெரிதும் அருளற்றவர் என்று எண்ணி எண்ணி இரங்குவாள். தனது உயிர்க்கு உயிராகிய காதலரை நனவில் காணாதிருந்

*இரவை நோக்கி வருந்தல்*

*கண்களை நோக்கி வருந்தல்*

*பசலையைக் கண்டு வருந்தல்*

*காதலனது அருளின்மையை நினைந்து வருந்தல்*

தும் கனவில் கண்ட அவரது எழி லுருவத்தையே தன் மனத்தில் அழ கொழுக எழுதிப் பார்த்து ஆனந்திப்பாள். நனவில் தன் காதலரைக் கண்ட இன்பம்போலவே, கனவில் கண்ட இன்பமும் இனிதாயிருந்தது என்றும், நனவு என்ற ஒன்று இல்லையாயின் தான் கனவில் கண்டு களித்த காதலர் தன்னைப் பிரியா ரென்றும், தம் காதலரைக் கனவில் கண்டு அறியாத மகளிரே, நனவில் வாராத காதலரை அன்பிலர் என்று நோவாரென்றும் பலவாறாக ஆற்றியிருப்பாள். பின்னும் மாலைப்பொழுது வந்தபொழுது மாரனது கணைகளால் நலிவுற்று மயங்கியிருப்பாள்.

தலைவனைக் கனவில் கண்டு மகிழ்தல்

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய்

என்று நாயனர் கூறியவாறு, காதலானது காலையில் அரும்பாயிருந்து, பகல்பொழுது முழுதும் முகையா யிருந்து, பின் மாலையில் மலரும் இயல்புடையதாகும். இன்னும் பிரிவாற்றாமையால், காதலியின் கண்கள், தலைமகனை நினைந்து நினைந்து அழுதலால், ஒளி மழுங்கியும், மணந்த நாளில் அழகொடு திகழ்ந்த தோள் மெலிந்தும், நுதல் பசந்தும், வளை கழன்றும், மேனி அழகும் நலமும் அழிந்தும் தோன்றும். இன்னும் தலைமகள் தனது இயல்பாகிய நாணத்தால் அடக்கற்பாலனவாய குறிப்புக்களைக் காதல் மிகுதியால் நிறையழிந்து வெளியிடுவாள். இவ் வுண்மையை,

தலைமகள் மேனி நலம் அழிதல்

மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போல் தோன்றி விடும்

என்று நாயனார் அருளினர்.

தன் காதலர் மீண்டு வருவதாகக் குறித்துச் சொல்லி யிருந்த நாளை நினைந்து நினைந்து நெஞ்சம் குழைந்து வருந்தும் தலைமகளுக்கு, ஒரு நாழிகை ஒரு நாளே போலவும், ஒரு நாள் பல நாள் போலவும் தோன்றும். கண்போன்ற தன் காதலர் வந்து சேர்ந்தால், அவரோடு புலப்பதோ, அன்றிக் கலப்பதோ என்று தனக்குள்ளே ஐயுற்று நிற்பாள். தன் காதலரைக் கண்டபோதே, தன் தோள்மேலுள்ள பசப்புத் தானே நீங்கும் என்று நினைந்து தன்னுள்ளே மகிழ்வாள்.

தலைமகன் மீண்டும் வருதல்

இவ்வாறு தலைமகள் எண்ணி ஏங்கி யிருப்பத் தலைமகனும் தான் மேற்கொண்ட தொழிலை முடித்து மீண்டு வந்து தன் கண்மணி போன்ற காதலியைக் கண்ணாரக்கண்டு களிப்பான். 'என் கருத்திற்கிசைந்த கற்பகமே, மயிலாடுபாவாய், நீ எவ்வளவுதான் மறைப்பினும் உன் கண்கள் காதலை உரைக்கின்றனவே,' என்று குறிப்புணர்ந்து கூறுவான். 'என் கண்ணிறைந்த காதலிக்கு நிறைந்த பெண் நீர்மை பெரிது' என்று நலம் புனைந்துரைப்பான். 'அரும்பில் அடங்கி நிற்கும் மணம்போல், எனது காதலியின் நகையுள் அடங்கியுள்ள கருத்தொன்றுண்டு' என்று கூறுவான்.

காதலுணர்த்தல்

இவ்வாறு தலைமகன் கூறிய குறிப்புணர்ந்த தலைமகள், ஒன்றும் பேசாது, தன் தொடியையும் அடியையும் நோக்கி நாணுற்று நிற்பாள். பின் காதலர் இருவரும் கலந்து மகிழ்ந்து தாம் பெற்ற இன்பத்தைப்

பலவாறு வியந்துரைப்பார்கள். தலைமகள் தன் நெஞ்சைப் பார்த்து, 'ஏ! நெஞ்சே, என் காதலனோடு ஊடுதற்காகச் சென்ற நீ அதனை மறந்து அவருடன் கூடுவதற்கு விரைந்து சென்று விட்டாயே, என் காதலனைக் காணாத விடத்து அவன் செய்யும் தவறுகளையே நினைந்து வருந்தும் நீ, அவரைக் கண்டபோதே அவற்றை யெல்லாம் மறந்து விட்டாயே! அவர் நெஞ்சு என்னை நினையாமல் அவர் அளவிலே அடங்கி யிருப்ப, என் நெஞ்சே! நீ ஏன் எனக்கென நில்லாமல், அவரிடம் சென்றாய்! இவ்வாறு அவர் பின் செல்வது உனது இயல்போ! அன்றிக் கெட்டார்க்கு நட்டார் ஒருவரும் இல்லை என்னும் உலக இயல்போ! துன்பம் வந்த காலத்தில் நீயே எனக்குத் துணையாகாதவழி வேறு யார்தாம் துணையாவார்! மாண்பு அற்ற உன்னோடு கூடி என்னுயிரினும் இனிய நாணத்தை மறந்து விட்டேனே!' என்று கூறித் தன் நெஞ்சோடு புலம்புவாள்.

தலைமகள் தன் நெஞ்சொடு பேசல்

இவ்வாறு வாழ்ந்து வருகின்ற தலைவனுக்கும் தலைமகளுக்கும் ஊடல் உண்டாதலும் இயற்கையே யாகும். "ஊடுதல் காமத்திற்கு இன்பம்," என்று நாயனாரும் ஊடலின் உண்மைத் தன்மையை எடுத்துரைத்தார். பெரும்பாலும், தன் காதலன் பொதுமகளுடன் கூடிக் களித்திருந்தான் என்னும் ஆற்றாமையால் தலைமகள்மாட்டு ஊடல் நிகழும். அன்புபற்றி விரும்பாது, பொருள் பற்றியே விரும்பும், பொதுமாதரின் இணக்கம் கேடுதரும் என்று நாயனார் நன்றாய் எடுத்துரைத்துள்ளார்.

ஊடல் இன்பம்

வரைவிலா மாண்இழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு

என்று திருக்குறளில் பொது மாதரது அனிச்ச மலரினும் மெல்லிய தோள்களைப் புரையில்லாப் பூரியர்கள் ஆழும் அளறு என்று மிக இழிவாக நாயனார் எடுத்துரைத்தார். இன்னும், 'மதி நலத்திற் சிறந்த அறிவுடையார் பொது மாதருடைய புன்னலம் தோயார்' என்று நாயனார் அருளுகின்றார். இத்தகைய பொது மகளிடம் தன் காதலன் சென்று வந்தான் என்று உணர்ந்த தலைமகள், அவனோடு ஊடலாகி நிற்பாள். இவ்வாறு ஊடல் நிகழ்ந்த காரணம் யாதென்று கேட்ட தோழிக்கு, தலைமகள் மிக நயமாக மறுமொழி கூறுவாள். நான் என் கண்மணி மேற்கொண்ட காதலால், இம்மையில் நாம் பிரியோம் என்று சொல்ல, அதற்கு மறுபிறப்பில் பிரிவோம் என்று நான் பொருள் கொண்டதாக எண்ணி அவள் கண்களில் கண்ணீர் ததும்பிற்று. இன்னும் அவளைப் பிரிந்திருந்த காலத்தில் அவளையே இடைவிடாது நினைந்திருந்தேன் என்னும் கருத்து கொண்டு 'நான் உன்னை நினைத்தேன்' என்றேன்.

ஊடலின் காரணம் உரைத்தல்

அவ்வாறு சொல்ல, நான் இடையே சிலகாலம் அவளை மறந்திருந்து பின் நினைத்ததாகப் பொருள் கொண்டு என்னிடம் புலந்தாள். இன்னும், நாங்கள் இருவரும் ஒருங்கே இருக்கும்போது, நான் தும்மினேன்; உடனே அவள் என்னைப் பார்த்து, 'உமது காதலுக்குரிய பெண்களில் எவர் நினைக்க நீர் இப்போது தும்மினீர்!' என்று சொல்லிப் புலந்து அழுதாள். தும்மினால் இவள் தவறாக எண்ணுவாள் என்று எண்ணி, எழுந்த தும்மலை அடக்கினேன். அதை அறிந்து, 'நீர் காதலித்த பெண் உம்மை இப்போது நினைத்ததை நான் அறியவொட்டாது மறைக்கப் பார்க்கின்றீரோ!' என்று சொல்லிப் புலந்தாள். இவ்வாறு தலைமகன் கூறக்

கேட்ட தோழி தனது இனிய மொழிகளால் தலைவியின் ஊடல் தீர்ப்பாள். ஊடலே காதலர்க்குக் கழிபேருவகை தருவதாகும் என்பது,

> உணலினும் உண்டது அறல்இனிது காமம்
> புணர்தலின் ஊடல் இனிது

என்னும் குறளால் இனிது விளங்கும். இன்னும்,

> துனியும் புலவியும் இல்லாயிற் காமம்
> கனியும் கருக்காயும் அற்று

என்று ஊடலின் தன்மையை நாயனார் நன்றாக எடுத்துரைத்தார். இவ்வாறு, ஊடலாலும் கூடலாலும் இன்புற்று உடலே இரண்டாய் உயிர் ஒன்றாய் ஒன்றி வாழும் காதலர் இருவரும் பலவகைப் பேறுகளும் பெற்று வாழ்ந்து, இவ்வுலக வாழ்க்கையின் நிலையாமையைத் தேறித் தெளிந்து,

உலகின் நிலையாமை கண்டு பேரின்ப வழி நிற்றல்

> பாங்கரும் சிறப்பிற் பல்லாற் றானும்
> நில்லா வுலகம் புல்லிய நெறித்தே

என்னும் உண்மை யுணர்ந்து, சிறுநெறி விலக்கிப் பெருநெறி பிடித்தொழுகும் பெருமை பெற்று முழுமுதற் பொருளாய இறைவனுடன் இரண்டறக் கலந்து பேரின்பம் எய்துவர்.

## கூ. திருக்குறள் உவமைத்திறம்

உலகில் வழங்கி வருகின்ற ஒவ்வொரு மொழியிலும் நூல் இயற்றுகின்ற புலவர்கள் பலவகை அணிகளை ஆங்காங்கு அமைத்துத் தமது நூலை அழகு செய்வது வழக்கம். அவ்வாறே தமிழ் மொழியிலும் நூல் எழுதப் போந்த புலவர்கள் சிந்தைக்கும் செவிக்கும் இன்பம் தருவனவாகிய பலவகை அணிகளை அமைத்து அழகு செய்துள்ளார்கள். இத்தகைய அணிகளில் உவமை அணி என்பதே சிறந்ததாகும்.

**உவமை அணியின் தன்மை**

ஒரு நூலாசிரியர் தாம் எடுத்துக்கொண்ட பொருளை இனிது விளக்கி மேம்படுத்தும் பொருட்டு அதனோடு மற்றொரு தெரி பொருளை ஒப்பிடும் பான்மையே உவமை யென்று சொல்லப்படும். இத்தன்மை வாய்ந்த அணி பலவகையாக இலக்கியங்களில் பயின்றுள்ளது.

**சங்க நூல்களும் பின் நூல்களும்**

உவமை அணியை ஆளும் தன்மையில் சங்கமருவிய நூல்களுக்கும், பிற்காலத்து நூல்களுக்கும் பெரிதும் வேற்றுமை காணப்படுகின்றது. சங்கநூல்களில் காணப்படுகின்ற உவமைகள் பெரும்பாலும் மிகை படாமல், எடுத்துக் கொண்ட பொருளை இனிது மனத்தில் விளக்குகின்றன. ஆனால் பிற்காலத்துச் சிலவற்றில் ஆளப்பட்டுள்ள உவமைகள் வரம்பு இகந்து மிகை பட்டு வனப்பின்றி அமைந்திருக்கின்றன.

தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் அமைத்திருக்கின்ற உவமைகள் பெரும்பாலும் ஆழமும் அழகும் உடையனவாய், நவில்தோறும் நமக்கு இன்பம் தந்து மகிழ்விக்கின்றன. உவமைக்காக எடுத்துக்கொள்ளும் பொருளும், எப்பொழுதும் நம்மைச் சுற்றிலும் காணப்படும் சாதாரணப் பொருள்களாகவே இருக்கக் காண்கின்றோம். இத்தகைய சாதாரணப் பொருள்களைக் கொண்டு உயரிய உண்மைகளை ஆசிரியர் விளக்கும்திறம் கண்டு மகிழ்வதற் குரியதாகும். உலகப் பொருள்களை ஒரு புலவர் பார்ப்பதற்கும், மற்றையவர்கள் பார்ப்பதற்கும் பெரிதும் வேற்றுமை யுண்டென்று அறிவுடையோர் கருதுகின்றார்கள். மற்றைய மக்களுக்குச் சாதாரணப் பொருள்களாகவே தோன்றும் உலகப் பொருள்கள் புலவர்கள் மனத்தில் மாண்புடைய கருத்துக்களையும், எண்ணங்களையும் எப்பொழுதும் எழுப்புவனவாகும். நறுமணங் கமழும் நந்தவனத்தில் செல்லும் ஒருவன், அதன்கண் அழகிய பல நிறங்களோடு அமைந்து விளங்கும் மலர்களைக் கண்டு மகிழ்வான். அம்மலர்களின் இனிய மணத்தை நுகர்ந்து இன்பமடைவான். ஆனால் ஒரு புலவன் அந் நந்தவனத்தில் செல்வானானால், அங்கு அவன் கண்ணெதிரே தோன்றும் ஒவ்வொரு மலரும் இறைவனது பெருங் கருணைத்திறத்தையும் பேராற்றலையும் விளக்கிக் காட்டும் விழுமிய பொருளாக அமையும். மலரில் அமைந்து விளங்கும் மணமானது இறைவனுடன் இரண்டறக் கலந்த ஆன்றோர் தன்மையை அறிவுறுத்தி நிற்கும். இதுவே கற்றோர் ஒரு பொருளைக் காண்பதற்கும், மற்றோர் அதனைக் காண்பதற்கும் உள்ள வேற்றுமையாகும்.

சாதாரணப் பொருளை உவமையாகக் கூறல்

இத்தன்மையை நாயனார் குறளில் நன்கு காணலாம். தலையினின்றும் மயிரானது பிரிந்து கீழே விழுவதை நாம் ஒவ்வொரு நாளும் கண்டிருக்கின்றோம். ஆனால் அக்காட்சி நம்முடைய மனத்தில் ஓரெண்ணத்தையும் எழுப்பியதில்லை. ஆனால் இப்பொருளை உவமையாகக் கொண்டு நமது ஆசிரியர் ஓர் உயர்ந்த உண்மையை வெளியிடுகின்றார்.

தலைமயிரும் இழிந்த மக்களும்

தலையின் இழிந்த மயிர்அனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை

என்னும் குறளில் கண்ட உவமையைச் சிறிது கருதுவோம். மக்களாய்ப் பிறந்தவர்கள், தமக்குரிய நிலையினின்றும் தவறு வார்களானால், அவர்கள் தலையினின்றும் இழிந்த மயிரினை ஒப்பார்கள் என்பது இக்குறளின் கருத்தாகும். மக்களாய்ப் பிறந்தவர்கள் தமது உயர் பிறப்பிற்கு உரிய ஒழுக்கத்தில் தவறாதவர்களாய், தமக்குரிய நிலையில் வழுவாது இருப்பார் களேயானால், எல்லாராலும் போற்றப் படுவார்கள். ஆனால், மக்கள் தம் நிலையினின்றும் தவறுவார்களாயின், எல்லாரா லும் அவமதிக்கப்பட்டு இழிவடைவார்கள். தலையிலுள்ள மயிரானது தனக்குரிய உயர்ந்த இடத்தில் இருக்குமளவும், நறுநெய்பூசி, நன்மலர்சூடி, பூவும் புகையும் மேவிய விரை யும் பொருந்தித் திகழும். ஆனால் அம்மயிரானது, தன் னிலையினின்றும் தவறிக் கீழே விழுமானால் தனது வளமும் வனப்பும் இழந்து, காலால் மிதியுண்டு, புழுதியில் விழுந்து, துடைப்பத்தால் புழைக்கடையில் தள்ளுதற்குரிய தன்மை எய்தும். இவ்வுவமையின் பொருத்தமும் உண்மையும் தெளிவாக விளங்குகின்றது.

இன்னும் ஓர் உவமையை எடுத்துக்கொள்வோம். உறங்குவதும், விழிப்பதும் நாம் ஒவ்வொருவரும், ஒவ்வொரு நாளும் செய்கின்ற தொழில்களாம். சிலர் தம் மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றில், ஒரு நாளிலேயே பலமுறை உறங்குவதும் விழித்தலும் உண்டு. ஆயினும் அந்நிகழ்ச்சி நம் மனத்தில் யாதோர் அரிய கருத்தையும் தூண்டியதில்லை. ஆனால் நம் தெய்வப்புலவர், இச் சாதாரணப் பொருளைக் கொண்டு, விளக்குதற்கரிய மறு பிறப் புண்மையை நன்கு விளக்குகின்றார்.

> உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
> விழிப்பது போலும் பிறப்பு

மக்கள் இவ்வுலகில் இறத்தலும், பிறத்தலும், இயல்பாகவே மாறி மாறி வருகின்றன. பிறந்தவர் இறத்தலும், இறந்தவர் மீண்டும் பிறத்தலும், உறங்குவதும் பின் உறக்கத்தினின்றும் விழித்தலும் போலவே இருக்கின்றன. ஒருவன் உறங்கும் காலத்தில், அவனுடைய ஐம்பொறிகளும் அயர்ந்து, உணர்வு அற்றிருந்தாலும், மனம் அயராத நிகழ்ச்சி யுடையதாய் இருத்தல் போல, 'இறக்கும் பொழுது உடல் ஒன்றே பொன்றி ஒழியுமன்றி, அவ்வுடம்பில் தங்கியிருந்த உயிர், அழியாது மறு பிறப்பில் சென்று சேரும்.' இவ்வுவமையின் நயத்தை உணர்ந்தே, மணிமேகலை நூல் செய்த சீத்தலைச் சாத்தனார்,

உறங்கலும் விழித்தலும் இறத்தலும் பிறத்தலும்

> பிறந்தவர் இறத்தலும் இறந்தவர் பிறத்தலும்
> உறங்கலும் விழித்தலும் போன்றது உண்மையின்

என்று திருக்குறள் உவமையையே அமைத்துத் தம் நூலை அழகு செய்தனர்.

இன்னும் மற்றொரு சாதாரண உவமையால் நாயனார் நட்பின் திறத்தினை நன்றாக எடுத்துரைத்தார்.

உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு

கை மானம் காத்தலும் நண்பன் துன்பங் களைதலும்

ஒருவனது மானத்தைக் காக்கின்ற ஆடைநெகிழ்ந்துவிடுமாயின், கையானது விரைந்து சென்று அவிழ்ந்த ஆடையைக் கட்டுவதை நாம் ஒவ்வொருவரும் கண்டிருக்கின்றோம். இதனை உவமையாகக் கொண்டு நட்பின் இயல்பை நாயனார் விளங்க வைத்தார். ஒருவன் அரையில் கட்டியிருக்கும் ஆடை அவிழ்ந்து விழுமேயானால், அவ்வரைக்கு வந்த மானத்தைத் தனக்கு வந்ததாக எண்ணி, கையானது விரைந்து சென்று உடையை மறுபடியும் உடுத்து மானம் காக்கும். அதுபோல, ஒருவன் துன்பத்தால் வருந்துவானாயின், அவனுக்கு நேர்ந்த துன்பத்தைத் தனக்கு நேர்ந்ததாக நினைந்து, விரைந்து சென்று அத்துன்பத்தைக் களைதலே, நண்பனது தன்மையாகும். மெய்வேறு கைவேறு என்னும் வேற்றுமையின்றி மெய் தானடைந்த மானத்தைக் கை தானாகவே சென்று காத்தல் போல, அவன் வேறு தான் வேறு என்னும் உணர்ச்சி யின்றி அவனே தானாய்த் தானே யவனாய் எண்ணி, அவன் வேண்டிக் கொள்ளாத நிலைமையில், தானே விரைந்து சென்று துயர் களைதல் நண்பனது தன்மையாகும். இவ்வாறு உலகில் ஒவ்வொருவரும் அறிந்த ஒரு நிகழ்ச்சியைக் கொண்டு நாயனார் ஓர் உயரிய உண்மையைத் தெளிவாக விளக்கியுள்ளார்.

இன்னும் நாம் எங்கெங்குச் சென்றாலும், நமது நிழலும் நம்முடனே தொடர்ந்து வரக் காண்கின்றோம்.

நாம் நின்றாலும், இருந்தாலும், நடந்தாலும், துயின்றாலும்,

நிழலும் வினையும் — நமது நிழல் நம்மை விட்டு ஒரு பொழுதும் பிரிவதில்லை. அதுபோல, நாம் செய்த வினை நம்மை விட்டு ஒரு சிறிதும் விலகாமல், பல பிறவிகளிலும் தொடர்ந்து வரும் என்னும் கருத்தை நாயனார்,

> தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
> வீயாது அடியுறைந்து அற்று

என்று கூறுகின்றார். தன்னால் விளைந்ததாயும், தன்னை விட்டு விலகாததாயுமுள்ள தீவினைக்கு ஒரு பொருளின் சாயலாய் அதனையே தொடர்ந்து செல்லும் நிழலை உவமை கூறியது, மிக அழகியதாகும். இன்னும் தீவினையைக் கருமை யென்றும், நல்வினையைச் செம்மை யென்றும் உருவகப் படுத்தும் வழக்கத்தைத் தழுவித் தீவினையைக் கருமை நிற முடைய நிழலோடு உவமை கூறியது மிகப் பொருத்த முடையதென்று கருதலாம். நிழலைத் தருகின்ற பொருள் எந்நிற முடையதா யிருப்பினும், அந்நிழலை நம் கண்களுக் குத் தோற்றுகின்ற ஒளி எத்தன்மையதாய் இருப்பினும், நிழலின் நிறம் எப்பொழுதும் கருமையாகவே இருக்கும். தீவினை செய்தவர் எந்நிலையிலுள்ளவரே யாயினும் எத்தன்மை வாய்ந்தவராயினும் தாம் செய்த வினையின் பயனினின்றும் தப்பிப் பிழைப்பது அரிதாகும்.

திருக்குற ளாசிரியர் எடுத்தாளுகின்ற உவமைப் பொருள்கள் பெரும்பாலும், நாட்டுப் புறங்களிலேயே காணப்படுகின்ற பொருள்களாய் இருத்தலால், மற்றைய பெரும் புலவர்களைப் போன்று, நாயனாரும், இயற்கை நலம் பெரிதும் அமைந்து விளங்கும் நாட்டுப்புறத்திலேயே

வாழ்ந்து வந்தார் என்று கருத இடமிருக்கின்றது. பெரும் புலவர்களாய் உலகில் விளங்கியவர்களில், பெரும்பாலார், செயற்கை நலங்கள் செறிந்து விளங்கும் நகரவாழ்க்கையை விரும்பாது, இயற்கை நலங்கள் எழிலுற விளங்கும் நாட்டுப் புறங்களையே தமது வாழ்க்கைக்குத் தகுந்த இடமாகக் கொண்டிருந்தார்கள் என்பது புலவர் வரலாற்றால் அறியப்படுகின்றது. நாயனார் தமது நூலில் ஊர் நடுவே யிருக்கும் ஊருணியையும், ஊர் நடுவே பழுக்கும் மரங்களையும், வயல்களில் பறிக்கின்ற களைகளையும், மற்றும் இவை போன்ற பொருள்களையும் உவமையாக எடுத்து அமைக்கின்றார்.

**நாட்டுப் பொருள்கள் உவமை யாதல்**

ஒவ்வொரு சிற்றூரிலும் ஊர் நடுவே அமைந்திருக்கும் ஊருணியை உவமையாகக் கொண்டு,

> ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
> பேரறி வாளன் திரு

என்று ஆசிரியர் ஒரு விழுமிய உண்மையை விளக்குகின்றார். உயர்ந்த அறிவுடையா னிடத்துள்ள செல்வம், ஊருணியில் நிறைந்து நிற்கும் நீர்போ லாகும் என்பது இக்குறளின் கருத்தாகும். ஊருணி யென்னும் பெயரே ஊரிலுள்ளார் உண்பதற்காக அமைந்த நீர்நிலை யென்று பொருள் படுகின்றது. ஊர் நடுவே உள்ள குளத்தில் தாகத்தால் வருந்தும் மக்கள் நீரை அள்ளி உண்டு தமது தாகவிடாய் தணித்துக் கொள்ளுதல்போல, வறுமையால் வருந்தும் மக்கள் செல்வனிடம் சென்று பொருள் பெற்றுத் தம் வறுமை நோயை நீக்கிக் கொள்வார்கள். நண்பகலிற் சென்றாலும், நள்ளிரவில் சென்றாலும், வரையாது

**ஊருணியும் செல்வரும்**

கொடுக்கும் வன்மையுடைய குளத்தைப்போல, வறியவர்கள் எப்பொழுது சென்றாலும் இல்லையென்று சொல்லாமல் அறிவுடைய செல்வர்கள் தம்மிடம் உள்ள பொருளைக் கொடுப்பார்கள். தாகத்தால் வருந்தி வாடும் உயிர்களுக்குத் தண்ணீர் கொடுப்பதற்காகவே நிரப்பி வைக்கப்பெற்றுள்ள குளத்தின் நீரைப் போல, பொருளற்றவர்க்குக் கொடுப்பதற்காகவே செல்வரிடத்து நிரம்பிய செல்வம் இறைவனால் அமைக்கப்பட்டுள்ளது. ஊருணியில் நிறைந்த நீர் எப்பொழுதும் தண்மையுடையதாய் இருத்தல் போல, பொருள் கொடுப்போர் உள்ளமும், கனிந்து குளிர்ந்து ஈரமுள்ளதா யிருக்கும். இத்தகைய ஈரமுள்ள நெஞ்சத்தவரே அறவோ ரென்றும், அந்தண ரென்றும் உலகோரால் அழைக்கப் பெறுவார்கள்.

இன்னும் உலகில் மக்களாய்ப் பிறந்தார்க்கு வரும் துன்பத்தின் தன்மையையும், அதன் பயனையும் நாயனார் மிக அழகாக வெளியிட்டிருக்கின்றார்.

> சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடுந் துன்பம்
> சுடச்சுட நோற்கிற் பவர்க்கு

**பொன்னைச் சுடுதலும், துன்பம் வாட்டுதலும்**

பலவகைப்பட்ட மாசு மறுக்களோடும், மற்றை அழுக்குக்களோடும் பொருந்தியிருக்கும் பொன்னைப் புடத்தில் வைத்துச் சுடச் சுட அப்பொன்னைப்பற்றி யிருக்கும் மாசெல்லாம், நெருப்பில் பொன்றி ஒழிய அப்பொன்னின்நிறம் மிகச்செவ்வியதாய்த் தூயதாய் விளங்குதல்போல, துன்பம் அடுத்தடுத்து வருவதால் உயிர்கள் தூய தன்மையடையும் என்பது இக்குறளின் கருத்தாகும். பொன்னைப் பற்றிக்கொண்டிருந்தே, அதன் இயற்கை ஒளியை மறைக்கின்ற மாசைப் போலவே உயிரோடு ஒன்றி நின்று உயிரின்

இயல்பை மறைக்கின்ற மலம் ஒன்றுண்டு. அம்மலம் துன் பத்தால் மாயும். இவ்வுலகில் துன்பமென்று தோன்றுவன வெல்லாம், உண்மையில் நமக்கு இன்பம் பயப்பனவே யாகும். நாம் சிற்றறிவும் சிறு தொழிலும் உடைய பொருள் களாதலால், துன்பத்தின் உண்மைத் தன்மையை உணராது, துன்பம் வந்தபொழுது இறைவனையும், விதியையும் நொந்து, விம்மி விம்மி அழுதும், இன்பம் வந்தபொழுது அகம் மிக மகிழ்ந்தும் உயிர் வாழ்கின்றோம். ஆனால் உலகின் உண்மை நிலை யறிந்த உயர்ந்தோர் மெய்த்திரு வந்துற்றாலும், வெந் துயர் வந்துற்றாலும் ஒத்திருக்கும் உள்ளத் தாரவோராகி உலகில் வாழ்வார்கள்.

> வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால்
> மாளாத காதல் நோயாளன்போல் மாயத்தால்
> மீளாத் துயர்தரினும் வித்துவக்கோட்டு அம்மானே
> ஆளாஉனது அருளே பார்ப்பன் அடியேனே

என்று குலசேகரப் பெருமாளும் திருவாய் மலர்ந்தனர். நோய்க்கு மருந்து கொடுக்கும் வைத்தியன் அந்நோயைக் குணப்படுத்தும் பொருட்டு நோயுற்ற இடத்தை வாளால் அறுத்து, தீயால் சுட்டு எரித்தாலும் அவ்வைத்தியனிடத் தில் சிறிதும் வெறுப்பின்றி, அளவிறந்த அன்புகொண்டு வாழும் நோயாளன் போல், இறைவன் அடுத்து அடுத்துத் துன்பத்தையே கொடுத்தாலும் உயிர்கள் இறைவனது அருளின் திறத்தையே வியந்து மகிழுமல்லாமல் அவன் மாட்டுச் சிறிதும் அன்பில் குறையா. மருத்துவன் காயத்தை அறுத்துச் சுட்டு வருத்துவதன் நோக்கம் நோயைக் குணப்படுத்துவதே யாகும். அது போலவே, இறைவன் உயிர்களுக்குத் துன்பத்தைக் கொடுப்பதன் நோக்கம், அவர்களைச் செம்மைப் படுத்தி, நல்வழிப் படுத்து

வதே யாகும். இறைவனிடத்து அன்பில்லாதவரும் இறைவனை யில்லை யென்று கொள்வாரும், துன்பத்தால் நலியும்பொழுது, தம் கொள்கை மாறிப் பரம்பொருளிடத்தில் பதிந்த அன்புடையராதலை நாம் பலகாலும் கண்டும் கேட்டும் இருக்கின்ற ஒன்றே மேற் கூறிய உண்மைக்குப் போதிய சான்றாகும்.

இன்னும் நாயனார் எடுத்தாளுகின்ற உவமைகளில், அவர் உலகில் வாழும் உயிர்களின் சிறப்புத் தன்மைகளை யெல்லாம் செவ்வையாய் அறிந்திருந்தார் என்பது தெளிவாக விளங்குகின்றது. காட்டில் வாழும் யானை, மான் முதலிய விலங்கினங்களின் தன்மையையும், நாட்டில் வாழும் காகம், புள் முதலிய பறவைகளின் சிறப்பியல்களையும், நீரில் வாழும் ஆமை, முதலை முதலிய உயிர்களின் இயற்கைக் குணங்களை யும் ஆசிரியர் நன்றாய் அறிந்திருந்தார் என்பதற்கு அவரது உவமைகளே போதிய சான்றாகும். காட்டில் வாழும் விலங்குகளில் எல்லாம், பெருத்த உடலும், கூரிய கொம்பு களும் உடைய யானையானது, சிறுத்த உடலையுடைய புலி யைக் கண்டு அஞ்சும் என்பது உண்மையாகும். பெரும் திறமையும், அருங்கருவியும் யானையிடம் அமைந்திருப்பினும், புலியைப்போல ஊக்கமாய் ஓடிப் பாயும் தன்மையற்று மந்தமாய் இருத்த லால், புலியைக் கண்டு யானை அஞ்சும். இவ்வுண்மையை நாயனார்,

உயிர்களின் சிறப் பியல்கள்

யானையும் புலியும்

> பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
> வெரூஉம் புலிதாக் குறின்

என்று கூறினார். இன்னும் காட்டில் வாழும் கவரிமான் தன்னிடமுள்ள நீண்ட முடியில், ஒரு முடி அற்று விழுந்து

விடுமேயானால், அதற்கு மனம் பொறாமல் தன்னுயிரை மாய்த்துக்கொள்ளும் இயல்புடையதாகும். இவ்வியல்பைத் தெரிந்த வேடர்கள் அம்மான் செல்லும் வழியில் அடர்ந்த முள்ளைக் கொண்டு போட்டிருப்பார்க ளென்றும், கவரிமான் அவ்வழியாகச் செல்லும் பொழுது அதன் நீண்ட முடி அம்முள்ளில் சிக்கிக் கொள்ளுமென்றும், அவ்வாறு சிக்கிக்கொண்ட முடி சிதைந்தாலும் அறுந்தாலும் அம் மான் அவ்விடத்திலேயே உயிர் துறக்குமென்றும் கூறுகின்றார்கள். இத்தன்மையை நன்குணர்ந்த நாயனார்,

கவரிமான் தன்மை

> மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
> உயிர்நீப்பர் மானம் வரின்

என்று கூறிப் போந்தார். ஒரு மயிர் தன்னை விட்டுப் பிரிந்தால் உயிர் வாழ ஒருப்படாத மானைப்போல, மானமே உயிரினும் மாண்புடையதென்று கருதுகின்ற மக்கள், மானம் அழிய நேருமாயின் உயிர் துறப்பார்கள் என்பது இக்குறளின் கருத்தாகும்.

இனி, நீரில் வாழும் ஆமையிடத்து ஓர் அருங்குணம் அமைந்து விளங்குகின்றது. தான் நினைத்தபொழுது தனது ஐம்பொறிகளையும் அடக்கிக்கொண்டு ஓடுபோல் கிடக்கும் தன்மை ஆமையிடம் உண்டு. அதுபோல ஒருவன் தனது ஐம் பொறிகளையும் அடக்கி யாளும் திறமை யுடையவனா யிருப்பின், அவ் அடக்கம் அவனுக்கு எழு பிறப்பினும் நன்மை தரும் என்னும் உண்மையை நாயனார்,

ஆமையும் முதலையும்

> ஒருமையுள் ஆமைபோல் ஐந்துஅடக்க லாற்றின்
> எழுமையும் ஏமாப்பு உடைத்து

என்னும் குறளால் இனிது எடுத்துரைத்தார்.

இன்னும் நீரில் வாழும் முதலை, தனக்குரிய நீரில் உள்ள அளவும், மிக வலிமை யுடையதாய், அந்நீரில் இறங்கும் யானையையும் இழுத்துச் செல்லும் திறமுடைய தாய் விளங்கும். ஆனால் அம்முதலை நீரைவிட்டு நீங்கிக் கரையிலிருக்கும் பொழுது அதனை ஒரு சிறு நாயும் இழுத் துச் செல்லும் இயல்புடையதாகும். இதனை நாயனார்,

> நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
> நீங்கின் அதனைப் பிற

என்று அருளினார்.

இனி நாட்டில் வாழும் காகம், தான் உண்ணும் பொழுது தன் இனத்தைக் கூவி யழைத்து மற்றைய

காகமும், புள்ளும் — காக்கைகளுடன் கலந்து உண்ணாமல், தனியாய் ஒரு பொழுதும் உண்பதில்லை.

இத்தன்மையை,

> காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
> அன்னநீ ரார்க்கே உள

என்று திருவள்ளுவர் சிறப்பித்துக் கூறினார்.

நமது நாட்டில் 'புள்' என்னும் சிறப்புப் பெயர் வாய்ந்த ஒருவகைப் பறவை உண்டென்றும், அது முட்டையினின் றும் வெளிப்படும் பொழுதே பறந்து போகும் இயல் புடைய தென்றும் பறவை நூல் உணர்ந்தார் கூறுகின்றனர். புள்ளென்னும் சொல் பறவை யென்னும் பொருள் குறிக் கும் பொதுப் பெயரே யாயினும், சிறப்பாக மேற்கூறிய தன்மை யமைந்த பறவைக்கே வழங்குகின்ற தென்று அறிந்தோர் கருதுகின்றனர். இப்பறவையின் இயல்பை நன்கு உணர்ந்த நாயனார், அதனை உவமையாக அமைத்து ஓர் அரிய உண்மையை அருளிச் செய்தார். நமது உட

லுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பானது, புள்ளின் முட்டைக்கும், அவ்வுயிருக்கும் உள்ள தொடர்பு போன்றது என்று ஆசிரியர் உவமை கூறுகின்றார். புள்ளின் முட்டையும், அதனுள் அடங்கிய உயிர்ப் பொருளும் இவ்வுலகில் ஒரே காலத்தில் தோன்றின. அதுபோல நமது உடலும், அவ்வுடலில் அடங்கி நிற்கும் உயிரும் ஒன்றாய் உலகில் தோன்றின. இனி முட்டையில் கருவாயிருந்த உயிர்ப் பொருளானது உருப்பட்டு வெளிப்படும் வரையில், அம்முட்டை அவ்வுயிர்க்கு ஆதாரமாய் நின்றது. அது போல உடம்பினின்றும் உயிர் பிரியும் வரையும், உடம்பே உயிர்க்கு ஆதாரமாய் நிற்கின்றது. முட்டையினின்றும் வெளிப்பட்டுப் போன புள்ளாகிய பறவை மீண்டும் அம் முட்டையில் வந்து சேர்வதில்லை. அதுபோல, உடம்பை விட்டுப் பிரிந்த உயிர் பின் அதனிடம் சென்று சேர்வதில்லை. இவ்வாறு புள் என்னும் பறவையின் தன்மையை உணர்ந்து அதன் இயல்பை உவமையாகக் கொண்டு மிக விழுமிய உயிர் உண்மையை நாயனார் விளக்கிய திறம் கண்டு மகிழ்வதற் குரியதாகும்.

> குடம்பை தனித்து ஒழியப் புள்பறந் தற்றே
> உடம்பொடு உயிரிடை நட்பு

என்னும் குறளே மேற்கூறிய கருத்தைத் தன்னிடம் கொண்டு திகழ்கின்றது.

**உவமையின் ஆழம்**

திருக்குறளில் அமைந்துள்ள உவமைகள் மிக ஆழமும் அழகும் உடையனவாய், நினைக்க நினைக்கப் பொருள் சுரக்கும் பெருமை வாய்ந்தனவாய் விளங்குகின்றன. இவ்வுண்மையை விளக்குவதற்குச் சில உவமைகள் போதியதாகும். உயரிய துற

வறத்திற்கு உரிய ஒழுக்க மில்லாதவர்கள், அந்நிலைக் குரிய உடைகளையும் நடைகளையும் போலியாக அமைத்துக் கொண்டு உலகத்தை ஏமாற்றுகின்ற தன்மையை எடுத்துக் கூறவந்த நாயனார்,

> வலியின் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
> புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று

என்ற உவமையை அமைத்தருளினார். பசும்பயிரை மேயக் கருதிய ஒரு பசுவானது, புலியின் தோலைப் போர்த்துக் கொண்டு பயிரை மேய்ந்தாற்போல உள்ளத் துறவிகளல்லாத கள்ளத் துறவிகள், துறவற நெறிக்குரிய உடையை அணிந்துகொண்டு உலகத்தை ஏமாற்றித் தீங்கிழைக்கின்றார்கள் என்பது இப்பாட்டின் பொருளாகும்.

**புலித்தோல் போர்த்த பசு**

புலித் தோலைப் போர்த்த பசுவானது புறத்தே புலிபோலவே தோன்றுதலால், அதனைக் கண்ட அளவிலே பயிரைக் காக்கின்ற காவலாளர்கள், அஞ்சி நடுங்கி ஓடுவார்கள். அது போல, கள்ள ஒழுக்கமுள்ளவர்கள் துறவியின் ஆடையை அணிந்துகொண்டு உலகத்தில் உலாவும் பொழுது அவரைக்கண்டு தவத்தால் வலியவர் என்று உலகில் வாழும் மக்கள் கண்டு அஞ்சுவார்கள். இன்னும் பயிரை நோக்கி வரும் புலித்தோல் போர்த்த பசுவைப் புலியென்று எண்ணிய காவலாளன், புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது என்னும் உண்மைக் கிணங்கத் தன் பயிருக்குப் புலியால் யாதொரு தீங்கும் விளையாது என எண்ணி நீங்குவான். அதுபோல, பற்றெல்லாம் அற்ற பெரியார்க்குரிய உடை அணிந்த போலியனைப் பெரியாரென்றே எண்ணித் தமது உடைமைக்கு அவரால் யாதொரு தீங்கும் நேராது என்று உலகோர் உறுதியாக எண்ணியிருப்பார்கள். பசுவைப்

புலியென நம்பி ஏதம் செய்யாதென இறுமாந்திருந்த பயி ராளன், பின் பயிரைப் பறிகொடுத்துப் பரிதபித்தல் போல, கள்ளத் துறவியை உள்ளத் துறவி யென்று நம்பிய உலகோர் தம் பொருளைப் பறிகொடுத்துப் பாழடைவார்கள். இக்கருத் துக்க ளெல்லாம் விளங்கித் தோன்ற நாயனார் அழகிய உவமை அமைத்தருளினார்.

இன்னும் பொது மாதரின் இயல்பை எடுத்துரைக்க வந்த நாயனார்,

> பொருட்பெண்டிர் பொய்மை முயக்கம் இருட்டறையில்
> ஏதில் பிணந்தழீஇ யற்று

என்று கூறிப் போந்தார். பொருளையே விரும்பி ஒருவ னைச் சேரும் பொதுமகளது தன்மை, காசுக்காக இருட் டறையில், முன்னறியாத அயற்பிணத்தைத் தழுவும் மக்க ளது தன்மை போன்றது என்பதே இப்பாட்டின் கருத்தாகும். பொருள் வருவாயே நோக்கமாகப் பொதுமகளும் ஒருவனைச் சேர்வாள். அதுபோல, பொருளே நோக்கமாக, பிணம் தழுவும் புன் மக்களும் அறியாத அயல் பிணத்தைத் தழுவுவார்கள். காசையே மதிக்கும் வேசியர் மனத்தில் அன் பில்லாத தன்மைபோலப் பிணத்தைத் தழுவும் மக்கள் மனத் திலும் யாதொரு பற்றும் அமைந்திருக்க மாட்டாது. பொது மாதர் மனத்தில் பற்றென்பதே சிறிதும் அமைந்திராது என்ற உண்மையைக் கவிப்புலவராய கம்பரும் தாடகை வதிந்த கானகத்தின் நிலைமையைக் கூறவந்த இடத்தில், 'பொன் விலைப் பாவையர் மனமும் போல் பசையும் அற்றதே' என்று அழகாக அமைத்தருளினார். தம்மிடம் வருவாரது சாதி, குலம், பருவம் முதலிய ஒன்றையும் கருதாமல், அகத்தே

பொதுமாதர் தன்மை

அருவருத்து வெறுத்தாலும், புறத்தே பொருள் நோக்கிச் சேரும் பொது மகளிர் தன்மை போல அகத்தே அயற் பிணத்தை அருவருத்தும், புறத்தே அதனைப் பொருள் நோக்கித் தழுவுவார்கள். இவ்வுவமையால் வேசியர் உள்ளப் பாங்கை ஆசிரியர் பளிங்கு போல் உணர்த்தியுள்ளார்.

இன்னும், நன்றாகப் பல நூல்களைப் படித்திருந்தும் பேசுந்திறமை அமையப்பெறாத மக்களைப் பற்றிப் பேசவந்த நாயனார்,

மணமற்ற மலர்

*இணரூழ்த்தும் நாறா மலர் அனையர் கற்றது*
*உணர விரித்துரையா தார்*

என்று கூறுகின்றார். கொத்துக் கொத்தாய் மிக அழகாக மலர்ந்திருக்கும் பூக்கள் மணமில்லாதிருந்தால் பயனழிதல் போல, தாம் கற்ற பொருளை எடுத்துச் சொல்லும் இயல்பில்லாதவர்கள் பயனற்றவராவார்கள் என்பது இக்குறளின் பொருளாகும். ஒரு மலரைக் காணும் பொழுது, அதனது அழகிய இதழ்களையும், நிறத்தையும், அழகையும் கண்டு ஆனந்த மடைகின்றோம். இன்னும் கொத்துக் கொத்தாக மலர்ந்து விளங்கும் மலர்களின் அடுக்கையும் அமைப்பையும் கண்டு களிக்கின்றோம். ஆயின் ஒரு மலரின் நலம் அதன் மணமேயாகும். மணமற்ற மலர் மாண்புடையதாகக் கொள்ளப்படமாட்டாது. அதுபோல, பல நூல்களையும் கற்றுணர்ந்த நல்லாரைக் காண்பது நன்றேயாகும். கல்வி அழகைத் தம்மிடத்தில் கொண்டு விளங்குதலால், அவர் காட்சி மனத்திற்குப் பெரிதும் மகிழ்ச்சி தருகின்றது. ஆனால் தாம் கற்ற பொருளைப் பிறர்க்கு எடுத்துச் சொல்ல இயலாதவிடத்து, அவர் கல்வி மணமற்ற மலர் போல் பயனற்றதாகும். இக்கருத்தையே பிற்காலத்துப் புலவர் ஒருவர்,

கல்வியொடு சொல்வன்மையும் அமைந்திருப்பது பொன்மலர் மணமும் உடையது போலாகும் என்று கூறிப்போந்தார்.

இனி உவமானத்திற்கும், உதாரணத்திற்கும் உள்ள வேற்றுமையை நன்றாய் உணர்ந்து கொள்ளவேண்டும். இவ்வேற்றுமையை நாயனார் குறளில் நன்கு காணலாம்.

உவமானமும் உதாரணமும்

பெரும்பாலும் உவமை என்னும் அணியில், உவமானம் என்றும் உவமேயம் என்றும் இரண்டு பகுதிகள் காணப்படும். இவற்றுள் உவமானமாக ஆசிரியர்கள் எடுத்து ஆளும் பொருள், காட்சியாலாவது அல்லது நூலறிவாலாவது, நன்றாய்த் தெளியப்பட்ட ஒரு பொருளாக இருக்கும். இவ்வாறு தெரிந்த பொருளைக் கொண்டு, வேறொரு பொருளின் தன்மையையோ, அல்லது உயரிய உண்மைகளையோ, தெளிவு படுத்துவதே வழக்கமாகும். இதுவே உவமையின் தன்மை யென்று இதுகாறும் ஆராய்ந்த உவமைகளால் அறிந்திருக்கலாம். ஆனல் நாயனார் நூலில் உவமை போன்ற உதாரணங்கள் அமைந்திருக்கக் காண்கின்றோம். அருளில்லார்க்கு அவ்வுலக மில்லாததுபோல, பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை என்பது ஒரு குறளின் கருத்தாகும். அழுக்காறுடையவனிடம் ஆக்கம் இல்லை. அதுபோல ஒழுக்கமில்லானிடம் உயர்வு இல்லை என்பது மற்றொரு குறளின் பொருளாகும். இவைகளில், ஓர் உண்மையை மற்றோர் உண்மையால் விளக்கும் தன்மை காணப்படுகின்றதே யல்லாமல், உவமையணியாக இவற்றைக் கருதுவதற்கு இடமில்லை. ஆகவே இத்தன்மை வாய்ந்த ஒப்புமை காணுமிடத்து அதனை உவமை யென்று கொள்ளாது உதாரணம் என்று கொள்ளுதலே பொருத்தமாகத் தோன்றுகிறது.

இதுகாறும் கூறியவற்ருல், தெய்வப் புலமைத் திருவள்ளுவனுர் தமது நூலில் அமைத்த உவமைகள், அப்பெரியாரது அறிவின் ஆழத்தையும், பரப்பையும், வெள்ளிடை மலைபோல் விளக்குகின்றன வென்பதும், அவர் எடுத்தாளும் உவமைகள், அளவிற் சிறியனவாய் அமைந்திருப்பினும், ஆழமும் அழகும் ஒருங்கே யுடையனவாய், பயில்வோருக்குப் பெரும் பயனையும், நயனையும் அளிக்கின்றன வென்பதும் நன்கு அறியப்படும்.

முடிவு

# எ. திருவள்ளுவரும் பரிமேலழகரும்

—நூலில்

பரித்த உரையெல்லாம் பரிமே லழகன்
தெரித்த உரையாமோ தெளி.

தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் எழுதிய நூலுக்குப் பிற்காலத்தில் பல பெரியார் உரை எழுதுவாராயினர். தமிழ் மொழியில் அழகொடு திகழும் அரிய நூல்களுக்குப் பல அறிஞர் உரை எழுதினாரேனும், திருக்குறளுக்கு உரையமைந்த தன்மையிலும் ஒரு சிறப்புக் காணப்படுகின்றது. ஏனைய அருந்தமிழ் நூல்கள் ஒவ்வொன்றிற்கும் ஒன்று அல்லது இரண்டு உரையாசிரியர்கள் உரை எழுதினார்கள். ஆனால் திருக்குறள் என்னும் ஒப்புயர்வற்ற

திருக்குறளுக்கு உரைகள் பத்து

நூலுக்கு உரைசெய்த ஆசிரியர்கள் பதின்மர் என்றால், அவ்வொன்றே அந் நூலின் பெருமைக்குப் போதிய சான்றாமன்றோ ? திருக்குறள் மிக ஆழமுடைய நூலாதலால், ஒவ்வோர் உரையாசிரியரும் முன் எழுந்த உரையால் அமைவுறாமல், தம் முறையையும் அமைத்து அந் நூலை அழகு செய்ய ஆர்வம் கொண்டார்கள். அன்றியும், என்றும் அழியாத உண்மைகளைத் தன் அகத்தே கொண்டு திகழும் அருள் நூலுக்கு உரைசெய்து, தம் புகழையும் உலகில் நிலை நிறுத்தவேண்டும் என்னும் உயரிய ஆர்வமும் உரையாசிரியர் மனத்தில் அமைந்திருந்தது என்று கருதுவதும் பொருத்த முடையதாகும். உரையாசிரியர் மனத்தில் நிகழ்ந்த நோக்கம் எத்தன்மைத் தாயினும் பத்து உரையாசிரியர்கள் உரை செய்யும் உயர்வு பெற்ற நூல் தமிழ் மொழியில் இந்நூல் ஒன்றேயாகும்.

இப்பத்து உரைகளில், இக்காலத்தில் பெரிதும் வழங்கி வருவது பரிமேலழகர் உரை ஒன்றே யாம். மற்றைய உரைகளிற் சில, ஏடுகளில் அமைந்து எடுத்தற் கியலாத இடங்களில் மறைந்தும், இன்னும் சில உரைகள் சிதைந்து உருத்தெரியாமல் அழிந்தும், பாழாய்ப் போயின என்று தெரிகின்றது. பரிமேலழகர் உரை யெழுதப்போந்த காலத்தில், திருக்குறளுக்கு வேறு உரைகள் அமைந்திருந்தன வென்பது, அவருரையிலேயே அகச் சான்முக அறியப்படுகின்றது. மற்றைய உரையாசிரியரது கருத்துக்களைச் சில விடங்களில் மறுத்தும், சில விடங்களில் ஒப்புக்கொள்வார்போல அகல வுரையில் அமைத்தும், பரிமேலழகர் எழுதும் பான்மையை நோக்கு மிடத்து, அவர் காலத்திற்கு முன்னரே, சில உரைகள் இருந்திருக்கவேண்டு மென்பது வெளிப்படையாக விளங்கும். ஆனால் பரிமேலழகர் ஓரிடத்திலும், ஏனைய உரையாசிரியர் பெயரைக் குறித்து, அவர் கொண்ட கருத்தைக் கூறினாரல்லர். ஆயினும் ஒன்றுக்கு மேற்பட்ட உரைகள், பரிமேலழகர் காலத்தில் இருந்தன வென்பது, அவர் உரையிலேயே, 'பிறரெல்லாம் இவ்வாறுரைத்தார்' என்று வருகின்ற குறிப்புக்களால் அறியப்படுகின்றது. இவ்வாறு உரை எழுதிய ஆசிரியர்கள் பதின்மர் என்பது பிற்காலத்துப் பழம்பாட்டால் நன்கு தெரிகின்றது.

*பரிமேலழகர் உரைக்கு முன் உரைகள்*

தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
பரிதி பரிமே லழகர்—திருமலையர்
மல்லர் கவிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர்நூற்கு
எல்லை உரைசெய்தார் இவர்.

என்று திருக்குறளுக்கு உரை செய்யும் பெருமை பெற்ற ஆசிரியரது பெயரை எல்லாம் அமைத்து இச்செய்யுள் எழுதப்பட்டுள்ளது. இவ் வுரையாசிரியர்களில் நச்சர் என்பவர் நச்சினார்க்கினியரே என்று சிலர் கருதுகின்றார் கள்.

பத்து உரையாசிரி யர் பெயர்

நச்சினார்க்கினியர் என்னும் பெரும் புலவர், பல அருந்தமிழ் நூல்களுக்கு உரையெழுதிய பேராசிரியராய் விளங்கு கின்றார். தமிழ் மொழியில் மிக விழுமிய நூல்களாய் விளங்குகின்ற கற்றோர் ஏத்தும் கலித்தொகைக்கும், சிந்தைக்கும் செவிக்கும் இனிய சிந்தாமணிக்கும், பழந்தொகை நூலாய பத்துப்பாட்டுக்கும், ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியத்துக்கும், நச்சினார்க்கினியர் உரையில்லாது பொருள் தெரிதல் அரிதாகவே இருக்கின்றது. இத்தகைய பெருமை வாய்ந்த ஆசிரியர் திருக்குறளுக்கும் உரை செய்திருப்பாரானால், அவ்வுரை தமிழகத்தால் போற்றப்படாது பாழாய்ப் போயிற்றென்று எளிதில் எண்ணக் கூடவில்லை.

நச்சர் நச்சினார்க் கினியரோ?

ஏனைய விரிவான உயர் நூல்களுக்கு உரைசெய்த நச்சினார்க்கினியருக்கு, இப் பெரிய நூலுக்கு உரை எழுதக் காலமும் கிடைப்பது அரிதாய் இருந்திருக்கலாம். ஆகவே மேற் கூறிய பாட்டிலுள்ள நச்சர் என்பவர் நச்சினார்க்கினியரே என்று கொள்வதில் பெரிதும் ஐயம் உண்டு.

பரிமேலழகியார் உரை, பெரு நயங்கள் அமைந்து விளங்கும் ஓர் அழகிய உரை யென்பதற்கு, அது மற்றைய உரைகளை யெல்லாம் மங்குமாறு செய்து, தன் நேரிலாத தனி உரையாய், இக்காலத்தில் வழங்கி வருவதே போதிய சான்றாகும். இவ்வுரையின் நலத்தை,

*நூலில் பரித்த உரையெல்லாம் பரிமே லழகன்*
*தெரித்த உரையாமோ தெளி*

என்ற சிறப்புப் பாயிரமே தெளிவாக விளக்குகின்றது. ஆசிரியர் பரிமேலழகரது அறிவின் நுட்பமும் ஆழமும், ஒவ்வொரு குறளுரையிலும் விளங்கித் தோன்றுகின்றது; பரிமேலழகியார் பல கலைப் பயிற்சி யுடையார் என்பது அவர் உரையில் மேற்கோளாக எடுத்தாளுகின்ற நூல்களின் தொகையாலேயே நன்கு அறியப்படும்.

பரிமேலழகர் உரை நயம்

ஆயினும் 'நெல்லிற்கு உமியுண்டு, நீர்க்கு நுரையுண்டு புல்லிதழ் பூவிற்கும் உண்டு' என்றவாறு, சில இடங்களில் பரிமேலழகியார் தமது கருத்துக்கும் கொள்கைக்கும் இணங்க வலிந்தும் நலிந்தும் பொருள் கொண்டுள்ளார் என்பது காய்தல், உவத்தல் இன்றி நடு நிலையில் நின்று ஆராய்வார்க்கு நன்கு விளங்கும். ஆனால் ஒரு சாரார் பரிமேலழகியாரது உரையை ஆசங்கித்தலும் அதனை மறுத்தலும் தவறு என்று கருதுகின்றார்கள். நமது உரையாசிரியர் உயரிய அறிவும், புலமையும் அமையப்பெற்ற பெரியா ரென்பதில் யாதும் ஐயமில்லை. ஆயினும் 'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்பது அறிவு' என்னும் திருவாக்கை ஆதரவாகக் கொண்டு, அவர் செய்த உரையை ஆராய்வது தவறாக மாட்டாதென்பது ஒருதலையாம்.

உரையை ஆராய் தல் தவறாகாது

இனிப் பரிமேலழகர் உரையை ஆராயப் புகுமுன் பொதுவகையாக உரை நடையின் இலக்கணத்தை உணர்ந்து கொள்வது அவசியமாகும். 'பருந்தும் நிழலு

மெனப் பாவும் உரையும்' அமைந்திருக்க வேண்டுமென்பது ஆன்றோர் கருத்தாகும். பருந்து எவ்வழியாகச் செல்கின்றதோ, அவ்வழியே அதனைப் பின்பற்றிச் செல்லும் அதன் நிழலே போல, நூலின் கருத்து எவ்வாறு செல்லுகின்றதோ அவ்வாறே உரையின் கருத்தும் செல்ல வேண்டுமென்பதும், உரையாசிரியர் அறிவால் எத்துணை உயர்ந்தோராயினும், தாம் உரை யெழுதப் புகுந்த நூலின் கருத்துக்கு மாறுபடாத பொருள் உரைத்து உரை யமைக்க வேண்டுமென்பதும் உரை நடையின் அடிப்படையான உண்மைகளாம்.

உரை நடையின் இலக்கணம்

திருவள்ளுவ நாயனார் அறத்துப்பால் என்னும் முதற் பாலை இல்லறம் துறவறம் என்று வகுத்துக்கொண்டு ஆராய்கின்றார். முதற் பகுதியாகிய இல்லறத்தில் இல்வாழ்க்கையின் சிறப்பைப் பொது வகையாகச் சொல்லி, இல்லறமாகிய நல்லறம் இனிது நடைபெறுவதற்கு இன்றியமையாத மனையாளது இயல்பைக் கூறினார். அதன் பின்னர் இல்லறத்தில் உள்ளான் ஒருவன் பெறும் பேறுகளி லெல்லாம் தலையாய் நிற்கும் தகுதி வாய்ந்த மக்களைப் பெறும் பண்பை எடுத்துரைத்தார். இத்தகைய மக்களைப் பற்றிப் பேசுகின்ற அதிகாரத்திற்குப் பெயர் 'புதல்வரைப் பெறுதல்' என்று பரிமேலழகர் உரையுடன் கூடிய நூலில் காணப்படுகின்றது. இத் தலைப் பெயரானது ஆசிரியர் திருவள்ளுவனார் அமைத்த பெயரோ அன்றிப் பிற்காலத்தார் அமைத்த பெயரோவென ஆசங்கித்து ஆராய்வதற்கு இடந் தருகின்றது.

புதல்வரைப்பெறுதல் என்னும் தலைப்பெயர்

நாயனார் குறளில் அமைந்துள்ள அதிகாரங்களின் பெயரை நன்கு ஆராய்ந்தால், அத் தலைப் பெயரில் வழங்கும் சொற்கள் அவ்வதிகாரத்தில் அடங்கிய பாக்களில் பல இடங்களில் பயின்றிருக்கக் காணலாம். ஒவ்வோர் அதிகாரத்திலும் தலைப் பெயராய் அமைந்த சொற்களை அவ்வதிகாரத்தில் பல இடங்களில் அமைத்துச் சொல்லுதல் ஆசிரியரது இயற்கையாகத் தோன்றுகின்றது. உதாரணமாக, அன்புடைமை என்னும் தலைப்பெயர் கொண்ட அதிகாரத்தில் 'அன்பு' என்னும் சொல் பத்துக் குறளிலும் பயின்றிருக்கக் காணலாம். அவ்வாறே 'விருந்தோம்பல்' என்னும் தலைப்பெயர் கொண்ட அதிகாரத்தில் விருந்து என்னும் பதம் பத்துக் குறளிலும் பயின்றுள்ளது. சுருங்கச் சொல்லின் திருக்குறளில் எவ்வதிகாரத்தை எடுத்து ஆராய்ந்தாலும் அவ்வதிகாரத்தின் தலைப் பெயர், பல குறள் பாக்களில் ஆளப்பட்டிருக்கும் தன்மை நன்கு அறியப்படும். ஆனால் 'புதல்வரைப் பெறுதல்' என்னும் அதிகாரத் தலைப்பெயரில் அடங்கிய புதல்வர் எனனும் பதம், அவ்வதிகாரத்தில் ஒரு குறளிலும் அமைந்திருக்கக் காண்கிலோம். புதல்வன் என்ற சொல் அவ்வதிகாரத்தில் காணப்படவே இல்லை. 'மக்கள்' என்னும் பதம் ஏழு குறளிலும் 'மகன்' என்னும் பதம் மற்றைய மூன்று குறளிலும் வழங்கக் காண்கின்றோம்.

தலைப்பெயரை அதிகாரத்தில் வழங்கும் முறை

சொல் ஆட்சி இவ்வாறு அமைந்திருப்ப, அவ்வதிகாரத்தின் பொருளைச் சிறிதாராய்வோம். பிள்ளைகளுடைய பெருமையைப் பேசப் போந்த நாயனார், மக்கள் சிறு கையால் அளாவிய கூழ் அமுதத்தைப் பார்க்கிலும் இனிய

தென்றும், மக்கள் மெய் தீண்டுதல் உடலுக்கு இன்பமென்றும், அவர் குதலைச்சொல் குழலினும் யாழினும் இனிய தென்றும், பெற்றோர் தம் மக்களைக் கண்டும் கேட்டும் பெறுகின்ற இன்பத்தைப் புகழ்ந்து பாராட்டுகின்றார். இவ்வாறு நாயனார் புனைந்துரைத்த நலமெல்லாம், ஆண்மக்களிடமே அமைந்ததாகக் கருதுவதற்குச் சிறிதும் இடமில்லை. ஆண்மக்கள் கையால் அளாவிய கூழ்தான் இனிய தென்றும், ஆண்மக்களைத் தொடுவதே இன்பமென்றும், ஆண்மக்களது மழலைச் சொல்லே குழலினும் யாழினும் இனியதென்றும் பெற்றோர் எவரும் எண்ணவும், சொல்லவும் இசையார்கள். ஆகவே அதிகாரத்தில் அடங்கிய சொல்லையும் பொருளையும் ஆராயுமிடத்து, 'புதல்வரைப் பெறுதல்' என்னும் தலைப்பெயர் பொருத்தமற்றதாகத் தோன்றுகின்றது.

அதிகாரப் பொருள்ஆராய்ச்சி

'புதல்வரைப் பெறுதல்' என்று இப்பொழுது வழங்குகின்ற தலைப்பெயர், அமைவுடைய தன்று என்று கருதுவோமாஞல், பின் ஆசிரியர் அமைத்திருந்த தலைப்பெயர் தான் யாது என்னும் ஆசங்கை நிகழும். திருக்குறளுக்கு உரை செய்த ஆசிரியருள் ஒருவரான மணக்குடவர் உரை கண்ட நூலில், 'மக்கட் பேறு' என்னும் தலைப் பெயருடன் இவ்வதிகாரம் விளங்குகிறது. இத் தலைப் பெயரே ஆசிரியர் அமைத்த பெயராய் இருக்கலாம் என்று எண்ணுவதற்குச் சில குறிப்புக்கள் அகப்படுகின்றன.

மணக்குடவர் தலைப்பெயர் மக்கட்பேறு

நாயனார் எழுதிய நூலில் ஓர் அதிகாரத்திற்கும் பின் அதிகாரத்திற்கும் தொடர்பு காணப்படும். இவ்வாறு தொடர்பு

போன்று விளங்குகின்ற அதிகாரங்களில், சில இடங்களில் ஓர் அதிகாரத்தின் இறுதிக் குறள் பின் அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்து நிற்கும். உதாரணமாகப் பொருட் பாலில் 'வரைவில் மகளிர்' என்னும் பொதுமாதரின் தன்மை கூறுகின்ற அதிகாரத்தின் இறுதிக் குறள்,

> இருமனப் பெண்டிரும் கள்ளும் கவரும்
> திருநீக்கப் பட்டார் தொடர்பு

என்பதாகும். இக்குறளில் தோற்றுவாய் செய்யப்பட்ட முறையிலேயே, அடுத்த அதிகாரங்களில் கள்ளுண்ணாமை, சூது என்னும் பொருள்களை ஆசிரியர் எடுத்துரைக்கின்றார். அதுபோலவே, 'வாழ்க்கைத் துணைநலம்' என்னும் அதிகாரத்தின் இறுதிக் குறள்,

அதிகார அமைப்பு

> மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
> நன்கலன் நன்மக்கட் பேறு.

என்று விளங்குகின்றது. இக்குறளில் நாயனார் பின்வரும் அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்து, அவ் வதிகாரத்தின் தலைப் பெயரையே, இறுதிச் சொற்களாய் அமைத்தார் என்று கருதுவதே இயற்கையாகத் தோன்றுகின்றது. இக்குறளுக்கு விரிவுரை கூறப்போந்த பரிமேலழகரும், 'இவ்வாறு வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது' என்று எழுதியுள்ளார். இவ்வாறு ஆசிரியர் 'மக்கட்பேறு' என்று தோற்றுவாய் செய்தும் மக்கள் என்னும் சொல்லையே அதிகாரத்தில் பல இடங்களில் பயின்றும், அமைத்திருப்ப, புதல்வரைப் பெறுதல்

தோற்றுவாய் முறை

என்னும் தலைப்பெயர் எப்பொழுது, யாரால் குறளில் சேர்க்கப்பட்டதோ அறியோம்.

இவ்வதிகாரத்திற்கு உரையெழுதப் போந்த பரிமேலழகியார், மக்கள் என்று ஆசிரியர் கூறும் இடங்களில் ஆண்மக்கள் என வலிந்து பொருள் கொண்டுள்ளார். மக்கள் என்று நாயனார் கூறும் சொல், பெண்மக்களை ஒழித்து ஆண்மக்களையே குறிக்கும் என்றும், ஒரு பொருளைத் தாமாக அறியும் அறிவு பெண்மக்களுக்கு இல்லை யென்றும், நிலை நாட்டுதற் பொருட்டுப் பரிமேலழகர் பல விடங்களில் வலிந்தும் நலிந்தும் பொருள் கொண்டுள்ளார்.

மக்கள் என்னும் சொல்லுக்கு வலிந்து பொருள் உரைத்தல்

பெறுமவற்றுள் யாம்அறிவ தில்லை அறிவறிந்த
மக்கள்பே றல்ல பிற

என்பது மக்கட் பேறு என்னும் அதிகாரத்தின் முதற்குறளாகும். உலகில் ஒருவன் பெறும் பேறுகளுள் அறிவறிந்த மக்களைப் பெறுதலைப் பார்க்கினும் உயரிய பேறு வேறொன்றில்லை என்பதே இக்குறளின் கருத்தாகும். அறிவுடைய மக்களைப் பெறுதலே உலகில் ஒருவன் பெறும் பேறுகளுள் எல்லாம் தலையாயதாகும். மனை வாழ்க்கையின் இனிமை மக்களாற் பெறப்படும் என்பது உண்மையே யாயினும், அம் மக்கள் அறிவுடையரா யிருப்பினல்லால் அவரை ஓர் அரும் பேறாகக் கொள்ளுதல் பொருந்தாததாகும். ஏனெனில், ‘விலங்கொடு மக்க ளனையர் இலங்கு நூல் கற்றாரோடு ஏனையவர்’ என்னும் குறளில் நாயனார் கல்லாதவரை விலங்குகளோடு ஒப்பவைத்துக் கூறி யிருப்பதை நோக்கு

அறிவுடைய மக்களைப் பெறுதல்

மிடத்து, அறிவு நலம் வாய்ந்த மக்களைப் பெறுதலே பெரும் பேறென்று வியந்துரைக்கும் தன்மை விளங்கித் தோன்றும்.

மனித உடம் பெடுத்தவர்களை மாக்கள் என்றும், மக்கள் என்றும் இருவகையாக வகுத்துக் கூறுவது தமிழ் வழக்கென்பது தொல்காப்பியம் முதலிய நூல்களால் நன்கு தெரிகின்றது.

> மாவும் மாக்களும் ஐயறி வினவே
> மக்கள் தாமே ஆறறி வுயிரே

**மாக்களும் மக்களும்**

என்னும் தோல்காப்பியத்தால், மக்களுக்கும், மாக்களுக்கும் உள்ள வேற்றுமை இனிது விளங்கும். மக்கள் என்னும் சிறப்புப் பெயர்க்கு உரியவர், ஏனைய ஐயறிவோடு, பகுத்தறிவு என்னும் உயரிய அறிவையும் பெற்றவரே யாவர் என்றும், அவ்வறிவு பெறுதார், மாணிடராய்ப் பிறந்தும் மாக்களே யாவர் என்றும், அவர்க்கும் விலங்கினத்துக்கும் அறிவால் வேற்றுமையில்லை என்றும், ஆசிரியர் தொல்காப்பியனுர் கருதுகின்ருர். இக் கருத்தை யமைத்தே நாயனரும், அறிவறிந்த மக்களைப் பெறுதலே பெரும் பேறென்று அருளிச் செய்தார். அறிவறிந்த மக்கள் என்னும் சொற்ருெடருக்குப் பொருள் எழுதப்போந்த

**'அறிவறிந்த மக்கள்' என்பதற்கு வலிந்த உரை**

பரிமேலழகியார், அறிய வேண்டியவற்றை அறிதற்குரிய மக்கள் என்று பொருள்கொண்டு அவ்வாறு அறிதற்குரிய மக்கள் ஆண் மக்களே யென்றும், ஆதலால் மக்கள் என்னும் பொதுப் பெயர் பெண் மக்களை ஒழித்து ஆண் மக்களை மட்டுமே குறித்து நின்ற

தென்றும் அகலவுரை எழுதியுள்ளார். இவ்வகல உரையை ஆராயுங்கால், இரு பெருங் கொள்கைகள் பரிமேலழகரது அடிப்படையான கொள்கைகளாய் அமைந்திருக்கக் காண லாம். அறிவு நூல்களை அறிதற்குரிய மக்கள் ஆண்மக்களே யென்பதும், பெண்களுக்கு அவ்வுரிமை எவ்வாற்றானு மில்லை யென்பதும் உரையாசிரியரது முதற் கொள்கையா கும். அத்தகைய உரிமை ஆண்மக்களுக்கு அறிவைப் பயந்தே விடும் என்பது அவரது மற்றொரு கொள்கையாகும். இவ்விரு கொள்கைகளும், திருக்குறளில் அமைந்திருப்ப தாகக் காட்டக் கருதியே பரிமேலழகர் மேற்கூறியவாறு பொருளுரைப்பா ராயினர்.

இவ்வாறு வலிந்து பொருள் உரைத்த விடத்து, வேறோர் ஆசங்கை உரையாசிரியர் மனத்தில் நிகழ்ந்தது. அறிய வேண்டியவற்றை அறிதற்குரிய மக்கள் என்றால் இனி எதிர்காலத்தில் அறிதற்குரிய மக்கள் என்றல்லவோ பெறப்படுகின்றது. இவ்வாறாயின் 'அறிவு அறிந்த' என்று ஆசிரியர் இறந்த காலத்தாற் கூறியிருக்கின்றனரே ; அஃ தெவ்வாறு பொருந்தும் என்னும் வினாவை நிகழ்த்தி அதற்கு விடையளிப்பார் போன்று,

**கால வழுவமைதி**

அவ்வாறு நாயனார் எதிர்காலத்தை இறந்த காலமாகக் கூறியது தெளிவினால் வந்த கால வழு வமைதியென இலக்கணம் கூறுவாராயினர். காரணமாகிய உரிமை காரியமாகிய அறிவைப் பயந்தே விடுதலின், அத் துணிவுபற்றி 'அறிவறிந்த' என இறந்த காலத்தால் ஆசிரி யர் கூறினார் என்று பரிமேலழகர் காரணம் கூறுகின்றார். விரைவினாலும், மிகுதியினாலும், தெளிவினாலும் ஒரு காலம் மற்றொரு காலமாக நூல் வழக்கிலும், உலக வழக்கிலும்

மாற்றி யுரைக்கப்படு மென்பது இலக்கணத்துக்கு ஒத்த கருத்தே யாகும். ஆனால், உரையாசிரியர் கூறுமாறு, துணிவாகிய காரணம் எடுத்துக்கொண்ட பொருளில் உளதா என்பது ஆராய்தற் குரியதாகும். பரிமேலழகர் கருத்து அமைந்தவாறே, நூல்களைக் கற்று அறியும் உரிமை ஆண்மக்களுக்கு மட்டுமேயுண்டு என்று வைத்துக்கொள்வோம். அவ்வாறு கொள்ளினும், அவ்வுரிமையே ஆண்மக்களுக்கு அறிவைப் பயந்து விடும் என்று கருதுவது ஒரு சிறிதும் பொருத்தமற்றதாகும். நமக்கு உரிமைகள் இருந்தாலும், அவற்றை ஆளும் தன்மை அற்றிருப்போமானால், அவ்வுரிமைகளின் பயனை நாம் ஒரு நாளும் அடையமாட்டோம். அதுபோல, நூல்களைக் கற்று அதன் பயனாகு அறிவினை யடையும் உரிமை ஆண்மக்களுக்கு இருந்தாலும், கற்றலாகிய செயல் நிகழ்ந்தால், அறிவைப் பெறலாமே யல்லாமல், உரிமையே அறிவைப் பயந்துவிடும் என்பது விந்தையாகவே தோன்றுகின்றது. மேலும் பரிமேலழகியார் கூறும் வண்ணம், அறிவதற்கு ஆண்மக்களுக்கு உளதாய உரிமை, அறிவாகிய பயனைத் தந்தே விடும் என்பது துணிபாயின், உலகிலுள்ள ஆண்மக்கள் அனைவரும் நூலறிவு அமையப் பெற்றவராய் இருக்கவேண்டு மன்றோ? உண்மை அவ்வாறில்லை யென்பது காட்சி யளவையாலேயே நன்கு அறியப்படும்.

வழுவமைதியின் காரணம்

உரிமை அறிவைப் பயத்தல்

இஃதிம்மட்டாக, நூல்களைக் கற்று அவற்றின் பொருளை உணரும் உரிமை ஆண்மக்களுக்கு மட்டும் உண்டு என்னும் கொள்கைதான் பரிமேலழகியார் எங்கிருந்து பெற்றார்? நாயனார் தமது நூலில் இத்தகைய வேற்றுமையை எவ்

விடத்தும் செய்ததாகத் தோன்றவில்லை. ஆண், பெண் ஆகிய இருபாலாரும், நூல்களைக் கற்று, அறிவுடையராய் இருத்தல் வேண்டு மென்பதே ஆசிரியர் கருத்தாகக் காணப் படுகின்றது. 'எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும், கண்ணென்ப வாழும் உயிர்க்கு' என்று நாயனார் கூறியவிடத்து, ஆண், பெண் என்ற வேற்றுமை யின்றிச் சிறப்புடைய உயிர்களாய மக்கள் அனைவர்க்கும் எண்ணும் எழுத்தும் இன்றியமையாதன என்பதே கருத் தாக விளங்குகின்றது. இன்னும் 'கண்ணுடைய ரென் பவர் கற்றோர் முகத்திரண்டு புண்ணுடையர் கல்லா தவர்' என்ற திருக்குறளிலும், ஆண், பெண் என்னும் வேற்றுமை யின்றிக் கற்றவர்களே கண்ணுடையவர் என் றும், மற்றவர்கள் முகத்தில் இரண்டு புண்ணுடையவர் என் றும் பொதுவாகவே நாயனார் கூறிப்போந்தார். இன்னும் நம் தமிழ் நாட்டில் அக்காலத்தே, பல நல்லிசைப் புலமை மெல்லியலார்கள், வாழ்ந்து வந்தார்கள் என்பதும், நூலியற்றி னார்கள் என்பதும், தமிழ் நாட்டுப் பழைய சரித்திரத்தால் நன்கு தெரிகின் றது. நாயனார் கருத்தும் நம் தமிழக வழக்கமும் இவ்வாறிருப்ப, அறிதற்கு உரிய மக்கள் ஆண் மக்களே யென்றும், பெண்மக்களுக்கு அவ்வுரிமை எவ் வாற்றானும் கிடையா தென்றும், உரையாசிரியர் கூறுவது ஒரு சிறிதும் பொருந்தாததாகும்.

பெண்களுக்கும் அறிவு அவசியம்

பண்டைத்தமிழ் மாதர்

இன்னும் தாம் கொண்ட கொள்கையை வலியுறுத்தும் பொருட்டே உரையாசிரியர்,

> ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச்
> சான்றோன் எனக்கேட்ட தாய்

என்னும் குறளுக்கு உரையெழுதப் போந்த விடத்து 'கேட்ட தாய் என்னும் சொற்றொடருக்குப் பெண் இயல்பால் தானாக அறியாமையின் கேட்ட தாய்' என்று நாயனார் கூறியதாக அகலவுரை யெழுதுகின்றார்.

*பெண்களுக்கு அறிவில்லையெனப் பரிமேலழகர் கூறும் உரை*

இவ்வாறு உரையாசிரியர் கொண்ட கருத்து, இயற்கைப் பொருள் கொள்ளுதல் என்னும் முறைக்கு முற்றிலும் மாறுபட்ட தென்பதும், தமது கொள்கையைக் குறளில் செறித்து, பரிமேலழகர் வலிந்து பொருள் கொள்கின்றாரென்பதும், நடுநிலையில் நின்று ஆராய்வார்க்கு நன்கு விளங்கும். ஒரு தாய் பிள்ளையைப் பெற்றவுடன் பெரு மகிழ்ச்சி யடைவாள். அப் பிள்ளையைப் பெறுதற் பொருட்டுத் தான் பட்ட பாடெல்லாம், அதனைக் கண்ட பொழுதே ஒளியின் முற்பட்ட இருள் போலப் பறந்துவிடும். ஆனால் இம்மகிழ்ச்சியினும் பெரியதோர் மகிழ்ச்சி பிற்காலத்தில் அத்தாய்க்கு உண்டாகும். தன் மகனைச் சான்றோன் என்றும், உயர்ந்தோன் என்றும் உலகோர் சொல்லக் கேட்ட தாய், பிள்ளையைப் பெற்ற பொழுது அடைந்த மகிழ்ச்சியினும் பெரு மகிழ்ச்சி யடைவாள் என்பது ஆசிரியரது கருத்தாகும். தன் மகனைச் சான்றோன் என்றும் உயர்ந்தோன் என்றும் அறியும் தன்மை தாயிடம் அமைந்திருந்தாலும், அவ்வாறு தன் மகனது உயர்வைத் தானே யறிந்த தாய் இன்புற்றிருந்தாலும், பிறர் தன்மகனைப்பற்றிப் புகழ்ந்து பேசும்பொழுது, பெற்றவள் மனத்தில் பெரு மகிழ்ச்சி யுண்டாகும் என்பதே நாயனார் கருத்தும் உலக இயற்கையுமாம். நாம் அடைந்த ஒரு உயரிய நிலையைக் குறித்து, நாமே அறிந்து மகிழ்வதைப் பார்க்கிலும், பிறர்

*பிள்ளையைப் பெற்றவுடன் தாய் அடையும் இன்பம்*

அதைப்பற்றி நம்மிடம் பேசும்பொழுது, இன்பம் அதிகமாகின்றது. இவ்வுண்மையை உணர்ந்தே, ஒருவனுக்கு இன்பமிகுந்த காலத்து, அவன் உற்றாரும் உறவினரும் அவனிடம் அந் நிகழ்ச்சியைக் குறித்துப் பேசவேண்டுமென்னும் வழக்கம் எல்லா நாடுகளிலும் நிலைபெற்றுள்ளது. துன்பம் பிறரிடம் பேசப்பேசக் குறைதல்போல இன்பம் பிறர் பேசப்பேசப் பெருகும் இயல்புடையதாகும். அதுபோல, தனது மகனது உயர்வு கண்டு உளமகிழ்ந்திருக்கும் தாய், பிறரும் தன் மகனது பெருமையைக் குறித்துப் பேசுங்கால் முன் இயற்கையாகவே யுள்ள இன்பம் பின்னும் தூண்டப்பட்டுப் பெற்ற பொழுதினும் பெரு மகிழ்ச்சியடைவாள் என்னும் கருத்தே 'கேட்ட தாய்' என்னும் சொற்றொடரில் காணப்படுகின்றது. இதற்கு மாறாகப் பேதைமை என்பது மாதர்க் கணிகலமென்றும், பெண்மக்கள் அறியாமை யென்னும் இருளிலேயே ஆழ்ந்து கிடக்க வேண்டுமென்றும், வழங்குகின்ற கொள்கைகள் எல்லாம்,

*பிறர் தன் மகனைப் புகழக் கேட்ட தாய் அடையும் இன்பம்*

பிற்காலத்தில் தமிழ் நாட்டில் புகுந்த கொள்கைகளே யன்றி, ஆசிரியர் திருவள்ளுவருக்கு உடம்பாடான கொள்கைகள் அல்ல வென்பது அவர் நூல் முழுமையும் ஒரு முறை ஓதினும் எளிதில் உணர்வார்கள். பழந் தமிழ் நூல்களுள் ஒன்றாகிய இறையனார் அகப்பொரு ளென்னும் உயரிய நூலுக்கு உரைகண்ட நக்கீரர், 'தலைமகனும், தலைமகளும், ஒத்த அன்பும், ஒத்த குலமும், ஒத்த கல்வியும் உடையராய் இருத்தல் வேண்டும்' என்று கூறுகின்றமையால், பெண் மக்கள் கல்வி கற்றல் தவறென்னும் வழக்கம்

*தமிழ் நாட்டு வழக்கம்*

பண்டைத் தமிழ் வழக்கம் அன்றென்பது வெள்ளிடை மலை போல் விளங்கும்.

சிவப்பிரகாசர் பரிமேலழகர் கருத்தைமறுத்தல்

இவ்வாறு நாயனார் குறளில் வழங்கும் மக்களென்னும் பெயர் பெண் ஒழிந்து நின்றது என்றும், ஆண்மக்களே அறிவுடையா ரென்றும், பெண்மக்கள் அறிவற்றவர் என்றும் பரிமேலழகியார் கொண்ட கருத்தைச் சிவப்பிரகாச முனிவர் என்னும் பெரியார், பெரிய நாயகி யம்மையார் துதியில், 'கற்றார் அறிகுவர், மக்கள் தம் பேறெனக் கட்டுரைத்த சொற்றான் ஒருபெண் ஒழித்த தென்பாரொடு தொல்லுலகில் நற்றாண் மகற்பெறுகென்று ஆசி சொல்பவர் நாண வுனைப் பெற்றான் மலையரையன் குன்றை வாழும் பெரியம்மையே' என்று நயமாகக் கண்டித்துள்ளார். மக்கட் பேறு என்பதனை ஆண்மக்கட் பேறு என்று கொள்வாரும், மங்கல வாழ்த்துக் காலத்தில் ஆண்மக்களைப் பெறுக என்று ஆசி கூறுவாரும் ஒருங்கே நாணும் வண்ணம் மலையரசன் ஓர் பெண்ணாகிய பெரிய நாயகியைப் பெற்றான் என்று கூறும் வாயிலாக, பரிமேலழகியாரது அடிப்படையான கொள்கையை மறுக்கின்றாரென்பது இங்கு அறிதற்குரியதாகும்.

அறத்துப் பாலின் அமைப்பு

திருவள்ளுவ நாயனார், அறம் பொருள் இன்பமாகிய மூன்று பொருள்களின் தன்மையை முறையே கூறத் தொடங்கி, முதலில் அறத்தின் திறம் உரைத்தார். பொதுவாக அறத்தின் இயல்பை அறன்வலியுறுத்தல் என்னும் அதிகாரத்தில் கூறிவிட்டு, பின் அறம் என்பதனை இல்லறம் என்றும் துறவறம் என்றும் இரண்டாக வகுத்து, ஆசிரியர்

அருளிச் செய்தார். அறத்தின் இயல்பை அருளவந்த இடத்து, மனத்தின்கண் மாசின்மையே அறமென்றும், அறநெறியே நன்னெறியாகு மென்றும், அறத்தால் வருவதே இன்பமென்றும், அறமே இம்மை மறுமைப் பயன்களை அளிக்குமென்றும், நாயனர் அருளிச் செய்து, பின் இல்லற வொழுக்கத்தையும் துறவற வொழுக்கத்தையும் வகுத்துரைத்தார்.

ஆசிரியர் செய்த பாகுபாடு இவ்வாறு அமைந்திருப்ப அறத்துப் பாலுக்கு உரையெழுதப் போந்த பரிமேலழகர், அறமாவது மநு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழிதலுமா மென்றும், அவ்வறம் வட நூல்களில் ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படு மென்றும் அவற்றுள் ஒழுக்கமாவது அந்தணர் முதலிய நால் வருணத்தாரும் தத்தமக்கு விதிக்கப்பட்ட நிலைகளினின்றும், அறங்களினின்றும், வழுவாது ஒழுகலா மென்றும், வழக்காவது பொருள் காரணமாக மக்கள் தம்முள் மாறுபட்டு வழக்கிடும் முறையா மென்றும், தண்டமாவது மேற் கூறிய ஒழுக்க நெறியினும், வழக்கு நெறியினும், தவறியவரை நன்னெறியில் நிறுத்தற் பொருட்டு விதிக்கப்படும் தண்டனையா மென்றும், உரையாசிரியர் வடமொழி நூற் பாகுபாடுகளை விரிவாக எடுத்துரைத்தார். இவ்வாறு வகுத்துக் கூறுகின்ற வடநூல் வழக்கைப் பின்பற்றி வள்ளுவர் அறத்துப் பாலை அமைத்தாரென்று கூறும் பொழுது பரிமேலழகர் மனத்திலேயே வெளிப்படையான ஓர் ஆசங்கை நிகழ்ந்தது. நாயனர் நூலில், வடமொழி வழக்கைப் பின்பற்றி அறத்துப்பால் அமைந்திருக்குமேயானல், மேற்

உரையாசிரியர் வட நூல்வழக்குகளை வலிந்து செறித்தல்

கூறிய மூன்று வகைகளில், ஒழுக்கத்தைத் தவிர, மற்றைய வழக்கு தண்டம் என்னும் முறைகளை அறத்துப் பாலில் ஆசிரியர் ஒரு சிறிதும் அமைத்து எழுதாமையால், அவ்விரண்டையும் நீக்கியதற்கு வலிந்து ஒரு காரணம் கூறுவது இன்றியமையாத தாயிற்று. இதனை நன்குணர்ந்த உரையாசிரியர், வலிந்து இடர்ப்பாடுற்று ஒரு காரணம் கூறுகின்றார். வழக்கும் தண்டமும், ஒழுக்கம் போல, மக்களுக்கு உறுதி பயப்பனவல்ல ஆதலாலும், அவை நூலாராய்ச்சியாலன்றி அறிவாலும், தேச இயற்கையாலும் அறியப்படுதலானும், அவற்றை யொழித்துச் சிறப்புடைய ஒழுக்கமே நாயனாரால், அறமென எடுத்துக்கொள்ளப் பட்டது, என்று பரிமேலழகர் கூறுகின்றார். இவ்வாறு, வடநூல் பாகுபாடுகளோடும், ஆசாரங்களோடும், நாயனார் நூலை இணைக்கக் கருதி உரையாசிரியர் இடர்ப்படும் தன்மை நன்கு உணரப்படும்.

வடநூல் முறை வேறு, தமிழ் நூல் முறை வேறு

பொதுவகையாக மக்களுக்குரிய ஒழுக்க நெறியை உணர்த்த எழுந்த பொது மறையில் சாதி வேற்றுமைகளையும், முறைகளையும், கொண்டு சேர்த்து அப் பெருநூலின் பொதுத் தன்மையை மறைத்தல் பெரியதோர் வழுவாமென்று கூறுதல் மிகையாகாது. மநு முதலிய நூல்களில் ஓதப்பெற்ற ஒழுக்க நெறியானது அவையெழுந்த காலத்தில் ஏற்றனவாய்ப் பயனுடையனவா யிருந்தாலும், இக் காலத்தில் அவை கொள்ளத் தக்கன வல்லவென்பது நடுநிலை வழுவாத அறிவுடையார் கருத்தாகும். மநு முதலிய வடமொழி நூல்களைப் பின்பற்றி நாயனார் நூல் செய்திருப்பாராயின், அந் நூல் எக்காலத்திற்கும், எம்மரபினர்க்கும் பொதுவாய ஒரு பெரு நூலாய் அமையாது, ஒரு காலத்திற்கே, ஒரு மரபிற்கே உரிய சிறப்பு நூலாய்

அமைந்து எல்லாராலும் கொள்ளப்படாது தள்ளப்படும் என்பது ஒருதலையாம்.

இன்னும் அறம், பொருள், இன்பம் என முப்பாலாக வகுத்து, நூலமைப்பது வடமொழி வழக்கென்றும், நாயனார் வடமொழி வழக்கைப் பின் பற்றித் தமது நூலை முப்பாலாக வகுத்தமைத்தார் என்றும் பரிமேலழகர் கருதுகின்றார். இஃது உண்மை யன்றென்பது, தமிழ் இயல் நூல்களாலும் அருள் நூல்களாலும் அறுதி யிடப்படுகின்றது.

முப்பாலாக வகுத்தது தமிழ்வழக்கே

> அந்நிலை மருங்கின் அறம்முத லாகிய
> மும்முதற் பொருட்கும் உரிய வென்ப

என்னும் தொல்காப்பிய விதியால், அறம், பொருள், இன்பம் என வகுத்து நூல் செய்தல், தமிழ் நூல் வழக்கென்பது தெளிவாகின்றது. இதற்கு உரை யெழுதப் போந்த நச்சினார்க்கினியரும், 'மும்முதற் பொருள்' எனவே அவற்றது துணைப் பொருளாகிய அறம் நிலையின்மையும், பொருள் நிலையின்மையும், இன்பம் நிலையின்மையும் அடங்கும் என்ப. உலகியற் பொருள் மூன்றனையும் இவையெனக் கூறி, அவற்றை விடுமாறும் கூறவே வீடும் கூறிற்றும். இக் கருத்தானே வள்ளுவ நாயனாரும் முப்பாலாகக் கூறி மெய் யுணர்தலால் 'வீடு பேற்றிற்கு நிமித்தம் கூறினார்' என்று இனிதாக எடுத்துரைத்தார். அன்றியும் தமிழ் மொழியில் அருள் நூல் செய்த பெரியார், அறம், பொருள், இன்பம், வீடென்னும் உறுதிப் பொருள் நான்கும், தென்முகப்

தொல்காப்பிய விதி

பெருமானால் கல்லாலின் கீழிருந்து நற்றவம் கிடந்த நால்வர்க்கு அருளிச்செய்யப்பெற்றன என்று கருதுகிறார்கள். நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தர், தமது தேவாரத்தில்,

அருள் நூற் கருத்து

> அழிந்த சிந்தை அந்தணாளர்க்கு அறம் பொருள்
> மொழிந்த வாயான் முக்கணாதி மேயது முதுகுன்றே

என்றும், மணிவாசகப் பெருமான் திருவாசகத்தில்,

> அருந்தவருக்கு ஆலின்கீழ் அறமுதலா நான்கனையும்
> இருந்தவருக் கருளுமது எனக்கறிய இயம்பேடீ
> அருந்தவருக்கு அறமுதல் நான்கு அன்றருளிச் செய்திலனேல்
> திருந்தவருக் குலகியற்கை தெரியாகாண் சாழலோ

என்றும் அருளுகின்றமையால், அறவாழி அந்தணனாய இறைவன், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்களை, நால்வருக்கு அருளினன் என்பதும், அந்நால்வருமே உலகிற்கு ஒளி நெறி காட்டிய உயர்ந்தோர் என்றும், அருள் நூல்களில் காணப்படுகின்றது. இதனாலேயே ‘அறம் பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயன்’ என்ற கொள்கையும், தமிழ் மொழியில் அடிப்படையாக விளங்குகின்றது.

இவ்வாறு தமிழ் நூல் முறைகளையும், வழக்குகளையும் வடநூல் வழக்கென்று மொழிவது, தமது அறிவின் நுண்மைக்கும், ஆராய்ச்சியின் வன்மைக்கும், அறிகுறியாகும் என்ற பாழாய எண்ணத் துட்பட்டு, பலர் பலவாறு பிதற்றுகின்றார்கள். நம் தமிழ் மொழியில் வழங்குகின்ற தனி நூல்களுக் கெல்லாம், வடமொழியில் முன்னா லுண்டு

என்று முனைந்து மொழிபவர் சிலராவர். தமிழ் மொழியின்கண் அமைந்து விளங்கும் அழகிய பதங்களெல்லாம், ஆரியத்தினின்றும் போந்து தென் மொழியில் திகழ்கின்றன என்று திறம்படக் கூறுவர் சிலராவர். தமிழ் மொழியிலுள்ள சமய நூல்களுக்கும் சாத்திர நூல்களுக்கும், வட மொழியில் முதனூல் தேடி யலைபவர் சிலராவர். செந்தமிழ் மொழியில் செம்மையாய் அமைந்த நூல்களை, வடநூல் வழக்கின் வழியமைந்த நூல்கள் என்றும், வட நூற் பொருளை விரித்துரைக்கும் நூல்கள் என்றும் விளக்கமாக உரைப்பர் ஒரு சாரார். இவ்வாறுரைப்பவர் கருத்தெல்லாம் தமிழ் மொழியைத் தனி மொழி யென்று உணராத தன்மையாலும், தமிழ் மொழியின் சொல்வளம், பொருள் வளம் முதலிய அழகுகளை அறியாத தன்மையாலும், நிகழ்வன வாதலால், அன்னார் கூறும் சொற்களை, விரிவிலா அறிவினார்கள் வெற்றுரை யென்று தள்ளுதலே பொருத்த முடையதாகும். இனி ஒழுக்க முடைமை யென்ற அதிகாரத்திலும் உரையாசிரியர், தம் கருத்தைக் குறளிற் செறித்து, வலிந்து உரை எழுதுகின்றார். மக்களாய்ப் பிறந்தார்க்கு ஒழுக்கமே விழுப்பம் தருமென்றும், நல்லொழுக்கமே நல்லறத்துக்கு வித்தாகுமென்றும், ஒழுக்கமே உயர் குலம் என்றும், ஒழுக்கத்தின் உயர்வைக் கூறுவதற்கு எழுந்த இவ்வதிகாரத்தை மக்களது வருணத்திற்கும் நிலைக்கும் ஓதப்பட்ட ஒழுக்கம் என்று உரையாசிரியர் வலிந்து வருவித்து இடர்ப்படுகின்றார். சாதி, குலம், பிறப்பென்னும் வேற்றுமையை மனத்தில் கொள்ளாது, பொதுவாக மக்களது ஒழுக்கத்தைச் சிறப்பித்துக் கூறவந்த நாயனாரது கருத்தைச் சாதி வேற்றுமைகளோடும், ஆசிரம நெறிக

*சில தவறுய கருத்துக்கள்*

ளோடும் இணக்கிக் கூறுவது மயங்க வைத்தல் என்னும் குற்ற முடையதாம். பிறப்பால் ஒருவன் உயர்ந்தவன் என்றும், மற்ருெருவன் தாழ்ந்தவன் என்றும், கருதுகின்ற தன்மை நாயனாரிடம் இல்லையென்பது திருக்குறளை ஒருமுறை ஓதினார்க்கும் எளிதில் விளங்கும்.

சாதி வேற்றுமையும் தொழில் வேற்றுமையும்

பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யால்

என்பது ஆசிரியரது அடிப்படையான கருத்தாகும். உலகில் ஒழுக்கமுடையவன் உயர்ந்தோனென்றும், ஒழுக்கமற்றவன் தாழ்ந்தோன் என்றும், அருளுடையவன் அந்தணன் என்றும், அருளற்றவன் இழிந்தோன் என்றும், உயர் தொழில் செய்பவன் உயர்ந்தோன் என்றும், இழி தொழில் செய்பவன் இழிந்தோன் என்றும், இவ்வாறு ஒழுக்கத்தாலும் தொழிலாலும் வேற்றுமை, மக்களுக்குள் உண்டேயன்றிப் பிறப்பால் ஏற்றமும் தாழ்வும் இல்லையென்பது நாயனாரது உறுதியான கொள்கையாகும். இத்தகைய பொது நோக்கமே பொருந்தித் திகழும் நாயனார் நூலில், வடமொழி நூல்களில் வழங்கி வருகின்ற சாதி வேற்றுமைகளையும், ஆசாரங்களையும் கொண்டு சேர்ப்பது ஒரு சிறிதும் பொருத்த மற்றதாகும்.

ஒழுக்கமுடைமை என்னும் அதிகாரத்தில் அமைந்த குறட்பாக்களே மேற்கூறிய உண்மைக்குச் சான்ருகும்.

ஒழுக்க முடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்

என்று ஆசிரியர் கூறுவதை நோக்குமிடத்து, ஒழுக்கமுடையாரே உயர்குடிப் பிறந்தாரென்றும், ஒழுக்க மற்ற

வர் இழிந்த பிறப்பினரென்றும் தெளிவாகத் தெரிகின்றது. இனி,

> மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
> பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்

என்ற குறளில் அமைந்திருக்கின்ற பார்ப்பான் என்னும் பதத்திற்கே வேதியன் என்று உரையாசிரியர் பொருள் கொண்டுள்ளார். ஆனால் ஆசிரியர் திருவள்ளுவனார் காலத்தில், அந்தணன் பார்ப்பான் என்ற சொற்களெல்லாம், சாதிப் பெயரை உணர்த்தாமல், காரணப் பெயர்களாகவே விளங்கின என்பது மொழிநூல் ஆராய்ச்சியால் தெளிவாக விளங்கும். அழகிய செந்தண்மை பூண்டு ஒழுகிய அறவோன் அந்தணன் என்று அழைக்கப்பட்டாற் போல, நூல்களைப் பார்த்துப் பரிசீலனை செய்பவர் 'பார்ப்பார்' என்று பெயர் பெற்றார். பிற்காலத்தில் இவ்விரு பதங்களும் ஒரு சாதியைக் குறிக்கும் பெயர்களாய் அமைந்தன. இவ்வுண்மையை மனத்தில் கொண்டு மேற்கூறிய குறளின் பொருளை ஆராய்தல் அவசியமாகும். நூல்களைப் பார்த்துப் பரிசீலனை செய்வான் ஒருவன், தான் கற்ற நூல்களையெல்லாம் மறந்தானாயினும், பின்னும் அவற்றை ஓதி யுணர்ந்து கொள்ளலாகும். ஆனால், ஒருவன் மக்கட் பிறவிக் குரிய உயரிய ஒழுக்கத்தினின்றும் தவறுவானானால், அறவே கெடுவான் என்பது இக்குறளின் கருத்தாகும். அறிவிற்கும் அவ்வறிவாற் பெறப்படும் ஒழுக்கத்திற்கு முள்ள வேற்றுமையை உணர்த்தற் பொருட்டே இக்குறள் எழுந்திருக்கின்றது. நூல்களைக் கற்ற மாந்தர், தாம் கற்ற நூல்களையெல்லாம் மறந்து விட்டாலும் அதனாற் கேடில்லை ; ஆனால்

மணக்குடவர் உரை ஆராய்ச்சி

மக்கள் ஒழுக்கத்தில் வழுவினுல் கெடுவது திண்ணம் என்பதே, நாயனுருடைய கருத்தாகத் தெரிகின்றது. இக்குறளில் கண்ட பிறப்பொழுக்கம் என்பதற்கு மக்கட்பிறப்பிற்கு உரிய ஒழுக்கம் என்று பொருள் கொள்ளுதல் பொருந்துமேயன்றி, சாதி யொழுக்கம் என்று கொள்ளுதல் பொருந்தாததாகும். அவ்வாருயின் 'மக்கட் பிறப்பிற்கு உரிய ஒழுக்கமாவது யாது?' என்னும் ஆசங்கை நிகழும். பிறப்பொழுக்கத்தை நாயனுர் சான்ருண்மை யென்றும் அதிகாரத்தில் அமைத்துக் கூறுகின்ருர்.

> அன்பு நாண் ஒப்புரவு கண்ணேட்டம் வாய்மையொ
> டைந்து சால்பு ஊன்றிய தூண்

என்னும் குறளால், ஒழுக்கத்தின் வகையை நாயனுர் விரித்துரைத்தார். இப் பிறப்பொழுக்கமே மக்கட் பண்பு என்றும் ஆசிரியரால் வழங்கப் பெறுகின்றது. மக்கட் பண்பில்லாதவர் அஃகி அகன்ற அறிவுடையரேனும், அவர் அறிவாற் போந்த பயன் யாது மில்லை யென்பதும், அவர் ஓரறி வுயிராய மரத்தையே ஒப்பாரென்றும் நாயனுர் நன்ருய் எழுதியுள்ளார்.

> அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
> மக்கட்பண்பு இல்லா தவர்

என்ற குறளில் காணப்படுகின்ற மக்கட் பண்பு, பிறப்பொழுக்கமா மென்றும், பிறப்பொழுக்க மில்லாதார், நுண்ணிய நூல் பல கற்ருேராயினும், தமது அறிவின் பயன் இழந்து தாழ்ந்த அறிவுடைய பொருள்களின் தன்மை எய்தலால் கெடும் என்றும் நாயனுர் அருளிய உண்மை மேற்கூறிய இருகுறளையும் ஒருங்குவைத்து ஒத்து நோக்குவார்க்கு இனிது விளங்கும்.

இன்னும் பரிமேலழகர் உரையில் இலக்கண அமைதிக்காக, குறளுக்கு வலிந்து பொருளுரைக்கும் வழக்கமும் ஆங்காங்குக் காணப்படுகின்றது. நூல் எழுதுகின்ற நுண்ணறிவுடையோர், இலக்கண விதிகளுக்கு ஒரு சிறிதும் விலகாமல் நூலெழுதவேண்டு மென்பது உரையாசிரியர் கருத்தாகத் தெரிகின்றது. உண்மையில் உயர்ந்த நூலாசிரியர்கள் பெரும்பாலும் இலக்கண அமைதிக்கேற்ப நூல் செய்தாலும், சில விடங்களில் அவர்கள் இலக்கண விதிகளைக் கடந்தும் எழுதுவதுண்டு.

**இலக்கண அமைதிக்காக வலிந்து பொருள் கொள்ளுதல்**

இதனை ஆங்கில மொழியில் (Poetical License) 'புலவர் உரிமை' என்று வழங்குவார்கள். இதுவுமன்றி, இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்புதலே மரபு என்று கூறுகின்றமையால், நல்லாசிரியர் இயற்றுவதே இலக்கியமென்றும், அதற்குப் பிற்காலத்தில் இலக்கணம் வகுக்கப்படுமென்றும் வழங்குகின்ற மொழிநூல் உண்மை, தமிழ் இலக்கணங்களில் நன்கு விளக்கப்பட்டுள்ளது. விழுமிய நூல் செய்யும் உயரிய புலவரை, மரங்களும் செடிகொடிகளும் நிறைந்த மலைநாட்டில் திரிகின்ற மதயானைகளுக்கு ஒப்பாகக் கூறலாம். மரங்களும் செடி கொடிகளும், நிறைந்த கானகத்தை ஊடுருவிச் செல்லும் ஒரு மதயானையின் வழியில், குறுக்கிடுகின்ற மரக்கிளைகளும், தழைகளும், செடி கொடிகளும் முறிந்து, அறுந்து யானைக்கு வழி செய்வதுபோல, இலக்கணமாகிய தடைகளும் கிளைகளும் அமைந்து பணிந்து ஆசிரியர் நூற் போக்குக்கு இடங்கொடுக்க வேண்டுமேயன்றி, நூலாசிரியர் அவற்றுள் அடங்கி அமைவுறவேண்டிய அவசியம் இல்லை. இவ்வாறு கூறினமையால் திருவள்ளுவர் நூல் இலக்கண வரம்புகடந்த

**நூலாசிரியர் மதயானை ஒப்பர்**

நூல் என்று கருதவேண்டாம். நாயனுர் நூலை ஆராயும் பொழுது, சொல்லின் இலக்கணத்தையே பெரிதாகக் கொள்ளாமல், பொருளைப் பெரிதாகக் கொண்டு உண்மையை அறியவேண்டு மென்பதும், அவ்வாறு இயற் பொருள் கொள்வதற்கு இலக்கணம் இடையூருக இருந்தால், அவ்விலக் கணத்தை விலக்கி இயற் பொருள் காண்பதே ஏற்றதாகும் என்பதும் இதனு லறியப்படுகின்றது. இவ்வாறு பொருள் கொள்ளுதல், மொழிநூல் வல்லார் யாவர்க்கும் ஒப்பமுடிந்த உயரிய முறையாகும். இவ்வுண்மையை மனத்தில் கொண்டு ஆராய்வோமாஞல், பல விடங்களில் பரிமே லழகர், இலக்கண அமைதிக்காக இலக்கியத்தை முறித்து இயற்கைக்கு மாருன பொருள் கொண்டுள்ளார் என்பது அறியப்படும். சொல் வன்மை யென்னும் அதிகாரத்தில் உள்ள,

கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல்

என்னும் குறளுக்கு உரை செய்யப் போந்தவிடத்து, உரை யாசிரியர் இக்குறளைச் சிதைத்துப் பொருள் கொண்டுள் ளார். இக்குறளின் இயற்கைப் பொருளாவது, ஒருவன் பேசும்பொழுது அவனுடைய சொற்கள், கேட்டார் மனத் தைக் கவர்ந்துகொள்ளும் தன்மை வாய்ந்தனவாய், கேளா தவர்களும் இனி எப்பொழுது அவன் பேசக் கேட்போம் என்று விரும்பும் தன்மை வாய்ந்தன வாய் அமைந்திருக்கவேண்டும். அதுவே சொல்வன்மை யெனப்படும் என்பதாம்.

*குறளைச் சிதைத்துப் பொருளுரைத்தல்*

நன்ருய்ப் பேசும் திறமை வாய்ந்த ஒரு புலவன், ஒரு பொருளை எடுத்துப் பேசுங்கால், அங்கு

இருந்து கேட்டோ ரெல்லாரும் அவன் சொல்லில் ஈடுபட்டுப் பிணிப்புற்றிருத்தலும், அவன் பேசக் கேளாதாரும் நன்றாகப் பேசினான் என்று கேட்டார் சொல்லக் கேட்டுத் தாமும் அப்புலவனைக் கேட்க விரும்புவதும் இயற்கையாகும்.

ஆனால் இக்குறளுக்கு உரை வரைந்த பரிமேலழகியார், 'கேட்டார்' என்னும் சொல்லுக்கு ஏற்றுக் கொண்டார் என்று பொருள் கொண்டு, அவ்வாறே 'கேளார்' என்னும் பதத்திற்குப் பகைவர் என்று பொருள் கொண்டு, வலிந்து பொருளுரைத்தார். 'தகையவாய்' என்னும் சொற்றொடருக்குத் 'தகுதியுடையனவாய்' என்று இயற்கைப் பொருள் எழுதாமல் 'தகைமையை அவாவி' என உரையாசிரியர் பொருள் கொண்டார். இவ்வாறு பரிமேலழகர் பொருள் கொண்டதற்குக் காரணத்தையும் அகல வுரையில் அமைத்துள்ளார். 'மொழிவது என்ற ஒருமையானது' தகையவாய் என்ற பன்மையோடு இலக்கணத்தில் இசையாதிருக்கின்றது. ஆனால் இவ்விலக்கண இடர்ப்பாடெல்லாம், ஆசிரியர் இவ்வாறு கூறியது ஒருமை பன்மை மயக்கம் என்று சொல்லவே அடங்கும். நூல் வழக்கினும் உலக வழக்கினும் இத்தகைய ஒருமை பன்மை மயக்கம் உண்டென்பது இலக்கண நூலோர் நன்கு அறிந்த தொன்றாகும்.

ஒருமையிற் பன்மையும் பன்மையின் ஒருமையும்
ஓரிடம் பிறவிடம் தழுவலும் உளவே

என்னும் இலக்கண விதிப்படி, ஒருமைப் பாலில் பன்மைச் சொல்லைத் தழுவிக் கூறுதலும் பன்மைப் பாலில் ஒருமைச் சொல்லைத் தழுவிக் கூறுதலும் வழக்காகும். நாயனார் குறளிலேயே,

இலக்கண அமைதி

இருநோக்கு இவள்உண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய்நோக்கு ஒன்று அந்நோய் மருந்து

என்று வருமிடத்தில், இருநோக்கு என்னும் பன்மை, 'உள்ளது' என்னும் ஒருமைச் சொல்லைக்கொண்டு முடிந்தது பன்மை ஒருமை மயக்கமாகும். இவ்வாறே 'தகைய வாய் மொழிவது சொல்' என்றவிடத்துத் தகையவாய் என்னும் பன்மை, மொழிவது என்னும் ஒருமைச் சொல்லைக் கொண்டது பன்மை ஒருமை மயக்கம் என்று அகல வுரையில் அமைதி கூறிவிட்டு, இயற்பொருள் கொள்ளுதலை உரைநடைக்குப் பொருத்த முடையதாகும்.

ஒருமை பன்மை மயக்கம்

இது போன்று உரையாசிரியர் இலக்கணத்திற்காக வலிந்து பொருள் கொள்ளும் முறையை விளக்குவதற்கு இன்னும் சில சான்றுகள் எடுத்துக் கூறலாமாயினும், அவையாவும் விளக்குகின்ற உண்மை மேற்கூறிய ஒன்றே யாதலால் இன்னும் விரிக்காது இம்மட்டோடு நிறுத்து கின்றேம்.

இனிக் கடைசியாக, காமத்துப்பால் என்னும் மூன்றுவது இயலை ஆசிரியர், தமிழ் அகப்பொருள் இலக்கணத்தைத் தழுவி, களவியல் கற்பியல் என இரண்டாக வகுத்து அழகாக எழுதுகின்ற முறையை, வடமொழி வழக்கு என்று உரையாசிரியர் கூறுவது மிக வியப்பாகவே தோன்று கின்றது. இன்பப் பாலைப் பெரும்பான்மை வடநூல் வழக்குப் பற்றியும், சிறு பான்மை தமிழ் வழக்குப் பற்றியும் நாயனுர் கூறினர்' என்பதே பரிமேலழகர் கருத்தாகும். களவு கற்பு என்னும் மணமுறை தமிழ் நாட்டுத் தொல்வழக்

களவும் கற்பும் தமிழ் வழக்கே

காய் அகப்பொருள் நூல்களில் அடிப்படையாய் விளங்கும் பாகுபாடுகளாய் அமைந்திருப்ப, எக்கருத்துக்கொண்டு உரையாசிரியர் அதனை வடமொழி வழக்கு என்று கூறினரோ அறிகிலோம். இப்பாகுபாடுகளின் தன்மையைப்பற்றி மேலே இன்ப இயலில் எழுதியுள்ளமையால், ஈண்டும் அதனை எடுத்துக் கூறுதல் மிகையாகும்.

ஆகவே இதுகாறும் கூறியவாற்றால், பரிமேலழகியார் உரை, மிக அருமை பெருமை வாய்ந்ததாய், அறிந்தோர் ஏத்தும் அரிய உரையாக விளங்கினும் உரையாசிரியர் சில விடங்களில் தமது கொள்கையை வலிந்து நூலிற் செறித்துக் குறட்பாக்களுக்கு வலிந்தும் நலிந்தும் பொருள் கொண்டுள்ளா ரென்றும், சில விடங்களில் இலக்கண அமைதிக்கேற்ப இலக்கியத்தைச் சிதைத்து இயற்கைக்கு மாறான பொருள் செய்கின்றா ரென்றும், இன்னும் பல விடங்களில் தமிழ் நூல் வழக்குக்களை வடமொழி வழக்கென்று வலிந்து வரைகின்றா ரென்றும்

முடிவு

ஆதலின் பரிமேலழகர் உரையை எல்லா விடங்களிலும் பிரமாணமாகக்கொள்ளுதல் ஏற்புடைத்தன்றென்றும், ஆசிரியர் கருத்தையும் உரையாசிரியர் கருத்தையும் ஒப்ப நோக்கி ஆசிரியர் கருத்தோடு இணங்கிச் செல்கின்ற இடத்தில் உரையாசிரியர் கருத்தை ஒப்புக்கொண்டு, அவை வேறுபடும் இடங்களில் ஆசிரியர் கருத்தைத் தமதறிவாற் கண்டுகொள்ளுதல் நடுநிலையில் நின்று ஆராயும் அறிஞர் கடமை யென்றும், சுருக்கமாக எடுத்துச் சொல்லப்பட்டது.